# நீர்மேல் மலர்ந்த நெருப்பு

வள்ளலார் பற்றிய ஆய்வு நூல்

முனைவர் கி. சுப்பிரமணியன்

ஆதிரை பதிப்பகம்
17, சாய்வீதி, பழனியப்பா நகர்,
இராமநாதபுரம், கோவை - 641 045.

பதிப்புரிமை : ஆசிரியருக்கு

நூலின் தலைப்பு : நீர்மேல் மலர்ந்த நெருப்பு

பொருள் : சமயம்

வெளியீடு : 4

ஆண்டு : 2005

பதிப்பு : முதல்

தாள் : 13.7 வெள்ளை அச்சு

எழுத்து அளவு : 11 புள்ளி

பக்கங்கள் : 242

படிகள் : 1000

ஆசிரியர் : முனைவர் கி. சுப்பிரமணியன்
17, சாய்வீதி, பழனியப்பா நகர்,
இராமநாதபுரம், கோவை - 641 045.
தொலைபேசி : 2314319

வெளியீட்டாளர் : ஆதிரை பதிப்பகம்
17, சாய்வீதி, பழனியப்பா நகர்,
இராமநாதபுரம், கோவை - 641 045.

விலை ரூ. 100/-

அச்சகம் ஏசியன் அச்சகம்,
போத்தனூர், கோவை - 21.
தொலைபேசி : 9363201166

## நன்றி மலர்



யானே தவம்செய்தேன் ஏழ்பிறப்பும் எப்பொழுதும்
யானே தவமுடையேன் எம்பெருமான் – யானே
இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்
பெருந்தமிழன் நல்லேன் பெரிது

– பூதத்தாழ்வார்

சமயநூல்கள் வெளியிடுவதற்கு நூலாசிரியர்களுக்கு உதவி செய்யும் திருமலை – திருப்பதி தேவஸ்தானத் திட்டத்தின் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியாகிறது.

# படையல்



என்தந்தை தாய் எனும் இணைப்பதம்
என்னுறவாம் இயற்பதம்
என் நட்பாம் பதம்
என் குருவெனும் பதம்
என் இட்டதெய்வப் பதம்
எனது குலதெய்வப் பதம்

- அருட்பா





✦ பரம்பொருளின் மலரடிகளுக்கு ✦

# முன்னுரை

*"வரலாற்று ஆசிரியர்கள் எக்காரணத்தாலோ இதுவரையில் இராமலிங்க அடிகளாரின் சீரிய தொண்டுகளைத் தீர ஆராயாமல் புறக்கணித்து வந்துள்ளனர் ..... அவர் சமயத் துறையிலும் சமூகத்துறையிலும் பல புரட்சிகரமான மாறுதல்களைச் செய்தவர்".*

- கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு - மக்களும் பண்பாடும், 488.

வள்ளலார் என்னும் அருளாளர், இராமலிங்க சுவாமிகள் என்று ஒரு துறவியாக அறியப்பட்ட அளவு சீர்திருத்தவாதியாகவும் மறுமலர்ச்சியாளராகவும் முழுமையாக அறியப்படவில்லை. தமிழர்க்கே அவருடைய முழுமையான ஆளுமை வீச்சு தெரியாதபோது, பிற மக்களுக்கு அவரைப் பற்றிய உண்மைச் செய்தி சென்று சேரவில்லை என்பது வியப்பன்று. வரலாற்றுப் பேராசிரியரின் மேற்கண்ட சொற்கள் அந்த ஏக்கத்தைத் தான் காட்டுகின்றன.

வள்ளலார் பற்றிப் பல நூல்கள் எழுதப்பட்டுள்ளன. இந்நூல் அவற்றிலிருந்து சற்று வேறுபட்டது. சமயஞ் சார்ந்த வெள்ளை வேட்டித் துறவியான அவருடைய சன்மார்க்கக் கொள்கைகளை விரித்துரைத்தும் வியந்து போற்றியும் அமைந்த நூல்கள் உண்டு. அவை சரியே : ஆயினும் தமிழகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் சமூகம், சமயம், இலக்கியம் சார்ந்து அவர் ஆற்றிய பணிகள் பற்றிய நூல்கள் வெகு சிலவே. ஒரு புதிய நோக்கில் அவற்றைக் காட்ட இந்நூல் முயல்கிறது.

"வாடிய பயிரைக் கண்டு" வாடிய பயிராக அவர் இருந்ததன் பின்புலம் இங்கு சுட்டப்படுகிறது. மூடநம்பிக்கைகளும் கண்மூடிச் சடங்குகளும் சமூகத்தை இறுக்கப் பிணைத்திருந்தபோது பஞ்சம், வறுமை, பட்டினிச் சாவு ஆகிய கொடுமைகளுக்கு ஏழைகள் ஆளாகியிருந்தபோது -

“கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகை கிடைத்த குளிர்தரு”வாக அவர் வேரூன்றி நின்ற பேருண்மையை இந்நூலுள் காணலாம்.

சமயநிலையில் பிறமதத் தாக்குதல்களிலிருந்து தமிழ் மக்களைக் காக்க நாயன்மாரும் ஆழ்வாரும் ஆற்றிய தொண்டுகளுக்கு இணையானது வள்ளலாரின் பணி. தேவார மூவர் போல ஆயிரக்கணக்கில் பக்திப் பாடல்கள் பாடி, எளிமை வடிவில் அருட்பாவை முன்வைத்து, மக்களிடையே ஒரு மலர்ச்சியை ஊட்டியவர். திருமூலர், அருணகிரிநாதர், தாயுமானவர் என வந்த ஆன்மிக மரபில் முன்னோரின் நல்ல நெறிகளையும் விழுமிய கருத்துக்களையும் மக்களிடையே பரப்பினார். ஆன்மிகப் புத்துயிர்ப்பு அன்று அவரால் நிகழ்ந்தது. ஆங்கில நாகரிகமும் ஆடம்பரமும் வெகுவாகப் பரவிவந்த அந்நாளில் நகர்ப்புறம் விடுத்துச் சிற்றூரில் ஏழைகள் நடுவே அவர் வாழ்ந்து வழிகாட்டியது வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்வாகும். உயிரிரக்கம், அருட்பெருஞ்சோதி, சன்மார்க்கம் என்னும் மும்மணிகள் எப்படி மக்களின் ஊற்றுக்கண்களாக அவரால் படைக்கப்பட்டன என்பதை இந்நூல் காட்டுகிறது.

தமிழிலக்கியச் சோலையில் பூத்தும் ஒரு புதுவகை மலரர்க வள்ளலார் பொலிந்தார். பழகு தமிழில் எளிமையும் இனிமையும் தெளிவும் கொண்ட பாடல்களை மக்கள்முன் வைத்து அவர்களைப் படிக்கவும் பாடவும் செய்தார். “புதுத்தமிழ் தந்தை” என்று சுத்தானந்த பாரதியார் பாராட்டும் வண்ணம் வள்ளலாரின் இலக்கியப் படைப்புகள், மரபுவழிப்பட்ட பிரபந்த புராணங்களிலிருந்து வேறுபட்டுப் பின்வந்த பாரதி போன்றவர்க்கு முன்னோடி இலக்கியங்களாக இருந்தமை இலக்கிய வரலாறு எழுதுவோர் நோக்கத்தக்க செய்தியாகும். இந்நூல் அந்தப் புதுமைப் பணியைச் சுட்டுகிறது.

இசைப் பாடல்கள், அகத்துறைப் பாடல்கள், சித்தநெறி என்று அனுபூதியியலில் அவராற்றிய அருட்பணிகளும் சிறிதல்ல. அறிவு நிலையில் தொடங்கி, அருளாகக் கனிந்து “வானத்தின்மீது மயிலாடக் கண்ட” தூய, இறைநெஞ்சம் வள்ளற்பெருமானின் உயிரிரக்க நெஞ்சம். இந்த மும்மணிகள் தமிழர்க்குப் புதியவை

அல்ல. ஆயினும் வள்ளலாரின் அணுகுமுறை சற்று வேறுபட்டது. அதை இந்த நூல் வெளிப்படுத்துகிறது.

இப்படிப் பல செய்திகள் : தமிழர் ஒவ்வொருவரும் அறிய வேண்டியவை : சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு முனைவர் பட்டத்துக்காக 1983இல் நான் அளித்த ஆய்வேட்டுச் செய்திகள். "வள்ளலார் ஒரு மறுமலர்ச்சியாளர்" என்னும் தலைப்பிலான அந்த ஆய்வேடு, பல்கலைக் கழக அனுமதி பெற்றும் வெளிவராமல் போயிற்று. இறையருள் கூடவில்லை. ஆயினும் அந்தச் செய்திகளோடு புதியன சேர்ந்து வேறு உருவில் இந்த நூல் வெளியாகிறது.

இது, வள்ளற்பெருமான் பற்றி நான் எழுதும் மூன்றாவது நூல். அந்தத் தெய்வ மனிதரைப் பற்றி இன்னும் இன்னும் எவ்வளவோ எழுதலாம். எழுத வேண்டும். ஏழைகளின் கண்ணீரில் இறைவனைக் கண்ட அவர்தான் உண்மைத் துறவி. அந்தக் கண்ணீரைத் துடைக்க அவர்பட்ட துன்பங்களை நூல் முழுதும் காணலாம். எளிய வாழ்வு, உயர்ந்த பண்பாடு, மக்கள் நலம் நாடல், இறைமைநிலை, இவை தமிழனின் பழஞ்செல்வங்கள் : தமிழ்ச் சமுதாயத்தின் அடிப்படைப் பண்புகளும் ஆகும். அவற்றைப் பத்தொன்பதாம் நூற்றாண்டு மக்களுக்கு நினைவூட்டிய சான்றோர் வள்ளல் பெருந்தகை. அந்தச் சான்றாண்மைக்கு இந்நூல் ஒரு சிறு காணிக்கை, அவ்வளவே.

புதியநோக்கில், வள்ளலாரின் வேறுபட்ட சாயைகள் இதனுள் கூறப்பட்டுள்ளமை பலருக்குப் பிடிக்காது போகலாம். வேறு சிலருக்குச் சில புதியனவாக இருக்கும். புரியாதன புரியலாம் ; புரிந்தவை மருட்டலாம். பொறுப்போர் பொறுக்க : ஏற்போர் ஏற்க. உண்மை காணும் தேடல்களில் இது ஒரு முயற்சி என்பது சாலும்.

அருட்பாவில் தோய்ந்த ஒருவர் இந்நூலுக்கு அணிந்துரை எழுதினால் நன்றாக இருக்கும் என்று கருதினேன். திருப்பத்தூர் தூயநெஞ்சக் கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் முனைவர் புரிசை. நடராசன் அவர்களைக் கேட்டேன் : முழுமனதுடன் இசைந்து, நூலை ஆழப்படித்துத் "திறனாய்வு" எனச் சொல்லத்தக்க

அளவில் அணிந்துரை எழுதியுள்ளார். தமிழ் வளர்த்த, தமிழ் வளர்க்கும் குடும்பத்தில் பிறந்து, தமிழோடு தன்னை இணைத்துக் கொண்டவர். வள்ளலாரின் சன்மார்க்க நெறிபற்றி ஆய்வு செய்து முனைவர் பட்டம் பெற்றவர் : தகுதியான ஒருவர் தந்த அணிந்துரை. என் மீது அவர் கொண்ட அன்புக்கு நன்றி உரியதாகும்.

நூல் உருவாகும்போது பிழைதிருத்தி உதவிய நண்பர் திரு.கு.கோவிந்தராசன் அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக அச்சிட்டு உதவிய ஆசியன் அச்சகம் திரு. சக்கரவர்த்தி அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூலுள் புகுமுன் ஒரு சொல் : ஆய்வுக்காக எழுதப்பட்டது. வெறும் அலங்காரத்துக்கு அன்று. கருத்து வலியுறுத்தலுக்காகச் சில இடங்களில் கூறியது கூறல் இருக்கும். தவிர்க்க இயலவில்லை. படிப்போர் பொறுத்தருள்க.

கோவை
26.11.2004

**கி. சுப்பிரமணியன்**
(ஐ.கே.எஸ்.)

# அணிந்துரை

**புரிசை. ச. நடராசன்** எம்.ஏ.,எம்.பில்.,பிஎச்.டி.,
**தமிழ்ப் பேராசிரியர்**
**தூய நெஞ்சக் கல்லூரி,**
**திருப்பத்தூர் (வேலூர் மாவட்டம்).**

வள்ளலார் இறை நம்பிக்கைமிக்க அருளாளர். இதனைக் கருத்தில் கொள்ளாமல் அவரைத் தமிழிலக்கியம் கண்ட "முதல் மறுதளிப்புக் கவிஞர்" என்றும், "சீர்திருத்தவாதி" என்றும், "மூடப்பழக்கத்தின் முடை நாற்றம் போக்க வந்த முற்போக்காளர்" என்றும் காட்டுகின்ற செயல்கள் ஒருபுறம் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. மற்றொரு புறமோ சமுதாயவுணர்வு மிக்கவர் வள்ளலார் என்பதனைக் கருத்தில் இருத்தாது, அவரைப் "பக்திச் சுவை ததும்பும் பாடல்களைப் பாடிய பக்தர்" என்றும் மட்டுமே காண்கின்ற முயற்சிகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன். வடலூர்ப் பெருமகனார் கடவுளை மறுத்துச் சமுதாயப் பணியாற்றியவருமல்லர் ; மானிடச் சமுதாய நலனைத் துறந்து பக்தராக மட்டும் பொலிந்தவருமல்லர். இரு பெருதுறைகளிலும் ஈடுபாடு கொண்டு பாடுபட்ட ஏந்தல் என்பதனை எடுத்து விளக்குகின்ற இனிய ஆய்வு நூலே **"நீர்மேல் மலர்ந்த நெருப்பு"** ஆகும். சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளையவர்களிடம் மிகுந்த பக்தி கொண்ட, பேராசிரியர் முனைவர் கி. சுப்பிரமணியன் அவர்கள், வள்ளலார் ஆற்றிய சமூக, சமய, இலக்கியப் பணிகளைக் குறிப்பிட்ட ஒருவரையறைக்குள் நின்று ஆய்வுசெய்து பெருமதிப்பிற்குரிய நூலாக வாசகர்களின் கைகளில் தவழவிட்டிருக்கின்றார்.

"ஓர்ந்து கண்ணோடாது யார் மாட்டும்
தேர்ந்து செய்வஃதே முறை"

என்று வள்ளுவப் பேராசான் ஆட்சி முறைக்கு இலக்கணம் வகுத்துரைப்பது ஆய்வு முறைக்கும் பொருந்தும். ஓர் ஆய்வாளான் தான் ஆயப்புகுந்த பொருளைப் பற்றி முன்னவர்கள் கூறிய

கருத்துக்களைக் கூர்ந்து கவனித்து, "இவர் சொன்னார்", "அவர் சொன்னார்" என்பதற்காக ஏற்றுக் கொள்வதோ, புறந்தள்ளுவதோ செய்யாமல் நடுவுநிலை நின்று மதிப்பீடு செய்தல் வேண்டும். இத்தகைய நெறிமுறையை இந்நூலாசிரியர் சரியாகப் பின்பற்றுகின்றார்.

வள்ளலார் சாதி எதிர்ப்பு மற்றும் சமூகத் தீமைகளை எந்த விதமான இயக்கமோ கொள்கைப் போரோ நடத்தியதற்குச் சான்றில்லை என்று முனைவர். சுப. அண்ணாமலை அவர்களும், வள்ளலார் வரைந்த கடிதங்களில் முதலியார், ரெட்டியார், நாயக்கர் என்ற சாதிச்சுட்டுச் சொற்கள் இடம் பெறுகின்றன என்று வள்ளலார் பற்றி நூல் எழுதிய திரு. அ.லெ. நடராசன் அவர்களும் குறிப்பிட்டுள்ளமையை எடுத்துக் கொண்டு, நடுவு நிலை தவறாத தமது வாதத்தை ஆசிரியர் இப்படி முன் வைக்கின்றார்.

*"வள்ளலார் தோற்றுவித்த சன்மார்க்க சங்கம் ஒரு பேரியக்கமாக வளராது போயிருக்கலாம். ஆனால், தமிழகத்தில் மட்டுமின்றி இந்தியாவிலும், சங்கமும், சத்திய தருமச் சாலையும் இந்த வகையில் பணியாற்றிய முன்னோடி நிலையங்கள் என்பதை மறுக்க முடியாது. பல்வேறு சாதி மக்களும் ஒருங்கு கூடி ஒருநிலையத்தை அன்று நடத்தினர் என்பது பாராட்டுக்கும், பெருமைக்கும் உரியதல்லவா? அங்கு உயர் சாதி அந்தணர் இருந்தார் ; படையாச்சியும் இருந்தார் ; மஸ்தான் சாய்பும் வந்திருக்கிறார் ; வேதநாயகமும் வந்திருக்கின்றார். நண்பர்களை, முதலியார், செட்டியார் எனப் பின்னொட்டுக்களால் அழைத்தார். இந்தக் காரணம் ஒன்று பற்றி மட்டும் அவருடைய சாதி எதிர்ப்புப் பணியைக் குறைத்து மதிக்கலாகாது. அந்தப் பின்னொட்டுகள் வழக்கில் இருந்தவை. மரபாக வழங்கப்பட்டவை. எளிதில் இன்னார் என அடையாளம் காணப்பயன்பட்டவை. அவற்றை அந்த அளவிற்கே அவர் கைக்கொண்டார். சாதி ஒழிப்பிற்காகப் பெரிதும் போராடிய தந்தை பெரியார், "ஈ.வே. ராமசாமிநாயக்கர்" என அழைக்கப்பட்டார். அதற்காகப் பெரியாரின் பணியைக் குறைத்து மதிப்பிட முடியாது"* (பக். 22,23) என்று எழுதும் நூலாசிரியர், வாதத்தில் உண்மை ஒளிர்வதைக் காண முடிகின்றது. முன்னோர் மொழிந்தவை என்பதற்காக மட்டும் ஏற்றுக் கொள்ளாமல், முறையாகச் சொல்லப்பட்டதா என்று ஆய்ந்து தன்

கருத்தினை வெளிப்படுத்தும் ஆசிரியனின் ஆய்வுப் புலமைக்கு இப்பகுதி நல்லதோர் சான்றாகத் திகழ்கின்றது.

சித்தர்களுக்கும், அனுபூதியாளர்களுக்கும் இடையே வேறுபாடு உண்டா? "சைவ சமய குரவர் நால்வரும் சித்தரே. அவர் அறிவுறுத்தியதும் சித்த மார்க்கமே" என்று திரு.வி.க. கூறுகிறார். நூலாசிரியருக்கு இக்கருத்து உடன்பாடில்லை. எனவே, மறுக்க வேண்டிய சூழல் உருவாகிவிட்டது. சித்தர் வேறானவர், அனுபூதியாளர் வேறானவர், சித்தர்கள் அனைவரும் அனுபூதியாளர்கள். ஆனால், அனுபூதியாளர்கள் அனைவரும் சித்தர்கள் என்று சொல்ல முடியாது என்று மறுத்துரைக்கும் ஆய்வாளர், தமது வாதத்திற்கு அரண் சேர்க்கின்ற வகையில், குருதேவர் தெ.பொ.மீ. அவர்களுடைய கருத்தொன்றினை எடுத்துக்காட்டுகின்றார். திரு.வி.க. அவர்களை மறுக்கும் இந்த அடிப்படையோடு வள்ளலார் ஒரு சித்தர் என்று கருத்தினையும் நிலை நாட்டுகின்றார். சமய குரவர் நால்வரையும் பெரிதும் போற்றிய வள்ளலார், அவர்களைப்போல, வேத ஆகம, சடங்குகள், பழக்கங்களை ஆதரிக்கவில்லை. அவர்களிடமிருந்து இவர் வேறுபடுகிறார். தம் அன்புச்சமயத்தைச் சித்த நெறி நின்று பேணினார் என்பதே சிறப்பு. பக்தி மரபு மட்டுமல்லாது சித்த மரபும் வாழையடி வாழையென அவர் வழி தொடர்ந்தது (ப.209) எனத் தலைக்கட்டுகின்றார் ஆய்வியல் நிறைஞர் கி. சுப்பிரமணியன் அவர்கள். இவ்வாறு இந்நூலாசிரியர், நடுவு நிலை தவறாது தம் ஆய்வுக்கு எடுததுக கொண்ட பொருளை அணுகி மதிப்பீடு செய்வதை நூலின் தொடக்கம் முதலாக நிறைவுரை ஈறாகக் காண முடிகின்றது.

திருமூலரின் சிந்தனைகளோடு ஒத்துப்போகின்ற சிந்தனையாளர் வள்ளலார். மனித தேகத்தை, ஞான தேகமாக ஆக்கிக்கொண்டு மரணமிலாப் பெருவாழ்வு வாழ, வேண்டுமென வலியுறுத்தியவர் அவர். எனவே, அதற்கான முயற்சியில் ஈடுபடுவோர் எவ்வாறு உடலினைப் பாதுகாத்து வரவேண்டும் என்பதனை வள்ளற் பெருமான் மிகவிளக்கமாக எடுத்துரைத்துள்ளார். இந்நூலாசிரியர், திரட்டுப்பாலைப் பருகக் கொடுப்பது போல, "அருந்தல், பொருந்தல்"களில் அளவினைக் கடைப்பிடிப்பது குறித்து எழுதும் விளக்கம் அருமையாக உள்ளது. (ப. 47) வள்ளற் பெருமான் வடித்துக்கொடுத்த அவ்விரு

வார்த்தைகளுக்கான விளக்கத்தைப் படித்தாலே, உடலைப்பாதுகாக்கும் முறையினை வாசகன் அறிந்து, பின்பற்றி நெடுநாள் வாழ முடியும். இத்தகைய தெளிவை நூல் ஏற்படுத்துகின்றது.

"சமரசவேத பாடசாலை" என்றொரு பள்ளி நிறுவ அடிகள் திட்டமிட்டிருந்தார். இப்பள்ளிக்குரிய விதிகளாக நான்கினைக் குறிப்பிடுகின்றார் அவர். (பக்.65) "இது பயிற்சிப் பள்ளியாக இருந்திருக்கலாம் இந்தப் பள்ளிகள் தொடர்ந்து நடத்தப்பெறவில்லை. இவை நின்று போனது தமிழனுடைய தவக்குறைவு. அவை தொடர்ந்திருந்தால் இன்று ஆல்போல் தழைத்து இராமகிருஷ்ண மிஷன்போல உலகெங்கும் பரவியிருக்கும் என்ற ஏக்கம் மேலிடுகிறது" (ப.66) என்ற வரிகள், படிப்போரையும் ஏக்கப் பெருமூச்சு விடச்செய்கின்றன. வடலூர் வள்ளலிடம் ஆசிரியர் கொண்டுள்ள பற்றையும், அப்பெருமகனாருடைய உயரிய கொள்கைகள் உலகெங்கும் பரவவில்லையே, அதன்வாயிலாக, அவர் காண விரும்பிய உலகந்தழுவிய ஆன்ம ஒருமைப்பாட்டுரிமை மலரவில்லையே என்ற ஆதங்கம் வெளிப்படுவதையும் காண்கின்றோம். ஓர் ஆய்வாளனுக்குத் தான் மேற்கொள்ளும் ஆய்வுப் பொருளிடத்தில் இருக்க வேண்டிய ஈடுபாடும், பிடிப்பும் இவ்வாய்வியல் வல்லுநரிடம் நிறைந்து இருப்பதைக் கண்டு மனங்குளிர்கின்றோம்.

முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போல் போற்றுவது மரபு என்பர் இலக்கணநூலார். திருவருட்பிரகாச வள்ளலார், வள்ளுவர், திருஞான சம்பந்தர், திருமூலர், மணிவாசகர், சேக்கிழார் போன்ற அருளாளர்களின் கருத்துகளையும், சொற்களையும், பொன்னெனப் போற்றிப் பொருத்தமான வகையில் எடுத்தியம்பும் சான்றோர் ஆவார். இத்தகைய இலக்கிய மேதை பிற்காலத்தில் தோன்றிய பாரதியார், திரு.வி.க. மறைமலையடிகள் போன்ற செந்தமிழ் வளர்த்த அந்தமில் புகழோர்க்கு முன்னோடியாகவும் விளங்கினார். இக்கருத்தினை ஆசிரியர் நுவலும்பாங்கு இனிமையானது ; எடுப்பானது. "தமிழ்ப்பக்தியுலகில், தமிழிலக்கியத்தொன்மரபில் முன்னோர்க்குப் பின்னாலும், பின்னோர்க்கு முன்னாலும் இடைநின்ற வித்தகர் அவர்" (ப.164) எனக் கூறுவதன் வாயிலாக வாழையடி வாழையென வளரும் திருக்கூட்ட மரபில்

வள்ளலார்க்கு உரிய இடத்தினைப் பொருத்தமாக வரையறை செய்கின்றார் ஆய்வாளர்.

மணிவாசகரைப் பெரிதும் மதித்துப் போற்றியவர் வள்ளலார். "திருவாசகத்திற்குச் செய்யுளால் அமைந்தவிளக்கமே திருவருட்பா" என்று கூறுவார் உரை வேந்தர். ஔவை. சு. துரைசாமிப்பிள்ளையவர்கள். திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்து அருளிய திருக்கோவையாருக்கு ஈடானது திருவருட்பா என்று வ.வே.சு. ஐயர் கண்ணன்பாட்டுக்கு வரைந்த முன்னுரையில் குறிப்பிடுவதை எடுத்துக் காட்டும் நூலாசிரியர் "திருக்கோவையாருக்கு ஈடாக அருட்பாவை அய்யர் போற்றுவது வள்ளலார் பெற்ற வெற்றியைக் காட்டுகிறது" (ப. 201) என்கிறார். அருட்பிரகாச வள்ளலார் என்கின்ற இலக்கிய மேதைக்கு ஆய்வாளர் அணிவிக்கும் மணி மகுடமாக இந்த வைரவரிகள் ஜொலிக்கின்றன.

அறிவுப்பசியாற்றும் ஆய்வு உண்மைகளை வெளிப்படுத்தும் நோக்கில் நூல் எழுதப்பெற்றாலும், உணர்வுக்கு விருந்தாகும் சொல்லோவியமாக அதனைப் படைக்கும் திறம் பெற்றோர் ஒருசிலரே. அச்சிலருள் இந்நூலாசிரியர் தனிச் சிறப்புடைய ஒருவர் என அறுதியிட்டு உரைக்கலாம். படிப்போர் உளத்தைப் பற்றியீர்க்கும் பண்புடைய வாசகங்களை நூல் முழுவதும் கண்டு இன்புறுகின்றோம். இன்பம் பெருக்கிய இடங்கள் சிலவற்றை இவண் எடுத்துக் காட்டுவது பொருத்தமாக அமையும் அல்லவா?

*"கற்றவர்கள், தத்துவவாதிகள் இறையருள் எது என்று ஆராய்ந்து வாதமிட்டுக் கொண்டிருக்கும் போது அனுபூதியாளர்கள் அந்த இறையருளில் மூழ்கித் திளைத்து இன்புற்றுக் கொண்டிருப்பார்கள். அறிவின் சூட்டிலிருந்து விடுதலைபெற்று அருளின் தண்மையில் குளிர்ச்சி பெறுவார்கள். அது அன்பின் கனிவில் கசிந்து பெறுவது. தன்னை இழந்து அன்புநிலையில் தலைவனைப் பெறும் காதல் வேட்கையின் முற்றிய வடிவமும் ஆகும். (ப. 168) "சத்திய தருமச்சாலை வெறும் கட்டிடமல்ல, பசியற்ற, இரப்போரில்லாத, ஈர்ந்தண் மாஞாலம் படைக்க முற்பட்ட நிறுவனம் என்பது மிக இசைவாகும்" (ப. 220)*

*முதலான பகுதிகளைச் சுட்டலாம். இவ்வாறு ஆசிரியர் உயிர்த்துடிப்புள்ள வாசகங்களால் நூலை உருவாக்கியுள்ளார்.*

முனைவர். கி. சுப்பிரமணியன் அவர்கள் வள்ளலார் ஆற்றிய சமூகப் பணிகள், சமயப் பணிகள், இலக்கியப் பணிகள் என்ற பிரிவுகளில் வள்ளற் பெருமானைப் பற்றிய தன் மதிப்பீடுகளை அளவாகவும், அழகாகவும், நிறைவாகவும் எடுத்தியம்புகின்றார். "வள்ளலாரின் இலக்கியப் பணிகள்" என்ற இயலில் அவருடைய இசைப்பாடல்களையும், அகத்துறைப் பாடல்களையும் குறித்த தம்முடைய மதிப்பீட்டினை ஆசிரியர் ஏன் குறிப்பிடாமல் தனியாக அனுபூதியியல் என்ற தலைப்பின் கீழ் ஆய்வு செய்கின்றார் என்று கருத வேண்டியுள்ளது. இறையருள் அனுபவத்தைப் பாமரரும்பெற இசைப்பாடல் உதவும் என்று எண்ணியும், தலைவனும், தலைவியும் தம்முட் கூடிப் பெற்ற இன்பம் இவ்வாறு இருந்ததெனப் பிறர்க்கு எடுத்து நுவலும் தன்மையதன்று என்று முன்னோர் உரைத்த முறைமைக்கு ஏற்பவும், வள்ளலார் பெற்ற இறையனுபவச் செய்திகளை அகத்துறைப் பாடல்கள் வழியாக (அனுபூதியியல்) ஆய்வு செய்துள்ளமை பொருத்தமானதும், ஏற்றுக் கொள்ளக் கூடியதுமாகும். இப்படியொரு தலைப்பின்கீழ் வள்ளற் பெருமானின் இறைத்தொடர்பைச் சொல்ல வேண்டும் என்று தீர்மானித்து வகுத்துரைக்கும் ஆசிரியரின் நுண்மாண் அறிவையும், ஆய்வியல் நெறியையும் மனதாரப் பாராட்டி மகிழலாம்.

மேலும், இசைத் தமிழ் வளர்ச்சிக்கு, வாழ்விற்கு "வள்ளலாரின் கொடை" என்று அவருடைய சிந்து, கண்ணி, கீர்த்தனை, கும்மி முதலான யாப்புகளில் அமைந்த பாடல்களைக் குறிப்பிடலாம். முத்தமிழில் ஒன்றான இசைத் தமிழைச் கட்டிக் காத்த பெருமை திருஞானசம்பந்தருக்கு உண்டு. நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய ஞான சம்பந்தரைச் சைவ உலகின் தலைப்பிள்ளையாகவும், தன்னைக் கடைப்பிள்ளையாகவும் குறிப்பிட்டுச் சொல்லும் வள்ளலார், திருஞானசம்பந்தர் தோற்றுவித்த மரபில், இசைத் தமிழால் இறைவனை ஏத்தியது பொருத்தமானதேயாகும்.

சங்க இலக்கிய மரபையொட்டி, நாயன்மார்களும், ஆழ்வார்களும், நாயக, நாயகி பாவத்தில் இறைவனைப் பாடிய

மரபை வள்ளலார் ஏற்றுப் போற்றும் பாங்கில் அருட்பாவில் ஐந்தில் ஒரு பங்கு அகத்துறைப் பாடல்களாக உள்ளன (ப. 186) என்று கூறும் செய்தியும் அரிய ஆய்வின் கண்டுபிடிப்பாகும். இவ்வண்ணம், அனுபூதியியல் பல சிறப்புக் கூறுகளைக் கொண்ட உயரிய இயலாக அமைந்து நூலுக்கு பெருமை சேர்க்கின்றது. ஆய்வாளரின் வெற்றியைப் பறைசாற்றும் இயல் அது என்று அறுதியிட்டு உரைக்கலாம். ஆக, வடலூர் வள்ளலாரைப் பற்றிய முழுமையான ஆய்வாக **"நீர்மேல் மலர்ந்த நெருப்பு"** ஒளிவிடுகின்றது. வள்ளலார் பற்றிப் பிற சான்றோர், அறிஞர்கள் என்னென்ன கூறினார்கள், கருத்துகொண்டிருந்தனர் என்பதைக் காட்டும் வண்ணம் நூற்றுக்கு மேற்பட்ட தமிழ், ஆங்கில நூல்களைப் பயின்று, கருத்து மகரந்தங்களைத் திரட்டி அருள் தேன் கூடாக இவ்வாய்வினைக் கட்டியிருக்கும் தமிழ்த் தும்பி, அருள்நம்பி, முனைவர். கி. சுப்பிரமணியன் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். வள்ளலார் பற்றிய ஆய்வுக் களஞ்சியத்தில் இந்நூல் கருத்துச்சுரங்கமாக என்றும் நின்று நிலவும் என்பதும் உறுதி. இத்தகைய அருட்கொடையைத் தமிழ் உலகிற்கு வழங்கிய பேராசிரியப் பெருமகனாரை உளமாரப் போற்றிப்பாராட்டுகின்றேன். நல்ல முயற்சி : தமிழ் உலகிற்குக் கிடைத்த கொடை ; வள்ளற் பெருமானின் தோளில் மற்றுமொரு பூமாலை.

**புரிசை. நடராசன்**

திருப்பத்தூர்
29.10.2004

# பொருளடக்கம்

# பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழகம்

வள்ளலார் வாழ்ந்த காலத்துச் சூழலும் அரசியல் நிலையும் சமூக அமைப்பும் அவருடைய படைப்புகளுக்கும் பணிகளுக்கும் பின்புலமாகும். எந்தக் கவிஞரும் தம் காலத்துக் குழந்தையே. நல்ல எழுத்தாளனின் கவிதை, கட்டுரைகளில் அவ்வக்காலத்துக் கருப்பொருள் இருப்பது தெளிவு. வள்ளற்பெருமானின் அருட்பா எழக் காரணமாக இருந்த சூழலை மனதில் இருத்தினால் அதனுடைய தாக்கத்தை முழுதும் உணர முடியும்.

**சமூகம் :**

தமிழகம் ஆங்கிலேயனுக்கு அடிமைப்பட்டுக்கிடந்த நேரம். கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சி 1855 வரை இருந்தது. அதன்பின்னர் மன்னரின் நேரடி ஆட்சி நடந்தது. இந்த இரண்டு காலப்பகுதிகளிலும் வள்ளலார் வாழ்ந்தார். ஆங்கிலேயருக்குக்கீழ் சிற்றரசரும் பாளையக்காரர்களும் சிறுசிறு நிலப்பகுதிகளை ஆண்டு வந்தனர். அவர்களுக்குள் ஒற்றுமையில்லை : மாறாகத் தங்களுக்குள் அடிக்கடி போரிட்டனர். இந்தப் போர்களுக்காக விருப்பமின்றிப் படைவீரர்கள் சேர்க்கப்பட்டனர் : பணமும் வலிந்து பெறப்பட்டது : கடுமையான வரிகள் விதிக்கப்பட்டன. இவற்றுக்கு அஞ்சி மக்கள் தத்தம் ஊர்களைவிட்டு இடம் பெயர்ந்தனர். ஏலத்தில் எடுத்த ஊர்களுக்கு ஆட்சியுரிமை பெற்ற இந்தப் பாளையக்காரர்கள் ஆங்கிலேயருக்கு உரிய கப்பத்தைச் செலுத்தினால் போதும் : பிறகு அவர்கள் என்ன வேண்டுமானாலும் செய்துகொள்ளலாம் என்ற நிலை - கொடுங்கோன்மை தாண்டவமாடியது. ஜான் பிரைட் என்னும் ஆங்கிலேயர் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சியை எளிய மக்கள் மீது தொடுக்கப்பட்ட நூற்றாண்டுக் கொடுமை என்றே குறிப்பிட்டார். (M.S. Vairanapillai, Hindus and Muslims, p 128)

மக்களில் பெரும்பாலோர் உழவராவர். அவர்கள் நிலை இரங்கத்தக்கதாக இருந்தது. அதிகக்குத்தகை, சட்டத்துக்குப் புறம்பாக நிலத்திலிருந்து வெளியேற்றுதல், வரிவசூலிப்போரும் காவலரும் செய்த கொடுமைகள், வறட்சி, பஞ்சம் என்று அவர்கள் பட்ட துன்பம் அளவற்றது. கடன், வட்டி, வட்டிக்கு வட்டி, நிலம் இழத்தல் என்று அவர்கள் பெரிதும் உழன்றனர்.

நிலமற்ற பிற உழைப்பாளிகள் வாழ்வு இன்னும் இரங்கத்தக்கதாயிருந்தது. போதிய உணவோ, உடையோ அவர்களுக்கில்லை. வயிற்றுக்கு உணவில்லாதபோது, வரும் நோய்கள் தீர மருந்துக்கு ஏது வழி? பல பிணிகள் அவர்களை வாட்டின. உணவில்லாமல் பல நாட்கள் வருந்தினர். பட்டினி எல்லை கடந்தபோது வழிதவறிவரும் ஏதேனும் விலங்கின் புலாலைப் பச்சையாகத் தின்றனர். (P.N. Chopra and Others, History of South India, 158) பஞ்சநூற்றாண்டு எனக் கூறப்பட்ட பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஒரிசாவிலிருந்து குமரிமுனை வரை இரண்டு கோடி மக்கள் இறந்தனர் என்றும், மொத்தம் முப்பத்தொரு பஞ்சங்கள் ஏற்பட்டன என்றும் அரசினரே ஒத்துக்கொண்டனர். (மா.பா.குருசாமி, வள்ளலார் ஓர் அறிமுகம், ப : 9)

ஆங்கில ஆட்சியில் கிராமத்தொழில்களும் கைவினைக் கலைகளும் புறக்கணிக்கப்பட்டன. உள்நாட்டு வாணிகம் முடங்கிக் கிடந்தது. வெள்ளையரின் ஏகபோக வாணிகமே ஏற்றம் பெற்றது. சில பிரிவினர் ஆங்கிலேயருக்கு ஊழியர்களாகி அவர்களிடம் உதவிகள் பெற்றும் மேனாட்டுப் பொருள்களைப் பயன்படுத்தியும் ஏற்றம் பெற்று வாழ்ந்தனர். ஏழைகளுக்கும் இவர்களுக்கும் இடையே ஒரு பெரிய இடைவெளியே தோன்றிற்று.

மேற்சொன்ன இந்தக் குறிப்புகளை வள்ளலார் தம் பாடல்களில் பொதிந்து வைத்துள்ளார். கல்லாக் கடையரிடம் சென்று கூலிவேலை கேட்டுப்பட்ட துன்பத்தை

"*கற்பவற்றைக் கல்லாக் கடையவரிடம் சென்று அவர்முன்*
*அற்ப அற்றைக் கூலிக்கு அலையும் அலைப்பு*" (966)

என்று பாடுகிறார். இரந்துண்டு வாழ்ந்தவர் பற்றியும், அவர்களை இழிவுபடுத்தியவர் பற்றியும்,

*"சீரிடுவார் பொருட்செல்வர்க்கு அலாமல்*
*இத்தீனர்கட்கு இங்கு*
*ஆரிடுவார் பிச்சை? ஆயினும் பிச்சன் அசடன் என்றே*
*பேரிடுவார் வம்புப் பேச்சிடுவார்"* (2337)

என்று உருக்கமாகக் கூறுகிறார்.

இவை போன்று பல பாடல்களில் தம் காலச் சூழலை வள்ளலார் குறித்துள்ளார்.

அரசியல் குழப்பத்தால் மக்களுக்குப் போதிய பாதுகாப்பில்லை. வறுமையும் பஞ்சமும் சிலரைத் திருட்டில் ஈடுபட வைத்தன. கொள்ளைகளும் நிகழ்ந்தன. வள்ளலாரிடமும் திருடர்கள் களவு செய்தனர் என்ற அதிர்ச்சியும் வரலாற்றுக் குறிப்பில் உள்ளது. (இராமலிங்க அடிகள் வரலாறு, ப : 448) அறிவின்மை, மூடநம்பிக்கை, வறுமை, நோய், பஞ்சம் இவை வாட்டிய தமிழன் வாழ்ந்த சமூகத்தில் வள்ளலார் பிறந்து வளர்ந்து தம்பணிகளைச் செய்தார் என்பதைப் புரிந்து கொள்ள இந்தக் குறிப்புகள் உதவும். சாதி எதிர்ப்பு, பசி நீக்கும் பேரறம், கண்மூடி வழக்கங்கள் எதிர்ப்பு, தனிமனித ஒழுக்க நெறிகள், உணவு - நல்வாழ்வு, கல்வி - மருத்துவம் என அவராற்றிய செயல்களை இப்பின்புலத்தில் காணல் வேண்டும்.

**சமயம் :**

சமூகத்தில் இருந்தது போலவே சமயவாழ்விலும் குழப்பங்கள் மலிந்து இருந்தன. ஆங்கிலேயரின் மதமாற்ற முயற்சி ஒரு புறம் நடந்து கொண்டிருக்க, அதைத்தடுக்கவோ ஏழை மக்களுக்கு உதவவோ இந்து அமைப்புக்களில் அல்லது தனிமனித நிலையில் எவ்வித முயற்சியும் இருந்ததாகச் சான்று இல்லை. சமயத்தலைவர்கள், மடாதிபதிகள் பெருமதிப்பு பெற்றிருந்த நேரம் அது. மக்களுக்குச் சடங்குகளும், சமயத் தலைவர்களைப் போற்றலும் புண்ணியத்துக்கு வழிகளாக இருந்தன. சமய வாழ்வு பொருளிழந்து போய்விட்டது. கலைஞானப் பயிற்சிக்கெனத் தோன்றிய மடங்களும், மெய்ஞ்ஞானப் பேற்றிற்கு எனத்தோன்றிய கோவில்களும் நிலைமாறின. "அவ்வருள்நெறிக் கழகங்கள் பஞ்சமாபாவங்களுக்கு நிலைக்களனாயின". (திரு.வி.க., சைவத்தின் சமரசம், ப : 73)

இந்தச் சூழலை வள்ளலார் தம் பாடல்களில் குறித்துள்ளார். அன்றைய மக்கள் சாத்திரங்களைப் பெரிதாக மதித்தனர் (3319).

சமயம், மதம் பிள்ளை விளையாட்டு போன்றன. அவற்றை மையப்படுத்தி மக்கள் கலகமிட்டனர். (3677). மக்கள் உண்மையான செந்நெறிகாணாது திகைத்தனர் (3696). சமயக் காழ்ப்பைத் தீக்குழி என்றே வள்ளலார் கூறினார் (5566). சமயம் மதம் எனச் சண்டையிட்டவர்களை வாய்ச்சழக்காளர் என அவர் கடிந்தார் (4653).

மேற்சொன்ன சூழலில் மக்களிடையே இரு பிரிவுகள் தோன்றின. புதிதாகப் பரவிவந்த ஆங்கிலக் கல்விமுறை, பண்பாடு, சமய நோக்குகளுக்கேற்பத் தமிழ்ச் சமூகத்தை மாற்ற வேண்டும் எனப் புதுமையாளர் ஒருபுறம் முனைந்தனர். பழைமையாளர்கள் மரபுகளில் பற்றுடையவர்களாய்ப் பிறிதொருபுறம் பழைமையைப் போற்றினர். இவர்களுக்கிடையே ஒரு பண்பாட்டுப் போராட்டம் நிகழ்ந்தது. புதுமையாளரால் ஒரோவழி பழைமையை விடமுடியவில்லை. அவ்வாறே பழைமையாளர் சில புதிய மாற்றங்களை ஏற்றாக வேண்டியிருந்தது. அறிவியல் சிந்தனை, அரசின் சட்டதிட்டங்கள், சட்ட உரிமைகள் இவற்றைப் பழைமையாளரால் தள்ள முடியவில்லை. அடிப்படை வாழ்வு நெறி, சமயப் பிணைப்பு, பண்பாடு, மரபு ஆகியவற்றின் பெருமையைப் புத்தறிவாளரால் விடமுடியவில்லை.

இந்தப் புத்தறிவாளர்களில் பெரும்பாலோர் ஆங்கிலம் கற்றவர்கள். மேனாட்டுச் சிந்தனை, திறனாய்வு, சிக்கல்களை அணுகுவதில் கையாண்ட அறிவியல் முறைகள், புதிய கோட்பாடுகள் அவர்களுக்கு ஒரு எழுச்சியை ஊட்டின. சமய நம்பிக்கைகளை அவர்கள் திறனாய்வு செய்தனர். சமயத்தைவிடப் பகுத்தறிவு மேலானது. அரசியல் உரிமையைவிடத் தனிமனிதனின் மனச்சான்று மேலானது எனக் கருதும் போக்கு பரவியது. சமயத்தை எளிமைப்படுத்த வேண்டும். சடங்குகளையும், சில நம்பிக்கைகளையும் தகர்க்க வேண்டும் என முன்நின்றனர்.

இந்தக் குழப்ப நிலையில் ஏழைகள் ஆயிரக்கணக்காகக் கிறித்தவராயினர். பாதிரிமார்கள் செய்த உதவிகளும், பிரசாரங்களும் இதற்குக் காரணம். இந்த ஏழை மக்களின் பங்காளராக இருக்க வேண்டிய சமயத்தலைவர்கள் வாளா இருந்தனர். அப்பொழுது தமிழ்நாட்டுப் பழைமையின் பாதுகாவலராக வள்ளலார் தோன்றினார். தமிழரையும் அவர்

சமயத்தையும் பாதுகாக்க வந்த சான்றோர் என வள்ளலாரை மகாகவி பாரதி பாராட்டுகிறார். (பாரதியார் கட்டுரைகள், ப : 479).

மனித வாழ்க்கைக்கும் இறையுணர்விற்கும் தொடர்பில்லாதவாறு ஒரு செயற்கை நிலையும், மனிதர்களுக்கு இடையே சமயத்தின் பெயரால் வேறுபாடுகளும் இருந்தன. இவையிரண்டும் ஒன்றே : வேறல்ல. சமூகத்தில் மேல்நிலையில் இருந்தோர் ஏழைகட்கு உதவியிருக்க வேண்டும் ; அது நடக்கவில்லை. வள்ளலாரோ தம் பணி ஏழைகளுக்கிடையே ஏழைகளுக்கு இருக்குமாறு அமைத்துக் கொண்டார். சமூகத்தின் தீமைகளுக்குச் சமயம் ஒரு காரணமாக இருக்கலாம். எதனால் அவை ஏற்படுகின்றன எனக் கண்டு அவற்றை நீக்க வேண்டும். அதைவிட்டுச் சமயத்தையே அழிக்க முற்பட்டால் சமூகம் சிதைவுறும். இது அவர் கண்ட தெளிவு.

இந்நோக்கில் வள்ளலார் சமய நிலையில் ஆற்றிய பணிகள் இருவகையாகும். சன்மார்க்கம், அருட்பெருஞ்சோதி, உயிரிரக்கம் (ஜீவகாருண்யம்) என உடன்பாட்டு வகையில் அவராற்றிய எழுச்சிப் பணிகள் ஒருபுறம். வைதிக எதிர்ப்பு, நாத்திக எதிர்ப்பு என எதிர்மறை வகையில் அவராற்றிய புரட்சிகள் மறுபுறம்.

புத்தறிவாளர்களில் சிலர் நாத்திகக் கருத்துக்களைப் பரப்ப முற்பட்டனர். அதற்கென ஒரு பத்திரிக்கையும் நடத்தினர். ஆன்மிக எதிர்ப்பும் அதில் இருந்தது. வள்ளலாருக்கு எதிராகவும் அதில் கட்டுரைகள் வந்தன. (ம.பொ. சிவஞானம், வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு, ப : 272). நாத்திகர்களுடைய வன்முறைப் போக்கு வள்ளலாருக்குப் பிடிக்கவில்லை. சமயத்தில் உள்ள இழிவுகளைக் களைய முயலாமல், தொன்று தொட்டு வரும் பெருமைகளைப் பழிப்பது தவறு என எண்ணினார். நாத்திகர்களைக் கடுமையான சொற்களால் சாடினார். “பொய்வந்த வாயும் புலைவந்த செய்கையும் புன்மையெல்லாம் கைவந்த நெஞ்சமும் உடையவர்கள்” (2304) என்பன சில சொற்கள். மனிதன் ஈடேறத் தேவையான தத்துவங்களை முழுமையாகச் சொல்வது இந்து சமயம் மட்டுமே என அவர் குறித்தார் (உரை ப : 333). இது அவருடைய சமயப் பற்றைக் காட்டும். சைவம், வைணவம் உள்ளிட்ட சமயங்களை அவர் சைவ சமயங்கள் என அழைப்பது ஒரு புதுமை. (உரை ப : 333) ஞானநூல்களும் அனுபவ நூல்களும் மக்கள் உய்யும் பொருட்டு

உண்டு பண்ணப்பட்டன. தத்துவங்களைக் கற்பது மக்களுக்குப் பயன்பட மக்களுக்குத் தொண்டு செய்ய என அவர் கருதினார். ஆதலால் தான் நாத்திக எதிர்ப்பைக் காட்டினார். நாத்திகம் பரவினால் தெய்வ நம்பிக்கையோடு சமய உணர்வும் அழிந்துபோகும். அது மிகப்பெரும் இழப்பாக அக்காலத்தில் ஆகியிருக்கும்.

இந்து மதத்தின் குறைகளாகப் பிறசமயத்தார் கூறவும், நாத்திக இயக்கம் பரவவும் காரணமாக இருந்த, காலத்துக் கொவ்வாத சில சமயக் கொள்கைகளை அவரும் கடிந்தார். உருவ வழிபாடு அவருக்கு உடன்பாடே : என்றாலும் ஒளி வழிபாட்டை வலியுறுத்தினார். புராணங்கள், சமயங்கள் பற்றிய அவருடைய புதிய விளக்கங்கள் வைதிகர்க்கு மருட்சியை ஊட்டின. அவர்களுடைய எதிர்ப்பையும் வள்ளலார் எதிர்கொண்டார். வள்ளலார் பாடியது அருட்பா அன்று : மருட்பா என வாதிட்டு ஆறுமுக நாவலர் பல வகைகளிலும் வள்ளலாரை எதிர்த்தார். அன்று தமிழ்ப் புலவர்கள் ஏதேனும் ஒரு மடம் சார்ந்தே வாழ்ந்தனர். எந்த மடத்தையும் சாராத வள்ளலாரை மடாதிபதிகள் மறைமுகமாக எதிர்த்தனர். இந்த மடங்கள் இன்றுவரை சாதி மடங்களாகவே இருந்து வருகின்றன. அவர்கள் வள்ளலாரை வெறுத்தது வியப்பில்லை.

இந்தச் சமயப் பின்னணியை நினைவில் கொண்டே அவருடைய மூன்று உன்னதக் கொள்கைகளான அருட்பெருஞ்சோதி, உயிரிரக்கம், சன்மார்க்கம் ஆகியவற்றைப் புரிந்துகொள்ள வேண்டும். அப்பொழுது தான் அவருடைய பணியின் ஆழம் தெரியும்.

**இலக்கிய நிலை :**

19ஆம் நூற்றாண்டில் அரசியல் சீர்கேடுகள் மலிந்த சமுதாயத்தில் இலக்கிய வளர்ச்சியை எதிர்நோக்க வாய்ப்பு இல்லை. அன்று எழுதப்பட்ட இலக்கியங்கள் பெரும்பாலும் வழிபாட்டுப் பாடல்கள், பிரபந்தங்கள், தலபுராணங்கள் என்பனவாகவே இருந்தன. இவை ஏறக்குறைய ஒரே தன்மையன. திரும்பக்கூறும் கதைகள் மலிந்தவை. சொல்லலங்காரம் மிக்கவை. கருத்து வளர்ச்சி, உண்மையறிவு, கவிதையுணர்ச்சி இவை இவற்றில் இடம் பெறவில்லை என்று வையாபுரிப்பிள்ளை கருதுகிறார். (தமிழின் மறுமலர்ச்சி, ப : 47)

அந்நியராட்சி, பாளையக்காரர்கள் கொடுங்கோன்மை இவற்றால் துன்புற்ற மக்களின், ஏழை எளியரின், இரங்கத்தக்க நிலையை யாரும் பாடுபொருளாகக் கொள்ளவில்லை. அவர்களுடைய அச்சமும், மூடநம்பிக்கையும் அழியுமாறு வழிகாட்ட இலக்கியங்கள் இல்லை. பெருங்கவிஞர்கள் அன்று இருந்தனர். திரிபு, மடக்கு, யமகம், முரசபந்தம் போன்ற சித்திர கவிகள் இவற்றை எழுதித் தம் திறமையை வெளிப்படுத்தினர். அளவிறந்த கற்பனைகள், சொல்லடுக்குகள், கூறியது கூறல் என்று இருந்தனவேயன்றிச் சமுதாயப் பயன்பாட்டு நோக்கில் அவை இல்லை.

இது ஒருபுறம் இருக்க, வேறுவகையில் புலவர் சிலர் தங்கள் எழுத்தாற்றலைச் சமயப் போருக்குப் பயன்படுத்தினர். சமய நூல்கள், சுபக்கம், பரபக்கம் என்று எழுதிக் குவித்தனர். "அத்வைத சண்டமாருதங்கள், தர்க்க கூடாரங்கள், ஆபாச நிரசனங்கள்" என்று அன்றைய சமயப் பூசல்களை வையாபுரிப்பிள்ளை கடிந்தார். (தமிழின் மறுமலர்ச்சி, ப : 124) வள்ளலார் தொடர்பான அருட்பா - மருட்பா போரும் இங்கு எண்ணத்தக்கது. வடமொழி தருக்க, தத்துவ நூல்களை மேற்கோள் காட்டி, வாதங்கள் மலிந்துகிடந்தன. "சமயமதாசாரம் எனச் சண்டையிட்ட கலக வழக்கு" என்றும் பலவாம் "பொய்ந்நூல்கள்" என்றும் வள்ளலாரே சமயப்பூசல் பற்றியும், அந்நூல்கள் பற்றியும் குறித்துள்ளார் (5387). வெறுப்புடன், சினத்துடன் இந்தச் சமயப் பூசல்களை மற்போர், வாட்போர், தண்டுப்போர், உலக்கைப்போர், கல்போர் என்று அவர் எள்ளுகிறார். (குடும்பகோரம், ப : 369-386)

இவைதவிர காமச்சுவை மலிந்த சிற்றிலக்கியங்களும் அன்று தோன்றின. தங்களுக்குப் புரவலராக இருந்த செல்வரின் மனநிறைவுக்காக இப்படித் தூது, உலா, கோவை போன்றவை இயற்றப்பட்டன. இவற்றை "மக்களின் இழிதகையான சுவையுணர்வைக் காட்டும் நூல்கள்" எனத் தெ.பொ.மீ. வருந்திக் கூறுகிறார். (நீங்களும் சுவையுங்கள், ப : 167)

ஆங்கிலம் கற்ற புத்தறிவாளர்களோ தமிழைக் கற்கவும் மறுத்தனர். "மெல்லத் தமிழினிச் சாகும்" என்று கூறிய பேதைகளாக அவர்கள் இருந்தனர் (பாரதி கவிதை, 10). ஆங்கிலம் கற்றால் அரசுப் பதவிகள் கிடைக்கும் என்ற நிலையில் அவர்கள் தமிழைப் புறக்கணித்ததில் வியப்பில்லை.

இந்தச் சூழலில் உரைநடை இலக்கியம் புதிய வடிவம் எடுத்தது. சிறுகதை, கட்டுரை, நாவல்கள் என்ற வகையில் ஆங்கிலக் கல்வியின் விளைவாய் இலக்கியம் ஒரு வீறு கொண்டு மலர்ந்தது. சிறுசிறு நூல்கள், துண்டு அறிக்கைகள் விளம்பரத்தாள்கள், சிற்றிதழ்கள், ஆய்வுக் கட்டுரைகள் எனப்பல உருவங்களில் உரைநடை மிளிர்ந்தது.

இதுவே அன்றைய இலக்கிய நிலை. இந்தப் பின்னணியில் வள்ளலாரின் அருட்பா, உரைநடை என இரண்டும் எவ்வாறு புதிய எழுச்சியை, ஆர்வத்தை ஏழைத்தமிழனுக்கு ஊட்டின என்பதை இந்நூல் காட்டுகிறது.

# சமூகப் பணிகள்

## 1. சாதி எதிர்ப்பு

*சாதியும் மதமும் சமயமும் காணா*
*ஆதி அனாதியாம் அருட்பெருஞ் சோதி*
*சாதியும் மதமும் சமயமும் பொய்என*
*ஆதியில் உணர்த்திய அருட்பெருஞ் சோதி - அகவல்.*

சாதிக் கொடுமைகள் அதிகமாக இருந்த நாளில் வள்ளலார் வாழ்ந்தார். அந்தக் கொடுமைகளை அவர் நேரில் கண்டிருக்கக் கூடும். தலைவிரித்தாடிய தீண்டாமையைக் கண்டு அவர் மனம் வாடினார். தம்மால் முடிந்தவரை சாதிவெறியை எதிர்த்துப் பலவகைகளில் பணிபுரிந்தார்.

சாதி இயற்கைக்கு மாறானது : செயற்கையானது ; தொழில் ஒழுக்கத்திற்காக மக்களால் ஏற்படுத்தப்பட்டது என்பது அவரது கருத்து (உரை, ப : 313) "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமை யான்" என்ற குறளின் கருத்தைத் தழுவியது வள்ளலார் சொற்கள்.

*"தத்துவ ஒழுக்கம் பற்றிச் சமயங்கள் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றன. தொழில் ஒழுக்கம் பற்றி ஜாதிகள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. தயவை விருத்தி செய்வதற்குத் தடையாயிருப்பவை சமய ஏற்பாடு, ஜாதி ஏற்பாடு முதலிய கட்டுப்பாட்டு ஆசாரங்கள் ..... இவை ஒழிந்து சுத்தசிவ சன்மார்க்க சத்தியஞான ஆசாரத்தை வழங்கிப் பொதுநோக்கம் வந்தால் ..... காருண்யம் விருத்தியாகிக் கடவுளைப் பெற்று"* - (உரை, ப : 313) என அவர் தொடர்ந்து கூறுகிறார். சாதிகுலங்கள் ஒழிந்தாலன்றிப் பொதுநோக்கம் தோன்றாது. மனித வாழ்விற்கு அடிப்படை உணர்வு கருணை. அது வளரத் தடையாகச் சாதியிருக்கிறது.

கருணையின்றிக் கடவுள் இல்லை. எனில், கடவுள் அருள் பெறச் சாதி தடையாகும் என்ற கருத்துக்களை மேலுள்ள அவர் சொற்கள் காட்டுகின்றன.

கேடுதரும் சாதிகளையும் அவை கூறும் பொய்ச் சாத்திரங்களையும் பிள்ளை விளையாட்டு என விலக்க வேண்டும். சாதி வேற்றுமை ஒரு மயக்கம். அறிவை மயக்கும் சாதியால் உலகத்து நன்மைகள் அழிகின்றன. விலங்கினத்தில் பிறப்பினால் வேறுபாடில்லை. ஆறறிவு படைத்த மனிதனே பற்பல பிறப்பு வேறுபாடுகள் கொண்டுள்ளான். இது சங்கற்ப விகற்பமாகும். கீழ்வரும் பாடல் வரிகள் அவருடைய இந்த எண்ண ஓட்டங்களை எதிரொலிக்கின்றன.

*"நால்வருணம் ஆசிரமம் ஆசாரம் முதலா*
*நவின்றகலைச் சரிதம்எலாம் பிள்ளைவிளை*
*யாட்டே"* (4174)
*"மதித்த சமய மதவழக்கெல்லா மாய்ந்தது*
*வருணாச்சிரம் எனும் மயக்கமும் சாய்ந்தது"* (4503)
*"சாதிமதம் சமயமுதல் சங்கற்ப விகற்பம் எலாம்*
*தவிர்ந்துபோக"* (4508)
ஆதி நடம் புரிகின்றான் அருட்சோதி.

சன்மார்க்கத்தின் முதன்மைக் குறிக்கோள் ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை ஆகும். அது நிறைவேறத் தடையா யிருப்பது சாதியுணர்வு. பிற உயிர்களைத் தன்னுயிர்போல் காண்பதை அது தடுக்கிறது. பசிக் கொடுமையால் வருந்தி இரந்துண்டு வாழ்வோனுக்குச் சாதிகேட்டே உணவிட்டனர். இப்படிச் செய்யக்கூடாது என அவர் கூறினார் (உரை, ப : 70). அறநோக்குடன் அன்னசத்திரம் கட்டிய உயர்சாதியினர் கீழ்ச்சாதியினரை அங்கு ஏற்காத நாளில் துணிவுடன் இப்படிக் கூறினார். "பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும் .... எந்தச் சாதியாராயினும் ...... விசாரிக்காமல் பசியை நிவர்த்தி செய்வதே சீவகாருண்யம்" என்பன அவர் சொற்கள்.

*"ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்"* (249)
என்ற திருமந்திரத் தொடர் நினைவுக்கு வருகிறது. முன்னோர் மொழிகளைப் பொன்னே போல அவர் போற்றியதற்கு இது நல்ல சான்று. அற்றார் அழிபசி தீர்த்தலைக் குறளும் வலியுறுத்துகிறது.

அந்த அழிபசி நீக்கத்துக்குச் சாதி தடையாக வேண்டாம் என வள்ளலார் கருதினார்.

### ஜீவ ஒழுக்கம் :

மனிதன் கைக்கொள்ள வேண்டியவை என நான்கு ஒழுக்கங்களை வள்ளற்பெருமான் கூறியுள்ளார். இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் என்பன அவை (உரை, ப : 309). அவற்றுள் ஜீவ ஒழுக்கத்துக்குப் பொருள் கூறும்போது "எல்லவரும் தம்மவராய்ச் சமத்தில் கொள்வது" எனக் குறித்தார். சாதி, சமயம், நாடு, குலம், ஆண், பெண், உயர்வு, தாழ்வு எனும் வேறுபாடுகளைத் தாண்டி எல்லோரையும் தம்மவராகக் காண்பது என உயிர் ஒழுக்கத்துக்கு வடிவம் தருகிறார். அந்தப் பொதுமைநோக்கு வரின் தானாகவே ஆன்மநேய உரிமையும் தோன்றும். இருத்தலும் வாழ்தலும் விலங்கிற்கும் உரியன. எல்லாரையும் ஒன்றாகக் காண்பது மனிதனுக்குரியது. உயிரின் ஒழுக்கமும் அதுவே. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" (புறம் : 192) என்னும் உணர்வு கைவரப் பெற்றவன் யாரையும் வெறுக்கமாட்டான். இந்தச் சிந்தனைகளை வள்ளலார் பாடல்களில் உணரலாம்.

இறைவனை வழிபடுவதில் எவ்வித வேற்றுமையும் இருக்கக்கூடாது. சாதி, சமயம், மதம் என்ற "கட்டுகள்" மனிதன் தனக்குத்தானே போட்டுக் கொண்டவை. "ஆவுரித்துத் தின்கின்ற புலையனேனும் கங்கை நீர் சடைகரந்தார்க்கு அன்பராக முடியும்" என்று அப்பர் பாடுகிறார் (தேவாரம், VI : 95-10). அப்படி மரபு வழிப்பட்ட இந்த மண்ணில் சாதி எப்படி நுழைந்து பேயாட்டம் ஆடுகிறது?

> *"சாதிமதம் சமயம் எனும் சங்கடம் விட்டறியேன்"* (3319)
>
> *"இச்சாதி சமய விகற்பங்கள் எலாம் தவிர்த்தே*
> *எவ்வுலகும் சன்மார்க்கப் பொதுவடைதல்*
> *வேண்டும்"* (4086)
>
> *"கிழக்கு வெளுத்தது ............ எனது அகத்தே*
> *சழக்கு வெளுத்தது சாதி ஆச்சிரம ஆசாரம்*
> *சமயமத ஆசாரம் எனச் சண்டையிட்ட கலக*
> *வழக்கு வெளுத்தது"* (5387)

என்ற பாடல்களில் சாதியைச் சங்கடம், விகற்பம், சழக்கு என்று கடுமையாகவே குறித்துள்ளார்.

*"சாதிகுலம் என்றும் சமயமதம் என்றும்*
*நீதியியல் ஆசிரம நீட்டென்றும் - ஓதுகின்ற*
*பேயாட்டம்"* (5508)

என அதைப் பேய்க்கு இணையாக்கி அது சமுதாயத்தைச் சீரழிக்கும் தன்மைகண்டு கொதித்தார். சன்மார்க்கப் பொதுவுலகம் காணச் சாதி ஒழிய வேண்டும் என்பது அவர் கண்ட முடிவு.

இறைவன் அருளாளன் : அளவில் சோதி வடிவினன். அந்த அருட்பெருஞ்சோதியைச் சாதியெனும் எல்லைக்குள் நின்று காண முடியாது. அளவிறந்த ஒளி வெள்ளம் இருளில் அடங்குமா? உயிர்களை நன்னெறியில் நிறுத்தி வாழவைப்பதும் மகிழ்விப்பதும் எதுவோ அது மெய். சாதியோ மனிதனைத் தாழ்த்துகிறது. தீ நெறிப்படுத்துகிறது. துன்பத்துக் குள்ளாக்குகிறது. ஆதலால் அது பொய். சாதியும் குலமும் உடல் பற்றியன. மனிதன் இவற்றைப் புறத்தில் ஏற்படுத்திக் கொண்டான். உடல் மறையும் போது இவையும் மறைந்துபோகும். இதை நுட்பமாகப் பெருமான்

*"எம்குலம் எம்மினம் என்பது தொண்ணூற்றாறு*
*அங்குலம் என்றருள் அருட்பெருஞ்சோதி"*

என அகவலில் பாடுகிறார். எட்டடிக்குள் (96 அங்குலம்) எல்லாம் போய்விடும்.

சாதிப்பற்று மானிடப்பயிர் செழித்து வளரத் தடையாக இருக்கின்ற களையாகும். அதை வேரோடு களைய வேண்டும். அப்படிக் களைந்தால் "இறையருள் பெறுதல்" என்னும் மானிட வேண்டுதல் நிறைவேறும். இதோ அவர் பாட்டு :

*"சாதிசமயச் சழக்கெலாம் அற்றது*
*சன்மார்க்க ஞானசபை நிலைபெற்றது*
*மேதினியில் சாகாத வித்தையைக் கற்றது*
*மெய்யருள்சோதி என்னுள்ளத்தில் உற்றது"*. (4913)

மானிடரை இறையருள் பெறவைக்கும் வழியைக் காட்டவே வள்ளலார் வாழ்ந்தார். அப்படிப் பெறவைக்கும் பாட்டே அருட்பா. "அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த" உலகத்த வரை மண்ணிலே திருத்தி வாழவைப்பது அவர் பணியாக இருந்தது. அதனுடைய முதல்படி இந்தச் சாதி எதிர்ப்பு உணர்வே.

*"குலத்தே சமயக்குழியிடத்தே விழுந்து*
*இவ்வுலகம் குமையாதே*
*நலத்தே சுத்த சன்மார்க்கம் நாட்டாநின்றேன்"* (5484)

என்பது அவர் பெருமிதம்.

ஆனால் பல நூற்றாண்டுகளாகப் புரையோடிக் கிடக்கும் பெரும்புண் சாதி. அவ்வளவு விரைவில் அதை அழிக்க முடியுமா? சமூகத்தை இறுகப்பற்றி நெரித்துக்கொண்டிருக்கும் சாதித் தளையைத் தகர்ப்பது எளிதன்று என்பது அவருக்கும் தெரியும். அதனால் அந்நோக்கம் நிறைவுற இறையருள் கேட்டுப் பாடினார். தம் உடன்வருமாறு மக்களையும் அழைத்தார். "புனிதகுலம் பெறுமாறு புகலல்" (5566-5575) எனும் பதிகம் மனுக்குலத்தைத் தம் இலட்சிய வேட்கைக்கு அழைத்த அவருடைய உயிருருக்கப் பதிகமாகும். இன்று வரை அந்தப் பத்துப் பாடல்களும் மெய்ம்மையுடையனவாகவே உள்ளன. சாதி மதச் சண்டைகளில் அலைப்புண்ட மக்களை நோக்கி,

"*வரையில் உயர்குலம் என்றும் தாழ்குலம் என்றும்*
*வகுக்கின்றீர் இருகுலமும் மாண்டிடக் காண்கின்றீர்*
*புரையுறும் நும்குலங்கள் எலாம் புழுக்குலம்*" (5574)

என்று சாடுகிறார். சாதிசமயச் சழக்கை விட்டதால் அருட்சோதியைப் பெற்று அவர் மகிழ்ந்தார்.

இந்த வகையில் அன்று அவர் செய்தது பெரும்புரட்சி. வெறும் வாய்ச்சொற்களுடன் நின்றுவிடாமல், இந்தச் சாதி எதிர்ப்புப் போராட்டத்துக்குச் செயல்வடிவமும் கொடுத்தார். அவர் நிறுவிய சத்திய தருமச்சாலையில் ஆயிரக் கணக்கில் மக்கள் எவ்வித வேறுபாடுமின்றி உடனுண்டனர். சாதிச் சிறுமைகள் நீங்கி எல்லாரும் பசியாறினர். இது அந்நாளில் எளிய செயலன்று.

"இருட்சாதித் தத்துவங்கள் எல்லாம் போயினவால்
எங்கணும் பேரொளிமயமாய் இருந்தன" (5810)

என்று அவர் பெருமிதத்தோடு பாடக் காரணமுண்டு. ஏழைகள் நூற்றுக்கணக்கில் அவரைச் சுற்றி வாழ்ந்ததும், உடனுணவுண்டதும் பொய்யல்ல ; வரலாறு. 140 ஆண்டுகளுக்கு முன்னர் அவர் இதைச் சாதித்தது அருஞ்செயல். நிலை இவ்வாறிருக்க, வள்ளலார் பற்றி ஆய்வு செய்த சுப.அண்ணாமலையும் நூல் எழுதிய அ.லெ.நடராஜனும் சில கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர்.

"*அவரோ அவரால் நிறுவப்பட்ட சமரச சுத்த சன்மார்க்க சங்கமோ சாதி எதிர்ப்பு மற்றும் பிற சமூகத் தீமைகளை எதிர்த்து எந்தவிதமான இயக்கமோ கொள்கைப்போரோ நடத்தியதற்குச் சான்றில்லை.*"- **சுப. அண்ணாமலை. ப : 40**

*"அன்றைய சமூகத்தில் நிலவிய சாதி ஆசார குலாசாரப் பிடிப்புகளிலிருந்து அடிகளாரும் தப்ப முடியவில்லை. சாதிப்பிடிப்பிலிருந்தும் சமயப் பிடிப்பிலிருந்தும் அடிகள் விடுபட ஆசைப் பட்டிருக்கிறார்கள் : முயன் றிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் விருப்பம் நிறைவேறவில்லை: முயற்சி வெற்றிபெறவில்லை."-* **அ.லெ.நடராசன் ப : 185**

*"தாம் எழுதிய கடிதங்களில் முதலியார், ரெட்டியார், நாயக்கர் என்ற சாதிச் சுட்டுச் சொற்களைத் தவறாது அடிகள் பயன்படுத்தியிருக்கிறார்கள்."-* **அ.லெ.நடராசன் ப : 259**

இந்தக் கருத்துக்கள் சற்றுக் கடுமையானவை. வள்ளலாரும் சாதி எல்லையைத் தாண்டியவரல்ல. சாதி எதிர்ப்பு இயக்கம் அவர் நடத்தவில்லை என்ற தொனி இவற்றுள் கேட்கிறது.

வள்ளலார் தோற்றுவித்த சன்மார்க்க சங்கம் ஒரு பேரியக்கமாக வளராது போயிருக்கலாம். ஆனால் தமிழகத்தில் மட்டுமின்றி இந்தியாவிலும் சங்கமும் சத்திய தருமச் சாலையும் இந்த வகையில் பணியாற்றிய முன்னோடி நிலையங்கள் என்பதை மறுக்க முடியாது. முறையான அமைப்பு, தலைவர் உள்ளிட்ட பதவிகள், கிளைகள் என்று இன்றைய வகையில் சங்கம் பரவவில்லை. எனினும் பல்வேறு சாதி மக்களும் ஒருங்குகூடி ஒரு நிலையத்தை அன்று நடத்தினர் என்பது பாராட்டுக்கும் பெருமைக்கும் உரியதல்லவா? அங்கு உயர்சாதி அந்தணர் இருந்தார்: படையாச்சியும் இருந்தார் : மஸ்தான் சாய்பும் வந்திருக்கிறார் : வேதநாயகமும் வந்திருக்கிறார்.

தொடக்கத்தில் வள்ளலார் தாம் எழுதிய கடிதங்களில் "சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை" என்று கையெழுத்திட்டார். நண்பர்களை முதலியார், செட்டியார் எனப் பின்னொட்டுக்களால் அழைத்தார். இந்தக் காரணம் ஒன்று பற்றி மட்டும் அவருடைய சாதி எதிர்ப்புப் பணியைக் குறைத்து மதிக்கலாகாது. அந்தப் பின்னொட்டுக்கள் வழக்கில் இருந்தவை. மரபாக வழங்கப்பட்டவை. எளிதில் இன்னார் என அடையாளம் காணப் பயன்பட்டவை. அவற்றை அந்த அளவிற்கே அவர் கைக்கொண்டார். சாதி ஒழிப்பிற்காகப் பெரிதும் போராடிய

தந்தை பெரியார், "ஈ.வே.ராமசாமி நாய்க்கர்" என அழைக்கப்பட்டார். அதற்காகப் பெரியாரின் பணியைக் குறைத்து மதிப்பிட முடியாது.

வள்ளற்பெருமான் பலருடன் பெற்றிருந்த இணக்கமான நட்பை அவர் எழுதிய கடிதங்கள் காட்டுகின்றன. சாதி எல்லைக்குள் அவர் அடங்கியிருந்தால் அவரைப் பலரும் போற்றியிரார். தீண்டாமை மிக்கிருந்த அந்நாளில் மக்களை ஒன்றுதிரட்டி வேறுபாடுகளைக்களைய அவர் முயற்சி செய்ததை எளிதாகத் தள்ளிவிட முடியாது. ஏழை எளியவரைச் சாதி வேறுபாடின்றி ஒன்று சேர்ப்பது அருஞ்செயல். உயர்சாதி மக்கள் - சைவ மடங்கள் - உயர் அரசு அலுவலர்கள் யாரும் தாழ்த்தப்பட்ட மக்களையும் ஏழை எளியோரையும் பாதுகாக்க முன்வரவில்லை. வள்ளலார் அவர்களுக்கு உறுதுணையாக இருந்து, மண்ணில் மனிதராய் வாழ அவர்களுக்கும் உரிமையுண்டு எனச் சுட்டிக் காட்டினார். எல்லாருக்கும் சமமான தருமம், பொதுவான உடைமை என்ற சிந்தனைக் கூறுகளை அவர் பாடல்களில் காணலாம்.

"*ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்*
*ஒருமையுளர் ஆகி உலகியல் நடத்தல் வேண்டும்*" (4082)

என்பது ஒரு சான்று.

சாதி வேறுபாடுகள் மனித வாழ்க்கையை இன்றும் சீரழித்து வருகின்றன. கோயில்களில் வழிபாடு சாதியால் தடைப்படவே செய்கிறது. எல்லாரும் சமமாக வழிபட, சமரசக் கோயிலாகச் சத்திய ஞானசபையை வள்ளலார் நிறுவினார் எனத் திரு.வி.க. கூறினார். (இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப : 34) எனவே சபை வள்ளலாரின் சாதி எதிர்ப்புப் பணிக்கு ஒரு சான்றுமாகிறது.

வேறொரு வகையிலும் வள்ளலார் பணியைக் காணல் வேண்டும். அந்நாளில் சாதியிழிவு காரணமாகச் சிலர் மதம் மாறினர். சாதியின் ஏற்றத் தாழ்வால் ஒருவரின் சமய உணர்வு பாழாவது வள்ளலாருக்கு உடன்பாடில்லை. மதம் மாறமுயன்ற சிலர் அவர் அறிவுரை கேட்டு அதைக் கைவிட்டிருக்கக்கூடும். எல்லாச் சாதியரும் பெருங்கூட்டமாக அவரிடம் இருந்த நேரம். அந்தக் கூட்டத்தைப் பார்த்துக் கிறித்தவர் பழித்துக் கூறியுள்ளனர். மக்களை ஏமாற்றுவதாக அவர் மீது குற்றமும் சுமத்தினர். (தயானந்தன் பிரான்சிஸ் எழுதிய ஆங்கில நூல் :

இராமலிங்க சுவாமி : மே.கோ. ப : 18) மதமாற்றப் பணிக்கு அவர் தடையாக இருந்தார் என்பதற்கு இது ஆதாரமாகும்.

சாதி, சமயம், குலம் எனப் பிரிவுபட்டுப் பகை, பூசல் என மக்கள் குழம்பிய அந்நாளில் அவர்களுக்குத் தேவைப்பட்ட பண்பாட்டு ஒருமையையும் சமூக ஒற்றுமையையும் அவர் வற்புறுத்தினார். அவருடைய உயிர்நெறி இறையுணர்வு என்பதில் ஐயமில்லை. அதற்குத் தடையாயிருந்த பலவற்றுள் சாதி வேறுபாட்டை அவர் சாடியதில் பொருளுண்டு. எல்லா உயிரிடத்தும் ஆன்ம நேயங்கொண்டு இறைவனை உணர முயன்றவருக்குச் சாதி உடன்பாடற்றுப் போயினமை இயற்கையே. ஆனாலும், இறையுணர்வு மட்டும் அவர் நோக்கமெனில் மக்களிடையே வாழ்ந்து பணியாற்றியிருக்கமாட்டார். உயிர்களுக்கு, தொண்டாற்றும் வழியில் இறையருள் பெறுவது அவர் குறிக்கோள்.

"*அப்பாநான் வேண்டுதல்கேட்டு அருள்புரிதல் வேண்டும்*
*ஆருயிர்கட்கு எல்லாம் நான்அன்பு செயல் வேண்டும்*"(4079)

என்று பாடியபோது அவர் கட்டாயம் சாதி, குலம் ஆகிய கட்டுகளைத் தாண்டியே இருப்பார். இதற்கு மேலும் சென்று மனிதன், விலங்கு, மரம் என்று பிரித்துப் பாராமல்,

"*எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர்*
*போல் எண்ணி*
*ஒத்துரிமை யுடையவராய்*" (5297)

வாழ்ந்த அருளாளர் மனிதனில் பிரிவுகளை ஏற்றுக் கொள்ள மறுத்தார். சமயப் பணி சமூகத்தில் தொடங்க வேண்டும் என்ற திருப்புமுனையை அவர் தோற்றுவித்ததாக ஆய்வாளர் சொல்வது சரியான மதிப்பீடு தான். (மா.ப.குருசாமி, "வள்ளலார் ஓர் அறிமுகம்" ப : 116)

சாதி வேறபாடற்ற சமுதாயம் தமிழனின் பழைமையான கோட்பாடு. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" என்பது குறள். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்பது திருமந்திரம். "சாதியாவது ஏதடா?" என்பது சிவவாக்கியர் பாட்டு. இந்த வழி வந்த வள்ளலாருக்குச் சாதி எதிர்ப்பு மரபாகிவிட்டது. சத்திய தருமச்சாலையில் பகுத்துண்ணல், சன்மார்க்க சபையில் பல்லுயிர் ஓம்பல் என அவர் செய்த தவம் காலம் கடந்து வாழும் பெருமையுடையது. எல்லாரையும் எல்லாவற்றையும் சமமாக மதிப்போர்க்கே உடனுண்ணவும் இருப்பதைப் பகிர்ந்து

கொள்ளவும் மனம் வரும். அந்தணர், படையாச்சி, முதலியார், பிள்ளை என்று சுழிபட்டுத் தடுமாறிய அந்நாளிலும் எதிர் முனைகளில் இருந்தவர்களையும் இணைத்த அருளுள்ளம் வள்ளலாருடையது. சாலையில் எல்லோரும் ஒன்றாய் உண்டதும் சபையில் எல்லோரும் ஒன்றாய் வழிபட்டதும் மெய்யான காட்சிகள் : பெருமானின் பெருமைக்குக் கட்டளைக் கல் அதுவே.

சாதியுணர்வு இன்றும் தமிழனை விட்டுப் போய்விடவில்லை. உண்மையில் சாதிச் சங்கங்கள் இன்றுதான் அதிகமாகி உள்ளன. ஆனால் தீண்டாமையின் பேயாட்டம் குறைந்துள்ளது. அரசியல் விடுதலை, சமூக நிலையில் விழிப்புணர்வு, கல்வியறிவு பெற்றமை, அரசு அளிக்கும் வாய்ப்புகள் என்று இவை கூடி ஒரு புதிய மலர்ச்சியை மக்களுக்குத் தந்துள்ளன. எதிர் காலத்தில் சாதிக் கொடுமை மறையும் என்பது உறுதி. இன்று நகரங்களில் அது இல்லை. சிற்றூர்களில் மட்டும் - அதுவும் சிலரின் தன்னலத்தால் - இருக்கிறது. காலம் அந்த நிலையையும் மாற்றும். அந்த மாற்றம் ஏற்படும்போது நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பே இதற்குப் பாடுபட்ட வள்ளற்பெருமானை நெஞ்சால் நினைந்து தொழ வேண்டியது தமிழன் கடமை.

## உ. பசி தீர்க்கும் பேரறம்

*ஆர்த்த இவ்வுலகில் அம்மையர் துணைவர்*
*அடுத்தவர் உறவினர் நேயர்*
*வேர்த்த மற்றயலார் பசியினால் பிணியால்*
*மெய்யுளம் வெதும்பிய வெதுப்பைப்*
*பார்த்த போதெல்லாம் பயந்து எனதுள்ளம் பதைத்தது*
*(3419)*

பத்தொன்பதாம் நூற்றாண்டு பஞ்சம் மிக்கிருந்த காலப்பகுதி : வறுமையால் மக்கள் வாடிய காலம் : உணவில்லாமல் இடம்விட்டு இடம் அவர்கள் அலைந்து திரிந்த நேரம் : பட்டினியால் ஆயிரக்கணக்கில் மக்கள் மாண்டு மடிந்த காலமும் அதுவே. வயிற்றுக்குச் சோறிடுவது பேரறம் என நிலவிய அந்தச் சூழலில் வள்ளலார் ஆற்றிய பணி சிறிதன்று. "பசியினால்

பிணியால் உள்ளம் வெதும்பிய" மக்களைப் பார்த்து அவர் பயந்து பதைத்தது காலத்தின் கட்டாயம்.

பசி, பசிப்பிணி, பசி தீர்த்தல் என்ற எண்ண ஓட்டங்கள் தமிழகத்துக்குப் புதியனவல்ல. "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்து உள்நின்று உடற்றும் பசி" என்றும் (13), நல்குரவு ஆகிய வறுமை நெருப்பை விடவும் கொடுமையானது என்றும் (1049) குறள் காட்டுகிறது. பசிக்கு எத்தனை வகையான அடைமொழிகளை மணிமேகலைநூல் தருகிறது! அரும்பசி, இரும்பசி, பெரும்பசி, வெம்பசி, யானைத்தீநோய், கடும்பசி, உறுபசி, தீப்பசி, கடிப்பசி என்று சாத்தனார் அது செய்யும் கொடுமைகளை மனதில் கொண்டு கூறுகிறார். உடல் பிணிக்கு மருந்து தருவோர் மருத்துவர். ஆனால் பசியை அதைவிடக் கொடிய பிணியாகக்கருதி அதை நீக்கிய வள்ளலை - சிறுகுடி கிழான் பண்ணனைப் - "பசிப்பிணி மருத்துவன்" என்று சோழ மன்னன் கிள்ளிவளவன் பாடுகிறான். (புறம் : 173)

பசி மானிட வாழ்வின் பல குறைகளுக்கும் ஒழுக்கக் கேடுகளுக்கும் காரணமாகிறது. நீரின்றியமையாது உலகம் : வானின்று அமையாது ஒழுக்கம் எனக் குறள் மனித ஒழுக்கம் மழையை அடிப்படையாகக் கொண்டது என்கிறது. பசியினால் ஏற்படும் கொடுமைகளை மணிமேகலை,

*"குடிப்பிறப்பு அழிக்கும் விழுப்பம் கொல்லும்"*

என்று தொடங்கி

*"பசிப்பிணி என்னும் பாவி"*

என்று பட்டியலிடுவது பலரும் அறிந்த செய்தி தான். குடிப்பெருமை, சிறப்பு எல்லாம் போய் அறிவும் பயன்படாத நேரம் பசி துன்புறுத்தும் காலம் என்பது பொருள். சிறுமையே அறியாத உயர்குடிப் பிறந்தோரும் வறுமையால் துன்புறும் போது இளிவந்த சொல் பேசுவர் எனக்குறள் (1044) இரங்குகிறது. பசித்துன்பம் தாங்காது நாயின் புலாலைத் தின்ன முயன்ற அந்தணன் பற்றி மணிமேகலை கூறுகிறது.

இவை முன்னோர் கருத்துக்கள். பசி என்ன என்பதற்கு வள்ளலார் தரும் விளக்கம் இவற்றை ஒட்டி அமைந்தது.

*"பசி என்பது ஆகாரம் பெறாமையால் வயிற்றினுள் பற்றி நின்று தேகத்தின் அகத்தும் புறத்தும் உள்ள கருவி கரணங்களின் தன்மைகளைச் சுடுதல் செய்து அறிவை*

*மெலிவித்து ஆன்மாவை வெளிப்படுத்துதற்கு முதற்காரணமாகிய விகற்ப மாயாகாரியப் பிண்டப் பகுதி நெருப்பு"* (உரை : 81)

இவற்றின் மூலம் பசி ஒரு நெருப்பு : உணவில்லாதபோது அது வயிற்றினுள் பற்றி நின்று உள்ளும் புறமும் கருவி கரணங்களைச் சுட்டு அறிவை மெலியச் செய்யும் என்பன புரிகிறது.

வள்ளலார் முன்னோர் கருத்துக்களையும் தாண்டிப் பசியை, அதன் துன்பத்தை நுட்பமாகவும் விளக்கமாகவும் கூறியுள்ளார். உயிர்ப் பண்புகளான அன்பு, குணம், மனம் முதலியனவும், உடலுறுப்புகளும் பசிக்கொடுமையால் அடையும் மாற்றங்களை வகைப்படுத்துகிறார்.

"*பசி அதிகரித்த காலத்தில்*
*சீவ அறிவு விளக்கமில்லாமல் மயங்குகிறது.*
*அறிவுக்கறிவாகிய கடவுள் விளக்கம் மறைபடுகின்றது.*
*குணங்களெல்லாம் பேதப்படுகின்றன.*
*மனம் தடுமாறிச் சிதறுகின்றது.*
*புத்தி கெடுகின்றது : சித்தம் கலங்குகிறது*"

என்று கூறி உடலுள் ஒவ்வொரு உறுப்பிலும் ஏற்படும் மாற்றங்களை -

"*கைகால் சோர்வு, நாக்கு குளறல் - செவி புலனிழத்தல்*
*வெப்பம் ஏறல், நரம்பு கட்டுவிடல், இதயம் வெந்து*
*மூளை சுருங்கல்*" (உரை : 67)

என அவர் வரிசைப்படுத்துவது ஒரு தேர்ந்த மருத்துவர் உடல்குறிகள், உடலியல் குறிகளைக் கூறுவதுபோல உள்ளது. இது வியப்பே. மற்றோரெல்லாம் பசி இன்னதென்றும் அதைத் தீர்ப்பது பேரறம் என்றும் கூற வள்ளலார் அதனால் ஏற்படும் உடல், மனத் துன்பங்களை விளக்கியிருக்கிறார். ஆதலால் பசியற்ற உலகம் அவருடைய கனவாயிற்று ; பசிகளைதல் ஒரு பேரறமாயிற்று.

வள்ளலார் பசியை ஒரு வேதனை எனவே குறித்துள்ளார். "நரக வேதனை, சனன வேதனை, மரண வேதனை என்கின்ற மூன்று வேதனைகளும் கூடி முடிந்த வேதனையே பசி வேதனை" என்பது அவர் கூற்று. (உரை ப : 68) இந்த மூன்று வேதனைகளும் மிகக் கொடியன. நரகத்தின் துன்பம் பற்றிப் புராணங்கள் அதிகமாகவே கூறுகின்றன. "சாதலின் இன்னாதது வேறில்லை"

என்று குறள் அதன் கொடுமையைக் குறிக்கிறது. பிள்ளைப் பேற்றுத் துன்பம் சொல்லில் அடங்காதது. எனில், இந்த மூன்றும் ஒன்று சேர்ந்து வந்தால் எப்படியிருக்கும் என்று வள்ளற்பெருமான் குறிப்பாகச் சொல்கிறார். ஆதலால் இத்தகைய பெருந்துன்பத்திலிருந்து ஒருவரை விடுவிப்பது பேரறம் - தருமங்களுள் தலையாயது என்பது அவர் கருத்து. "உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்" என்று மணிமேகலை இந்த முடிவான நல்லறத்தைப் பேசுவது யாவரும் அறிந்தது.

ஒருவன் பசியால் வாடும்போது உடனே அவன் உயிர்போய்விடுதில்லை. ஆனால் அவன் ஒழுக்கம் போய்விடும் சூழல் ஏற்படுகிறது. எனவே, ஜீவஒழுக்கம் பற்றிப் பேசும் வள்ளலாருக்குப் பசி நீக்கல் முதன்மையான அறமாயிற்று. ஒழுக்கமின்றி மனிதன் வாழ்வதில் பொருளில்லை.

"புண்படா உடம்பும் புரைபடா மனமும்
பொய்படா ஒழுக்கமும் பொருந்தி" (3556)

வாழ வேண்டும் என்பது அவர் உயிர்க் குறிக்கோள். பசியால் இம்மூன்றும் கேடுறும் என்பது மிகப் பெரிய கொடுமையல்லவா? அதனால் அதுபோன்ற தீயபசியை நீக்க முற்பட வேண்டும் என்று அவர் கூறியது ஆழ்ந்த உட்பொருளுடையது.

அடுத்து, பசியை "ஆபத்து, அபாயம்" என்று கூறி அதை நீக்குவது மேலான உயிரிரக்கம் - பரசீவகாருண்யம் - என்று அவர் கூறுகிறார் (உரை : 58). ஆபத்து சொல்லிக் கொண்டு யாருக்கும் வருவதில்லை : அப்படி ஆபத்தில் சிக்கிக் கொண்டவர்களை உடனே ஓடிச்சென்று அருகிலுள்ளோர் காப்பாற்ற முயல்வதும் இயற்கை. அதுபோலப் பசியால் வாடும் நிலையையும் கருதி உதவ வேண்டும் என்று வள்ளலார் வற்புறுத்துகிறார். இதுவே ஒருவன் மற்றவர்க்குக் காட்டக்கூடிய பேரிரக்கம் - பரசீவகாருண்யம் - என்பது அவர் உட்கிடக்கை.

பசி ஒரு நெருப்பு : தீ. அதை அணைக்க வேண்டும். "பசி என்கிற நெருப்பானது ஏழைகள் தேகத்தினுள் பற்றி எரிகின்ற போது ஆகாரத்தால் அவிக்கின்றது தான் சீவகாருணியம். பசி என்கிற விஷக்காற்றானது ஏழைகள் அறிவாகிய விளக்கை அவிக்கின்ற தருணத்தில் ஆகாரம் கொடுத்து அவியாமல் ஏற்றுகின்றதே சீவகாருணியம்" என்று பலநிலைகளில் சீவகாருணிய ஒழுக்கம் பகுதியில் (ப : 68,69) அவர் எழுதி

இருப்பது இன்றும் நெஞ்சை உருக்கும். வள்ளலாரின் படைப்புக்களில் சிறந்தவற்றுள் இந்தப் பகுதியும் ஒன்று.

மானிட உடம்பைக் கோயில் எனச் சொன்னவர் திருமூலர். "ஊனுடம்பு ஆலயம்" என்பது திருமந்திரம். அவ்வழியில் வள்ளலார் "கடவுளியற்கை விளக்கத்திற்கு இடமாகிய சீவதேகங்கள் என்கிற ஆலயங்கள் பசியினால் பாழாகும் தருணத்தில் ஆகாரம் கொடுத்து அவ்வாலயங்களை விளக்கம் செய்வது சீவகாருணியம்" எனப் பேசுகிறார் (உரை : 68) அறிவை விளக்கு என்றவர், உடம்பை ஆலயம் என்கிறார். பசி விளக்கையும் அணைக்கும் : ஆலயத்தையும் அழிக்கும் என்று அவர் எழுதுவது அவருடைய நெஞ்சின் உருக்கத்தைக் காட்டும்.

பசிவரின் யாருக்கும் விலக்கு கிடையாது. அரசன், வீரன், ஞானி, யோகி, சித்தர், முனிவர் என்ற வேறுபாடில்லை. பேராற்றல் உடையாரையும் அது வருத்தும் பசியினால் உள்ளுறுப்புகள் கேடடையும். எல்லை கடந்துபோகும்போது, நலத்தை மீளப்பெறாத அளவு கேடு ஏற்படும். "பசியினால் மாற்றிக்கொள்ளக் கூடாத கெடுதி" என்று வள்ளலார் கூறுகிறார். (உரை : 58) இது மருத்துவ வகையில் நுட்பமான செய்தி. உள்ளுறுப்புகள் உணவின்றிப் பசியால் பழுதுபட்ட பின்னர் அவற்றைப் புதுப்பித்து இயக்கத்தை மீட்க முடியாது என்பது இன்றைய மருத்துவ உலகம் ஏற்றுக் கொள்ளும் செய்தியாகும்.

இவ்வாறு பலவகைகளில் பசியால் வரும் கொடுமைகளை விளக்கியவர் பசி நீக்கலாகிய பேரறத்தையும் விளக்குகிறார். பசி நீக்கல் மற்ற அறங்கள் வளரவும் துணை செய்யும். பசித்து வருவோர் யாராயினும் அவர்க்கு உணவுதரல் வேண்டும். சாதி, தொழில், சமயமாகிய தடைகள் வேண்டா. பசி நீக்கலால் வரும் இன்பம் முத்தியின்பத்துக்கு இணையானது. பசி நீங்கப் பெற்றவன் முகத்தில் ஏற்படும் இன்பம் வீட்டின்பத்துக்குச் சமம். அதைப் பார்க்க, பசி தீர்த்தவன் உள்ளத்திலும் இன்பம் ஏற்படும். இந்த இன்பத்துக்கு இணை உண்டோ?

> "*உண்பதற்கு ஆகாரமில்லாமல் சோர்வடைந்த சீவர்களுக்குச் சீவகாருணியத்தால் ஆகாரம் கொடுக்க, உண்டு பசி நீங்கிய தருணத்தில் அந்தச் சீவர்களுக்கு அகத்தினிடத்தும் முகத்தினிடத்தும் தழைத்துப்*

*பொங்கித் ததும்புகின்ற இன்பமும், அது கண்டபோது கொடுத்தவர்களுக்கு அகத்திலும் முகத்திலும் அவ்வாறுண்டாகின்ற இன்பமும் ஆன்ம சகிதமாகிய கடவுள் கரணத்தில் பூரணமாகத் தோன்றுகின்றவை யாகலால் பர இன்பம் என்றறிய வேண்டும்."*

இந்தச் சொற்கள் அவருடைய ஆழ்ந்த நம்பிக்கையைக் காட்டும்.

இப்படி பசி நீக்கும் அறத்தைச் செய்வோர் யார்? அவர் எத்தகைய பேறு பெற்றவர்கள்? வள்ளலார் நன்றாக விடை சொல்லியுள்ளார். பசியை நீக்கியவர்கள் இறந்து கொண்டிருந்த ஒருவன் உயிரை மீட்டவர்கள் ஆவர். அந்தப் புண்ணியம் செய்ததால் அவர்கள் தெய்வத்துக்குச் சமம்.

*"இப்படிப்பட்ட இன்பத்தை உண்டு பண்ணுகிற புண்ணியத்துக்கு எந்தப் புண்ணியத்தை இணையென்று சொல்லலாம்? இந்தப் புண்ணியத்தைச் செய்கின்ற புண்ணியர்களை எந்தத் தெய்வத்துக்குச் சரி என்று சொல்லலாம்?"*

ஒருவன் தெய்வ நிலையை அடைய யோகம், ஞானம், வழிபாடு போன்ற பக்தி நெறிகளைப் பின்பற்ற வேண்டும். வள்ளலார் இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்த ஒரு எளிய வழியை எல்லாருக்கும் காட்டினார். பசி நீக்கல் இன்பத்தைத் தருகிறது. எனவே அது போகம். அப்படிச் செய்யும் போது பசித்தோனையும் அதை நீக்குவோனையும் ஒன்றுவிக்கிறது. எனவே அது யோகம். இரக்கமாகிய மக்கட் பண்பை அறிவுள்ளார்க்கு ஏற்படுத்துகிறது. எனவே ஞானம், சீவகாருணியம் என்கிற திறவுகோலைச் சம்பாதித்துக் கொண்டால் "அறிவு விளங்கிய சீவர்களுக்கெல்லாம் சீவகாருணியமே கடவுள் வழிபாடு" என்று பசி நீக்கலைப் போகம், யோகம், ஞானம், வழிபாடு என அழகாக வரிசைப்படுத்தியுள்ளார். (உரை ப:70,71)

உலகத்தார் முனிவனையும் சித்தரையும், தேவர்களையும் யோகிகளையும் வணங்குவது இயல்பு. ஆனால் சித்தர் உள்ளிட்ட அந்த மேலோர் வணங்கும் பெருமையை ஒரு சாதாரண மானிடன் பெறலாம் என ஒரு .எளிய வழியை வள்ளற் பெருமான் காட்டுகிறார். என்ன வழி? பசியோடு வரும் ஒருவனின் பசி தீர்த்தலே. வேறொன்றும் இல்லை. "அற்றார் அழிபசி தீர்த்தல்"

என்று வள்ளுவர் குறளில் கூறியதேதான். இதைச் செய்தால் மனிதன் எல்லார் வணக்கத்துக்கும் உரியவனாவான்.

*"ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை*
*மாற்றுவார் ஆற்றலின் பின்"*

இது தெய்வக்குறள். தவமுடையார் தம் பசியைப் பொறுத்துக் கொள்ளும் ஆற்றல் பெற்றவர்கள். ஆனால் பிறருடைய பசியை ஒழிப்பாரின் ஆற்றல் அதைவிடப் பெருமைக்குரியது என்கிறது இந்தப் பாட்டு. தனக்கு மேம்பட்டோரை மனிதன் வணங்குவது ஒரு புடை நிற்க, அவனே வணக்கத்துக்குரியவனாவான் என்று வள்ளலார் வள்ளுவர் வழி நின்று விளக்குவது அழகுடையது.

வள்ளலார் அருளுலகில் மட்டும் வாழ்ந்தவரல்ல ; பொருளியல் உலகிலும் பொறுப்புக்களை மேற்கொண்டிருந்தார்.

*"பணத்திலே சிறிதும் ஆசை ஒன்றிலை நான்*
*படைத்த அப்பணங்களைப் பலகால்*
*கிணத்திலே எறிந்தேன் குளத்திலும் எறிந்தேன்"*

என்று பாடும் அவரே அடுத்து,

*"குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை*
*எறிகிலேன் கொடுக்கின்றேன் பிறர்க்கே"* (3396)

என்று மற்றவர்க்குப் பணம் கொடுத்து உதவியதையும் குறித்துள்ளார். துன்புறும் நண்பர்க்காகவும், உறவினர்க்காகவும் அவர் பிறரிடம் பணம் கடனாகவும் வாங்கியுள்ளார். அவர் எழுதிய கடிதங்களில் இது பற்றிக் காணலாம் (உரை ப : 371,379). தமக்குப் பணத்தின் மீது பற்றில்லை என்பதற்காகப் பொறுப்புகளிலிருந்து அவர் விலகிக் கொள்ளவில்லை. அவருடைய வாழ்க்கையில் காணத்தக்க அரிய பண்புகளில் இதுவும் ஒன்று.

பசி தீர்த்தலை அறமாக, வழிபாடாகக் கருதி வலியுறுத்தியவர் சிந்தனைக்குரிய ஒரு கருத்தைக் கூறியுள்ளார். அது,

*"சமுசாரிகள் தமது தாய் தந்தை புணர்ந்தோர் மக்கள்*
*துணைவர் முதலிய குடும்பத்தாரைப் பசியினால்*
*பரிதபிக்கவிட்டு அயலார்க்குப் பசியாற்றத் தொடங்குதல்*
*.... கடவுளுக்குச் சம்மதமல்ல"* (உரை ப : 72)

என்பதாகும். மற்றவர்களுக்கு அறம் செய்வது சிறந்ததே. ஆனால் தம் வீடு பசியால் துன்புற அதைச் செய்வது அறமுமாகாது : கடவுளும் ஏற்கார் என்பது அரிய சிந்தனை.

*"ஏதிலர் ஆரத் தமர் பசிப்பர் பேதை*
*பெருஞ்செல்வம் உற்றக் கடை"* என்ற குறளின் கருத்து இப்படி எதிரொலிக்கிறது.

அதேவேளையில் குடும்பத்தாரைப் பேணியதுபோக, அயலார் பசி தீர்க்காமல் இருப்பதும் கடவுளுக்கு இசைந்தது அன்று எனவும் அவர் கூறினார். எல்லா உயிரையும் பொதுவாய்ப் பார்ப்பதென்பது ஒருவன் தன்னுணவைத் தந்துவிட்டுப் பட்டினி கிடப்பதன்று ; உணவு கேட்பவன் தன்னைக் காட்டிலும் பசியைத் தாங்கும் ஆற்றல் பெற்றிருப்பின் அவனுக்குத் தன்னுணவைத் தரவேண்டியதில்லை ; பசி தீர்க்கும் வழியை மட்டும் காட்டுவது சாலும் (உரை ப : 322). பசியாற்றல் பேரறமாயினும், அதைச் செய்யக் காரண காரியங்களை அவர் ஆராய்வது எண்ணற்குரியது. பிறர்துன்பம் நீக்கத் தன்னுயிரைத் துன்புறுத்தல் அவருக்கு ஏற்புடையதாயில்லை. தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக அவர் வாழ்ந்தபோதும் இந்தத் தெளிவைப் பெற்றிருந்தார்.

இரப்போர் துன்பமும் கரப்போர் கொடுமையும் குறளில் இரண்டு அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளன. தம்மை அவமதிக்காமல், இழிவு சொல்லாமல் ஈவாரைக் கண்டால் இரப்போர் மகிழ்வர் என வள்ளுவர் கூறினார் (குறள் 105-107). இரந்துண்டு வாழுமாறு தன்னைப் படைத்த இறைவன் "பரந்து கெடுக" என்று இரப்போன் சாபமிடுவதாக வள்ளுவர் உருகுகிறார் (1062). வள்ளற் பெருமான் திருக்குறளில் தோய்ந்தவர். அருட்பாவில் குறளின் கருத்துக்கள் ஆங்காங்கே பொன்னே போல் போற்றப்பட்டுள்ளன.

*"சீரிடுவார் பொருட் செல்வர்க்கலாமல்*
*இத்தீனர்கட்கு இங்கு*
*ஆரிடுவார் பிச்சை? ஆயினும் பிச்சன் அசடன் என்றே*
*பேரிடுவார் வம்புப் பேச்சிடுவார்"* (2337)

என்பது ஒரு பாடல். இரப்பாரை எள்ளி நகையாடிய செல்வர்கள் அன்றும் இருந்தனர். அவர்களை வஞ்சகர், சிறுமதியாளர், புலையர், அற்பர், கொடியவர், கடையர், ஈனர் என்றெல்லாம் வள்ளலார் சற்றுக் கடுமையாகவே சாடியுள்ளார். கலையுணர்வும் அறிவும் உடையார் கூட ஈயார் முன் சென்று,

*"எமக்கும் மனைக்கும் கட்ட நீ கலைதா,*
*ஒரு மேகலைதா, உண நெல்மலை தா"* (2295)

என முறையிட்டனர். மேகலை பாட்டில் மிகையாகலாம்.

ஆனால் உண்ண உணவும் உடுக்க உடையுமின்றி அறிஞரும் இரந்தனர் என்பது மெய்யே. ஒருபுறம் செல்வர் வகையாக வயிறார உண்ண, மறுபுறம் ஏழையர் உணவில்லாமல் வாடும் நிலை அவரை உருக்கியது. அதை எண்ணி அவராலும் உண்ண முடியவில்லை.

*"உள்ளலேன் உடையார் உண்ணவும் வறியார்*
*உறுபசி உழந்து வெந்துயரால்*
*வள்ளலே நெஞ்சம் வருந்தவும் படுமோ*
*மற்றிதை நினைத்திடும் தோறும்*
*எள்ளலேன் உள்ளம் எரிகின்றது உடம்பும்*
*எரிகின்றது என்செய்வேன் அந்தோ*
*கொள்ளலேன் உணவும் தரிக்கிலேன்"*

என்ற அருட்பா கனிவில் குழைந்த பாட்டு ஆகும். பசித்தாரைக் கண்டு அவருடைய வயிற்றுள்ளும் பசிக்கனல் எரிந்தது. அந்த உட்கனலே பசிதீர்க்கும் அறத்தைச் செய்யும் நிலைக் களனாயிற்று. அவருடைய சமுதாயப் பணி பசியுணர்விலிருந்தே தோன்றியது எனில் சாலும். பசியால் அவரும் துன்பப்பட்டார். அதனால் நீரற்ற பயிர்போல மக்கள் பசியால் வாடுவது காண அவரால் இயலாமல் போயிற்று.

"வாடிய பயிரைக்கண்டு வாடியவர்" வீடுதோறிரந்தும் பசியறாது அயர்ந்த வெற்றரைக் கண்டு உளம் பதைத்ததும் இந்த மண்ணில் நடந்த மெய்ம்மைகள்.

உலகிலிருந்து வறுமையையும் பசியையும் அறவே நீக்குவது மனிதனால் முடியாது. இரப்போர் இல்லாத இந்த ஞாலம் மரப்பாவை போலச் செயற்கைத் தன்மை கொண்டு இயங்கும் எனக் குறள் கூறுவது அறிந்த செய்தி (1058). இரப்பாராலும் ஒரு நன்மையுண்டு. ஈகை, கொடை, ஒப்புரவு என்ற நற்பண்புகள் அழியாமல் இருக்க அவர்கள் ஓரளவு தேவைதான். அழிபசி தீர்த்தல் மூலமே செல்வத்தைப் பேணிக் காக்க முடியும். இந்தக் கருத்தையொட்டி வள்ளலார், "பசியும் கடவுளால் கொடுக்கப்பட்ட ஓர் உபகாரக் கருவி" என்று கூறினார் (உரை ப : 68) அறச் சிந்தனைக்கு இது ஒரு தூண்டுகோல் என்பதில் ஐயமில்லை.

எனினும் தம்மால் முடிந்தவரை நாள்தோறும் சிலருக்கேனும் உணவிட ஏற்பாடு செய்ய அவர் எண்ணினார். அந்த எண்ணமே சத்திய தருமச்சாலையாக உருவாயிற்று.

இன்றுவரை அன்னம்பாலிக்கும் பணி அங்கு தொடர்ந்து நடைபெற்று வருகிறது. தொடங்கியபோது அவருக்குத் துணை நின்றவர்கள் பெரும்பாலும் ஏழையரே. தொடக்கநாளில் மூவாயிரம் மக்களுக்குக் குறையாமல் கூடினர். "ஆகையால் அத்தினத்தில் செல்லுகின்ற செலவு முழுவதும் இந்தத் தருமச்சாலையை அபிமானித்த நாமனைவரும் பாகம் செய்துகொண்டு செலுத்துவோமாக" (உரை ப : 480) என்று அவர்களே சுமைகளை ஏற்றுக் கொண்டனர். வள்ளற் பெருமான் மீது அவர்கள் கொண்டிருந்த பற்றையும் நம்பிக்கையையும் இந்தச் செயல் காட்டும். தருமச்சாலையில் அரும்பசி களையும் அறம் இப்படி மலர்ந்தது. நாளும் ஆயிரத்துக்கு மேற்பட்டோர் உணவுண்டனர். பஞ்சம் தலைவிரித்தாடிய அந்நாளில் இந்த அறம் எளிய செயலன்று. சாதி வேறுபாடின்றி அனைவரும் ஒன்று கூடி உடனுண்டனர்.

> *"சிருட்டி தொட்டு இந்நாள் பரியந்தம் உண்டாயிருக்கும் வித்தியாசப் பிராந்தியை நீக்கும் பொருட்டுத் தங்களால் ஏற்படும் வித்தியானந்தமும் அன்னசாலையும் .... பெத்தனும் முத்தனுமாகிய யாவருடைய அறிவின் கண்ணைத் திறந்துகாட்டி வருமென்று நம்புகிறேன் .... இதன் அருமையும் மேன்மையும் யோக்கியமும் சிலாக்கியமும் இவ்வளவு என்ற சொல்வதற்கு ஏடும் போதாது : நாவுமில்லை"*

என்று முத்து கிருஷ்ண பிரம்மம் என்ற அன்பர் வள்ளலாருக்கு மடல் எழுதி தம் வாழ்த்தைத் தெரிவித்தார் (உரை ப : 480). உணவுச் சாலையும் அதன் தொடர்பான கல்விப் பணியும் படைப்புக் காலந்தொட்டு வரும் சாதி மத வேறுபாட்டைக் கூட ஒழிக்கும் எனும் குறிப்புப் பொருளை இச்சொற்களின் உள்ளே காணலாம்.

சாலையில் உணவுண்டாரிடையே சாதிமத வேறுபாடு இல்லை. அவரிவர் என்று பாராது எல்லார்க்கும் உணவு என்ற அவர் குறிக்கோள் நிறைவேறிற்று. ஒருவகையில் இதற்குச் சமயப் பின்னணியும் உண்டு. சமயவாதிகளுக்கு ஏழையின் பசி ஒரு நல்ல கருவி. பசித்தவர்க்கு உணவு, உடை தந்து மதமாற்றம் செய்வது வழக்கமாக நடப்பதே. வள்ளலார் நாளில், வெள்ளையர் ஆட்சியில் இது கூடுதலாக இருந்தது. பஞ்சம் பாதித்த பகுதிகளில் பாதிரிமார்கள் சென்று பலநூறு மக்களைக் கிறித்தவராக்கினர்.

**இந்த நிலை கண்டும் இந்து சமயமடங்கள் பெரிதாக எதிர்ப்புப் பணி ஏதும் செய்யவில்லை.**

வள்ளலாரின் சத்திய தருமச்சாலை சிறிதளவு அதைச் செய்தது. சோற்றுக்கு மதம் மாறலை அது தடுத்தது. அவரைச் சுற்றிக் கூடிய பெருங்கூட்டம் சமயத்தின் மறுமலர்ச்சிக்குச் சான்று என அன்றைய மாவட்ட ஆட்சியரே கூறியிருக்கிறார் (உரை ப : 624). இந்த வகையில் அவர் ஆற்றிய பணியின் சரியான மதிப்பீடு இதுவே.

பசித்தோர்க்கு உணவு தருதல் புதிதன்று. தமிழகத்தின் தொன்மையான அறம்தான். இரந்துண்ணலும் ஈந்துண்ணலும் சங்க இலக்கியங்களில் கூறப்படுகின்றன. "ஈயென இரத்தல் இழிவு (அன்று) : ஈயேன் என்றல் அதனினும் இழிவு (அன்று)"எனப் புறநானூறு பேசும் (204). சிறுகுடிகிழான் பண்ணன் இரவலர் துன்பம் களைவோனாக இருந்தமையால் "பசிப்பிணி மருத்துவன்" எனப் புகழப்பட்டான்.

"*தன்பகை கடிதலன்றியும் சேர்ந்தோர்*
*பசிப்பகை கடிதலும் வல்லன் மாதோ*"

என்று சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் புகழ்கிறார் (புறம் 400). பகை நீக்கலுக்குச் சமமாகப் பசி நீக்கலையும் அன்றைய மன்னர் கருதினர்.

சமயமடங்களில் உணவிடல் இன்றும் நடப்பதே. ஆனால் அங்கு அவரவர் சமயம், சாதி சார்ந்தவர்களுக்கே உணவு கிடைக்கும். எல்லார்க்கும் உணவு என்ற புதுமைச் சிந்தனை - பொதுமைப் பேரறம் மணிமேகலை காட்டியது. அதை நடைமுறைப் படுத்திக் காட்டியவர் வள்ளற் பெருமான். அரசின் துணையில்லாமல், செல்வர் பங்கு இல்லாமல், சமய மடங்களின் பின்பலம் இல்லாமல் ஏழைகள் துணைகொண்டு அவர் அன்று இதைச் சாதித்தார்.

மனித அறிவிற்கும் நாகரிகத்திற்கும் அடையாளம் யாரும் பட்டினியால் சாகாமல் இருப்பதே. இரந்துண்டு வாழ்வோரைக் கொண்ட சமுதாயம் மனிதனின் சிறுமையையே காட்டும். ஒருவேளை உணவுக்குக் கூட வழியில்லாமல் பலர் வாடச் சிலர் செல்வத்தில் திளைப்பது நல்ல சமுதாயத்துக்கு அழகன்று. தனிமனிதனுக்கு உணவில்லை என்றால் உலகையே அழிப்போம் என்று பாரதி முழக்கமிட்டதும் இந்நோக்கில் தான்.

இந்தக் கருத்துக்களை அடியொற்றி வள்ளலாரின் பணியை எண்ணினால் வியப்பாக இருக்கிறது. உயிரிரக்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு மென்மைப் புரட்சியையே அன்று அவர் செய்தார். பசிநீக்கலை அவர் வழிபாடு எனவே கருதினார். இன்று சைவ உலகம் "மகேசுர பூஜை" என்று அதைப் போற்றுகிறது. அன்பர் பணி செய்வதன் மூலம் இன்ப நிலையை அடையும் வகையைத் தாயுமானவர் பாடுகிறார். உணவிடல் மூலம் இறைவழிபாட்டில் நிறைவு என்ற செய்தியை நிகழ்த்திக் காட்டியவர் வள்ளலார் என்பதில் ஐயமில்லை.

## 3. கண்மூடி வழக்கங்கள் எதிர்ப்பு

*"கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும்*
*கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப் போக*
*மலைவறு சன்மார்க்கம் ஒன்றே நிலைபெற மெய்யுலகம்*
*வாழ்ந்தோங்கக் கருதியருள் வழங்கினை" - 3768*

மனித வாழ்வு ஏதோ ஒரு வகையில் சடங்குகளுக்கு உட்பட்டது. சமய நெறியில் அவை அதிகம். இறைமறுப்பாளர்கள் வேறுவகையில் அவற்றைச் செய்கிறார்கள். தனக்கு மீறிய ஒரு சக்தி செயல்படுவதாக மனிதன் நம்புகிறான். அதை நிறைவு செய்தால் தன் விருப்பம் முழுமையுறும் என்று கருதிப் பல சடங்குகளைப் பின்பற்றுகிறான். நாடு, மொழி, சமயம், இனம் என்ற வேறுபாடு இதற்கில்லை. இவை அறிவார்ந்தவை என்ற சொல்ல முடியாது. புராணங்கள், சாத்திரங்கள் இவற்றில் ஒருநோக்கு கருதிக் கூறப்பட்டவை, என்றும் எக்காலத்துக்கும் எல்லாருக்கும் பொருந்தும் என்று இறுகப் பற்றிக் கொண்டு இருப்பது ஒருவகையில் மூடநம்பிக்கையே. இதை எதிர்த்துக் காலம் தோறும் சான்றோர் குரல்கொடுத்துள்ளனர். அவர்களில் இறைவனை நம்பியவர்களும் உண்டு ; இறை மறுப்பாளர்களும் உண்டு.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் கல்வியறிவு பரவவில்லை. சமயம் வெற்றுச் சடங்குகளின் தொகுப்பாக இருந்த காலம். பொய்ச் சாத்திரங்கள், போலியான நம்பிக்கைகள்

போற்றப்பட்டன. வள்ளலாருடைய மேற்கண்ட பாடல் இதைக் குறிப்பாகச் சுட்டுகிறது. சாத்திர நூல்கள் கற்பனையாகச் சொல்பவற்றை என்றுமுள்ள உண்மைகள் என அழுத்தமாக நம்புவதைக் கண்மூடிவழக்கம் என்றும் அந்நிலை மண்மூடிப்போய் ஒழிய வேண்டும் என்றும் வள்ளற் பெருமான் ஆணையிடுகிறார்.

அறிவொளி தொடங்கிய நாளில், அவர் வாழ்ந்த காலத்தில், நாட்டு மரபிற்கும் பண்பாட்டுக்கும் முரணான பழக்கங்களை, காலத்துக் கொவ்வாத கோட்பாடுகளை மக்கள் ஏற்க மறுத்தனர். அவற்றுக்கு எதிர்ப்பாகப் பலவகைகளிலும் மக்களிடையே கருத்துப் பரவலைச் செய்தனர். புத்தறிவாளர்களின் இந்தச் செயல் நல்லது தான். ஆனால் அவர்களுடைய வன்மையான போக்கால் நாத்திகம் பரவும் சூழல் ஏற்பட்டது. சடங்குகளை எதிர்ப்பது நல்லது. அது இறைமறுப்பாகிய எதிர்முனைக்குப் போகக்கூடாது. பழைமையான சமயத்தைப் பேணும்போது மாற்றங்கள் கட்டாயம் நேரும். "பழையன கழிந்து புதியன புகுதல்" இயற்கைதான்.

ஆதலால் மக்களுடைய இறையுணர்வு கெடாமல் இந்தச் சடங்குகள் எதிர்ப்பைப் பரப்ப வேண்டும். அறிவார்ந்த நோக்கில் சமயத்தை அணுகுவது என்ற வகையில் வள்ளலார் பல அரிய கருத்துக்களைக் கூறியுள்ளார். அவற்றுள் சில பழைமை வாதிகளுக்கு அதிர்ச்சி தந்தன. சடங்குகளை விடச் சமயம் பெரிது. சமயத்தைவிட மனித வாழ்வு பெரிது. சமயத்தையும் வாழ்வையும் ஒரு சேரச் சிதைப்பன இந்தப் போலிச்சடங்குகள். ஆதலால் தான் அவை "மண்மூடிப்போக" வேண்டும் என்று வள்ளலார் ஆணையிட்டார்.

பிறப்பும் இறப்பும் உயிருள்ளவற்றுக்கு அடையாளங்கள். இறப்பு இயற்கையானது. எல்லா உயிர்க்கும் நிகழ்வது. மனிதனுக்கும் அது பொருந்தும். ஆனால் மனித வாழ்வில் இறப்பும், அதன் பின்சார்ந்த சடங்குகளும் சமயநிலையில் தனியிடம் பெறுகின்றன. "ஊரெல்லாம் கூடி ஒலிக்க அழுது, பேரினை நீக்கிப் பிணம் என்று பேரிட்டு" எனத் திருமூலர் இதை எள்ளுவார். இந்நாட்டில் "ஒப்பாரி" எனும் நாட்டுப் பாடல்வகை அதற்கெனவே தோன்றியது. அழுவது, ஆடம்பரமாக பிணத்தை எடுத்துச் செல்வது, அடுத்தடுத்துச் சடங்குகள் செய்வது என்று இறப்பைக் கொண்டாடுவதாகவே உள்ளது. இதை வள்ளலார் ஏற்கவில்லை.

இறந்தவர்க்காக அழுவது தேவையற்றது என அவர் கருதினார். சென்னையிலிருந்த அவருடைய நண்பர் காலமானது குறித்துக் கேள்விப்பட்டு அவர் எழுதிய கடிதத்தில்

"திருவேங்கட முதலியார் காலஞ்சென்றதைக் குறித்து விசாரப்படுகின்றேன். ஆயினும் அது அரிபிரமாதிகளுக்கும் உள்ள காரியம். ஆதலால் புதிதல்ல என்று துணிந்தேன்" எனக் குறித்துள்ளார். (உரை, ப : 386)

"*தோன்றுதல் இறத்தல் தானும் துகளறத்*
*துணிந்து நோக்கின்*
*மூன்றுலகத்தினோர்க்கும் மூலத்தே முடிந்த வன்றே*"

என்று வாலி உயிர்போகும் வேளையில் தன் மகனுக்கு அறிவுரை கூறியது இங்கு நினைக்கத்தக்கது. (வாலிவதைப்படலம் : 154)

ஆதலால் இறந்தவர்க்காக அழுவதும் துயரப்படுவதும் தேவையற்றன. "பிள்ளைகள் இறந்தால் சஞ்சலிக்க வேண்டாம். கர்மகாரியங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம்" என்பன அவருடைய தெளிவுதரும் சொற்கள் (உரை : 430). இறந்தோர்க்காகப் பெருங்குரலில் அழுவது இந்நாட்டு வழக்கம். மக்களை இழத்தல் கொடியவற்றுள்ளும் கொடிது. அந்தக் கொடுமை நேர்ந்தாலும் அழ வேண்டாம் என அவர் கூறுவது அவர் உள்ளத் துணிவையும் புரட்சி நோக்கையும் காட்டும். எத்துன்பமாயினும் அதைத் தாங்கும் ஆற்றல் பெற வேண்டும் என்பது உட்கருத்து. அந்நேரத்தில் செய்ய வேண்டியது தக்க உதவியேயன்றி வெற்று ஆரவார அழுகை அல்ல என்பது இன்றும் போற்றற்குரியது.

இறந்தவர்களைப் புதைப்பதும் உண்டு : சுடுவதும் உண்டு. இந்த இரண்டு வழக்கங்களும் தொன்றுதொட்டு வருவன. சங்க இலக்கியங்களில் இவற்றுக்குச் சான்றுகள் உள்ளன. வள்ளலார் இறந்தவர்களைச் சுடுவதை விரும்பவில்லை.

"*இறந்தவரைச் சுடுகின்றீர் எவ்வணம்*
*சம்மதித்தீரோ?*" (5608)

"*பிணங்கழுவி எடுத்துப்போய்ச் சுடுகின்றீர்*
*இனிச்சாகும் பிணங்களே நீர்*
*கணம் கழுகுண்டாலும் ஒருபயனுண்டே*
*என்னபயன் கண்டீர் சுட்டே*" (5609)

என்ற பாடல்களில் அவருடைய இந்த உணர்ச்சியைக் காணலாம்.

*"பரனளிக்கும் தேகமிது சுடுவது அபராதம்*
*எனப் பகர்கின்றேன் நீர்*
*சிரம் நெளிக்கச் சுடுகின்றீர்"* (5612)

என்று உடலைச் சுடும்போது, செத்ததே யாயினும் சிரம்நெளிந்து அது படும் வேதனைக்கு அந்த அருளாளர் உருகுகிறார்.

இறந்தவர்க்கு நீத்தார் கடன் செய்வதையும் அவர் ஏற்கவில்லை. "கர்மகாரியங்கள் ஒன்றும் செய்ய வேண்டாம்" என்பன அவர் சொற்கள். நீத்தார்க்குக் கடனாற்ற வேண்டும் எனக் குறள் வற்புறுத்துகிறது.

*"தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான்என்று*
*ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"*

என்பது குறள். வள்ளுவரைப் போற்றிய வள்ளலார் இதை ஏற்காதது பெரிய புரட்சி. "மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம்" என உலகோரை அவர் அழைத்தார். அந்த வாழ்வு பெற்றவர்கள் இறைவனுடன் கலந்து விடுகிறார்கள். பின் எதற்குக் கர்மமும் காரியமும்? சிந்திக்கத்தக்க புரட்சிக் கருத்துக்கள் இவை.

அதேபோல நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் அவர் கூறிய இன்னொரு கருத்து மிகப்பெரிய அதிர்ச்சியைத் தருவது. கணவன் இறந்தால் மனைவி தாலி வாங்குதல் இன்றுவரை தமிழகத்தில் இருந்துவரும் பழக்கம்.

*"புருடன் இறந்தால் மனைவி தாலி வாங்குதல் வேண்டாம். மனைவி இறந்தால் புருடன் வேறு கல்யாணப் பிரயத்தனம் செய்ய வேண்டாம்"* (உரை : 430)

என்று கூறி அப்படிச் செய்ய வேண்டாம் என அவர் வற்புறுத்தினார். பழைமையாளர்களை இது கடுமையாகப் பாதித்திருக்கும். சீர்திருத்தவாதிகள் இப்படிக்கூற இந்நாளிலும் துணியமாட்டார்கள்.

ஒரு பெண் தன்னுடைய கைம்மை நிலையைப் புறத்தில் காட்டத்தேவையில்லை. அப்படியில்லாமல் காட்டுவதே அவளுக்குப் பலதுன்பங்கள் தேடிவரக் காரணம். இன்றும் அந்நிலை தொடர்கிறது. பலநூறு ஆண்டுகளாக வேரோடிய பழக்கத்தைத் துணிவுடன் அவர் எதிர்த்தது தொலைநோக்கு உணர்வைக் காட்டவல்லது.

ஒவ்வொன்றுக்கும் ஒரு தெய்வம். மழைக்கு வருணன் ; மழைத்தெய்வத்தை வழிபட்ட குறிப்புகள் சங்கப்பாடல்களில் நிறையவே உள்ளன. அவை புராணங்களில் நிலைபேறு பெற்றவை. மழை எப்படித் தோன்றுகிறது? இன்றைய அறிவியல் மாணவன் எளிதாக விடை சொல்வான்.

"தடிந்து எழிலி தான் நல்காது" என்னும் குறள் (17). மேகம் கடலில் முகந்து வானில் பொழிகிறது எனக் கூறும். "மேகம் கடல் ஜலத்தை உண்டு மழை பெய்வதென்பது பொய்" இது வள்ளலார் கூற்று (உரை : 430). அதிர்ச்சிதரும் இன்னொரு கருத்து இது.

"*நீரிலும் பாரிலும் உள்ள திரவசக்தியைக் கிரகித்து வாயுமண்டலத்தில் சேர்த்து மேலும் கீழும் உஷ்ணம் நிரம்ப மத்தியிலுள்ள திரவ அணுக்கள் புழுங்கி நீராய் ..... மழையுண்டாகும்*" (உரை : 430)

மழை தெய்வச் செயல் என்று நம்பிவாழும் மக்களிடையே இப்படி அறிவியல் விளக்கத்தை அவர் கொடுத்தார். இன்றைய அறிவியல் உண்மை அதுவே. அவருடைய அறிவார்ந்த அணுகுமுறைக்கு இது நல்ல சான்று.

புராணங்கள், அவைகூறும் கதைகள், கதைமாந்தர்கள் இவை உண்மை என இன்றும் பலர் நம்புகின்றனர். "பழைமையானது, கற்பனையில் உதித்தது" என்பதே புராணம் என்ற சொல்லுக்குப் பொருள். இவை சில தத்துவங்களை விளக்குவதற்காகக் குறியீடுகளைப் பயன்படுத்திக் கதைகள் கூறின. அவற்றை முழுவதும் உண்மை என எடுத்துக்கொள்வது அறிவுடைமைக்குப் பொருந்தாது.

"*நன்று புராணம் செய்தார் அதில்*
*நல்ல கவிதை பலபல தந்தார்*
*கவிதை மிக நல்லதேனும் - கூறும்*
*கதைகள் பொய்எனத் தெளிந்தோம்*"

என்று பாரதியார் பாடுகிறார் (உயிர்பெற்ற தமிழர் பாட்டு : 9). வேதம் கற்றவர், வேத குலத்தில் உதித்தவர் கூறியது இது.

வள்ளலார் பாரதிக்கு முன்பு இந்தக் கருத்தை ஒல்லும் வகையால் தொண்டர்களுக்குக் கூறியவர்.

"*சைவபுராணம் விஷ்ணுபுராணம் முதலிய யாவற்றின் உண்மையும் தத்துவ சம்மாரங்கள் ...... இதுபோலவே திருவிளையாடல் பாரத பாகவதங்களும் அமைத்துக்*

*கொள்க. புராணங்களின் இருதயமெல்லாம் தத்துவ சம்மாரமே .....*" (உரை : 273).

அந்தத் தத்துவங்களைப் புரிந்துகொண்டு அவை கூறும் கருத்துக்களைப் போற்ற வேண்டும். இந்த அடிப்படையை விட்டுவிட்டு அற்ப நிகழ்ச்சிகளில் அறிவை இழக்கக்கூடாது. இதைப் புரியாது புராணமாந்தரையும் உருவங்களையும் போற்றும் மக்களின் அறியாமை கண்டு அவர் மனம் வருந்தினார்.

தெய்வ உருவங்களுக்கு வள்ளலார் தந்த தத்துவ விளக்கம் புதுமையானது. சமய நூல்களில் தத்துவக் கருத்துக்கள் விரவிக்கிடக்கும். ஆனால் எளிய மக்களுக்குப் புரியும் வகையில் அவர் விளக்கம் கூறினார். மனிதர் யார் தேவர் யார்? பிரமனும் திருமாலும் அடிமுடி தேடிய கதை என்ன? பிரமன் நான்முகனானது எப்படி? சந்திரன் ஏன் சாபம் பெற்றான்? சூரபதுமன் அழிவு ஏன்? என்று பற்பல கதைகளுக்குப் புதுப்புது தத்துவ நுட்பங்கள் கூறியுள்ளார் (உரை : 276-80). வெற்றுருவ வழிபாடாக அல்லாமல் தத்துவநோக்கில் அவற்றைக் காண வேண்டும் என்பது இன்றும் பலருக்குப் புரியுமா?

தமிழகத்தில் சிறுதெய்வக் கோயில்கள் அன்றும் இருந்தன : இன்றும் அதைவிட அதிகமாக உள்ளன. ஒரு சாதிக்குத் தனிக்கோயில் ; தனித்தெய்வம். மக்கள் தங்கள் குறையிரந்து நேர்கடன் செலுத்தி இந்தத் தெய்வங்களை வழிபட்டனர். வள்ளலார் சிறுதெய்வ வழிபாட்டைக் கடுமையாக எதிர்த்தார். உயிர்ப்பலி ஈந்து இரத்தச் சோறிரைத்து வெறிக்கூத்தாடித் தெய்வ வழிபாடு நடக்குமா?

"*சிறுதெய்வ நெறிசெல்லும் மானிடப் பேய்கள் பால்*
*சேராமை எற்கருளுவாய்*" (2599)

என்பது அவர் முறையீடு. சிறுதெய்வ வழிபாடு செய்வோர் மானிடரல்லர் பேய்கள் என்பது அவர் கணிப்பு. சிறுபருவத்தில் அவரும் இரேணுகை என்னும் சிறுதெய்வத்தை வழிபட்டவரே. பின்னாளில் மறந்துகூட அப்படிச் செய்யப் போவதில்லை எனவும் அவற்றின் பெயர்களைக் கூடச் சொல்வதில்லை எனவும் சூளுரைக்கிறார்.

"*.......... மறந்தும் என்றன்*
*நாவால் உரைக்கவும் மாட்டேன் சிறுதெய்வ நாமங்களே*"
- 2693.

நாட்டில் ஏற்படும் காலரா, பிளேக் போன்ற நோய்கள் தெய்வச் சீற்றத்தால் ஏற்படுவதாக மக்கள் நம்பினர். 'Plague' என்ற ஆங்கிலச் சொல்லை மாரியம்மனுடன் இணைத்துப் "பிளேக் மாரியம்மன்" கோயில் கட்டியவர்கள் தமிழர்கள். இந்தக் கோயில்களைக் கண்டு அவர் மனம் நொந்தார். அந்த நோய்கள் ஏற்படக் காரணம் என்ன என்பதைத் தெளிவாக அறிவியல் பின்புலத்தில் அவர் கூறியது :

> "*வாந்திபேதி மாரடைப்பு முதலியவற்றால் நேரிடும் துர்மரணங்கள் ஆகாரக் குறைவாலும் மிகுதியாலும் அக்கிரம அதிக்கிரமத்தாலும் பொருந்தலாலும் இவைபோன்ற பலவகைக் கெடுதியாலும் உண்டாகின்றன*" - (உரை : 320)

நோய்கள் தெய்வத்தால் வருவன அல்ல : உணவின் அளவு, தூய்க்கும் இன்பத்தின் அளவு என்ற வரையறையைத் தாண்டினால் வருவன. "மிகினும் குறையினும் நோய் செய்யும்" என்று வள்ளவர் கூறியதே, வள்ளலார் சொல்லில் புதுவாழ்வு பெறுகிறது. புரட்சிப் பூவாகவும் மலர்கிறது.

தமிழகத்தில் தெய்வங்களுக்குத்தான் கோயில் என்றில்லை. மனிதருக்கும் கோயில்கள் கட்டுகின்றனர். அன்றும் அப்படி நிலை இருந்தது. மானிட தேகம் ஒரு வரையறைக்கு உட்பட்டது. எல்லையற்ற பரம்பொருள் எங்கே? மானிடன் எங்கே? எப்படி இந்த உடம்புடன் மானிடன் தெய்வமாக முடியும்? வள்ளலாருக்கு இது பிடிக்கவில்லை. அவருடைய உபதேசங்களைக் குறித்து வைப்பது அவருடன் இருந்த அன்பர்களின் வழக்கம். ஒருவர் வள்ளலார் கூறியதை "நமது ஆண்டவரால் விரித்து விவரிக்கப்பட்ட" என்று எழுதியுள்ளார் (உரை : 350). இது அவருடைய மனதை நோகச் செய்தது.

"தெய்வத்தைத் தெரிந்து கொள்ளாது இவ்வுலகத்தார் என்னைத் தெய்வமெனச் சுற்றுகின்றார்கள். ஐயோ!" (உரை : 357) என்று அவர் வருந்தினார். மனிதனைத் தெய்வமாக்குவது அவருக்கு இசைவில்லை. உருவ வழிபாடு தத்துவம் சார்ந்தது. அதைவிட்டு விட்டு மானிட உருவத்துக்குத் தெய்வப் பெருமையை ஏற்றுவது சிறுமையையே காட்டும். அது அறிவுக்குப் புறம்பாகும். தெய்வத்துக்கு இன்னதுதான் உரு என்று யாரும் கூறமுடியாது. புராணம் சாத்திரங்கள் குழூஉக் குறிகளாகத் தெய்வத்தியல்புகள்

ஒவ்வொன்றைச் சொல்கின்றன. அவை முழுமையல்ல. பிற சமயத்தார் உருவ வழிபாட்டை எள்ளி நகையாடக் காரணம் தெய்வத்தின் உண்மை தெரியாமல் வெற்றுருவங்களைப் போற்றியதே என அவர் கருதினார் (உரை : 354).

சிறுதெய்வ வழிபாட்டையும் மனித வழிபாட்டையும் எதிர்த்த வள்ளலாரே வழிபடு மூர்த்தமானார். இது மக்களின் அறிவுக்குறையையே காட்டும்.

"பொற்புடைய ஞானவான்களின் வரலாற்றில் பொய்ம்மை என்ற நஞ்சைக் கலந்து இல்லது புனையும் அறிஞர் பொல்லாங்கு" என இதுபோன்ற செயல்களை (வர : 24) அவ்வை. துரைசாமி குறிப்பிடுவது இங்கு எண்ணத்தக்கது. ஆயிரமாண்டுகளுக்கு ஒருமுறை தோன்றும் மானுடமகுடம் வள்ளலார். அவர் அப்படியே இருப்பதுதான் சரி. மனிதனாய்ப் பிறந்து உயர்நிலை அடையும் வழி வகுத்தவர். அவர் மனிதர் என்று சொல்வதால் இழுக்கு ஏதுமில்லை.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் இப்படித் துணிந்து சீர்திருத்தக் கருத்துக்களை வள்ளற்பெருமான் கூறியது வியப்பு. அவருடைய காலச்சமூகப் பின்னணியை நோக்கினால் இவற்றின் சிறப்புக்கள் தெரியவரும். "கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும் கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப்போக" எனப் பாட நெஞ்சுறுதி வேண்டும். சடங்குகளைக் கற்பனைகள் என அவர் கூறியதில் பொருளுண்டு. மக்கள் துன்பம் தீர்க்காது போலியாகச் செய்தவை : யாரோ சொன்னதற்காகச் செய்தவை என்பது உட்கருத்து. மனத்தில் உண்மையான பக்தியில்லாமல் புறத்தில் செய்யப்படும் சடங்குகள் பயனற்றவை என்பது மட்டுமல்ல. என்ன நோக்கில் செய்யப்படுகின்றனவோ அந்நோக்கையும் அவை நிறைவேற்றா.

"*அருளுருவமான அறிவே உருவம் கொண்ட*
*சிவத்தை அறிவாலே அறிவது உண்மை*" (உரை : 269)

என்று மக்களை மெய்யறிவு பெறச்சொன்னார்.

அறிவுக் கொவ்வாத மூடநம்பிக்கைகள் அந்த நல்வழியைக் காட்டமாட்டா. மனிதனின் தனித்தன்மையை அழிக்கும் வகையில் இந்தப் பழக்கங்கள் காலம், இடம் என வேறுபட்டு அவனை அலைக் கழிக்கின்றன. எனவே பிறப்பிலிருந்து இறப்புவரை செய்யப்படும் பல சடங்குகளும் வேண்டா என

அவர் சொல்லியதில் சமுதாய மறுமலர்ச்சி வித்துக்கள் அடங்கியுள்ளன.

மக்களுக்குப் பிடித்த, ஆனால் பயன்தராத கருத்துக்களைப் பலரும் சொல்லலாம். மக்களுக்குப் பிடிக்காத ஆனால் பயன்தரும் கருத்துக்களைத் துணிந்து சொல்வோரே சான்றோர். "சொல்லுக சொல்லில் பயனுடைய" என்ற குறள் காட்டும் நெறி இதுவே. பல்லாண்டுகளாக ஊறிக்கிடந்த பொய்ம்மைகளை எதிர்த்து ஒரு கோட்பாட்டை அவர் அன்று தொடங்கி வைத்தார். பின்னாளில் வந்த சில இயக்கங்கள் அவருடைய கருத்தை அடியொட்டியன என்று சொல்வதற்கில்லை. ஆயினும் ஈ.வே.ரா. போன்ற பகுத்தறிவுவாதிகளுக்கு அவர் ஒரு முன்னோடியாக இருந்தார் என்று ஆய்வாளர் கூறுவது சரியான மதிப்பீடு. அறியாப் பொதுமக்களைப் பிணித்திருக்கும் தெளிவற்ற மூட நம்பிக்கைளையும் பழக்க வழக்கங்களையும் துடைப்பதற்கு வள்ளலார் பெரிதும் முயன்றிருக்கிறார் என்று அழகரடிகள் கூறுவது எண்ணற்குரியது (வர : 17). சமயவாதி, ஞானி, அருளாளர் என்று பல முகங்களைக் கொண்ட வள்ளலாரின் இந்த இன்னொரு முகத்தையும் - சிவவாக்கியார் போன்ற சித்தர் வழி நின்று சடங்குகளைக் கடிந்த சமூகத்தொண்டையும் - மக்கள் அறிய வேண்டும். தெய்வத்தின் பெயரால், சமயத்தின் பெயரால், சாத்திரங்களின் பெயரால் இன்றும் சடங்குகள் தொடர்வது வேதனைக்குரியது.

*"உண்மை சொல்ல வந்தனனே என்று உண்மை*
*சொல்லப்புகுந்தாலும் தெரிந்து கொள்வாரில்லை"*
(உரை : 360)

என்று அவர் வருத்தப்பட்டார். இன்று அவர் இருந்தாலும் அதை விடவும் வருந்துவார் என்பதில் ஐயமில்லை.

## 4. தனிமனித ஒழுக்கம்

*அன்பு இரக்கம் அறிவூக்கம் செறிவுமுதல்*
*குணங்களுற அமைந்து நாளும்*
*இன்புறக் கண்ணுதலான்தன் திருக்கோயில்*
*பணிபுரிந்து ஈண்டிருக்கும் நல்லோர் - குடும்பகோஷம்-101.*

சமூகம் தனிமனிதர்களின் தொகுதி. அவர்களுடைய ஒழுக்கம், பண்பாடு, அறிவு, செயல்திறன் ஆகியவற்றின் பாதிப்பைச் சமூகத்துள் காணமுடியும். தனிமனிதக் கேடுகள் பெருகினால் அந்தச் சமூகம் வாழாது. மாறாகத் தனிமனிதனின் ஒழுக்கம் சிறந்திருக்குமானால் சமூகமும் பெருமையுறும் ; வாழும். தனிமனிதக் கேடுகள் ஒழிய வழிகாட்டும் சான்றோர்கள் எல்லாக் காலத்தும், எல்லா நாட்டிலும் இருந்து வந்துள்ளனர். அந்நோக்கில் எழுந்தவையே நீதி நூல்கள்.

19ஆம் நூற்றாண்டுத் தமிழகம் பாழ்பட்டிருந்தது. அந்நிய ஆட்சிக் கொடுமை, மக்களிடையே உட்பூசல்கள், பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், வறட்சி எனப் பல காரணங்களால் தனிமனிதன் அமைதியிழந்து வருந்தினான். வள்ளலார் இவற்றைத் தம் கண்ணால் நேரடியாகக் கண்டார். அவர்களுக்கிடையே வாழ்ந்து, அவர்களுடைய இன்பதுன்பங்களில் பங்குகொண்டு வேண்டுங்காலத்து வேண்டிய வகைகளில் அவர் கூறிய அறிவுரைகள் இன்றும் தனிமனித வாழ்வு சிறக்கப் பயன்படுவனவாம்.

ஒருவனுடைய வாழ்வில் நட்பு உயரிய இடம் பெறுகிறது. "செயற்கரிய யாவுள நட்பின்?" என்று வினவி அதைப்போல செய்யத்தக்க வேறு செல்வமில்லை எனக் குறள் கூறுவது யாவரும் அறிந்தது (781). நட்புச் செல்வத்தை வள்ளலார் நிறையப் பெற்றிருந்தார் நண்பர்கள் தாம் என்றில்லை : அரசில் உயர்பதவியில் இருந்த சிலரும் அவரருகில் இருப்பதற்காக மாறுதல் பெற்று வடலூர்ப்பகுதிக்கு வந்து வாழ்ந்தனர் (வர : 625). சில நண்பர்கள் தத்தம் ஊர்விட்டு நிலையாக வடலூரில் குடியேறினர். வடலூரைச் சுற்றி அன்பர் வீடுகளில் நடந்த நிகழ்ச்சிகளில் அவர் கலந்து கொண்டிருக்கிறார். மக்களைவிட்டோ அவர்கள் உறவைவிட்டோ அவர் விலகியிருக்கவில்லை.

சென்னையை விட்டு வந்தபின்னர் தம் நிறைவுநாள் வரையிலும் சென்னையிலிருந்த நண்பர்களுக்குக் கடிதங்கள் எழுதியிருக்கிறார். அவற்றுள் சில கிடைத்துள்ளன. பல அரிய செய்திகள் அவற்றின் மூலம் கிடைக்கின்றன. கனவில் கூட நண்பர்களை மறக்கமாட்டேன் என்று சொல்லிய உரம் (உரை : 406). ஒரு நண்பருடன் இருந்த பிணைப்பை "நானே தாமாகவும் தாமே நானாகவும் பழைமை தொட்டு வந்த அபேதநேயம்" என்று

குறிக்கும் அழகு (உரை : 371) ; கடிதத்தில் "நற்குணங்களால் சிறந்து நமது கண்மணிபோல் விளங்குகின்ற நண்பர்" என்று எழுதும் நெகிழ்ச்சி (உரை : 365) ஆகியன அவர் நட்பைப் போற்றியதைக் காட்டும்.

வள்ளலாருடைய நண்பர்கள் செல்வரல்லர் : பெரும்பாலோர் நடுத்தர வாழ்வு கொண்டவர்கள். பலர் ஏழைகள். எந்த நிலையிலும் தமக்கோ தம் நிறுவனங்களுக்கோ தம் பணிகளுக்கோ பணம் வேண்டி வள்ளலார் செல்வரை நாடவில்லை. ஒரு செல்வரைப் பற்றிக் குறிப்பிடும்போது

*"இவரைப்போல் ஆயிரம் பணக்காரர்களை அரை நிமிடத்தில் அதிட்டிக்கலாம். நமக்கு இவர்களெல்லாம் ஒரு திரணமாகத் தோற்றுகின்றார்கள். இவர்கள் லட்சியம் வேண்டியதில்லை. நாம் சிவபெருமான் திருவடிகளுக்கு அடிமையானோம்."*

என்று எழுதியுள்ளார் (உரை : 369). செல்வத்துக்கோ செல்வர்க்கோ பறிபோகாத திண்மை வள்ளலாருக்கு இருந்தது. அதையே தம் நண்பர்களிடமும் வலியுறுத்தினார். துறவியாயினும் அவருக்கும் சில அடிப்படைத் தேவைகள் இருந்தன. பணம், துணி, மிதியடிகள் போன்றவற்றைப் பலகாலும் நண்பர்களே வாங்கி உதவியிருக்கின்றனர். பொருள் எங்கும் கிடைக்கும். அன்புடன் அதைத் தருவோர் அதிகமில்லை. அப்படித் தருவோர் கிடைப்பது பொருளைவிடப் பெரியது. தமக்கு உதவிசெய்த அத்தகைய நண்பர்களை அவர் இறுதிவரை போற்றினார்.

நண்பர்களுடன் அவர் கொண்ட உறவு எடுத்துக்காட்டு போன்றது. அவர்கள் அவரிடம் தங்களுடைய குடும்பம், வணிகம், தொழில், சொந்தச் சிக்கல், உடல்நலம் ஆகியவை பற்றிக் கூறி அறிவுரைகள் கேட்டு அவற்றின் படி வாழ்ந்துள்ளனர். நிறையச் சான்றுகள் உள்ளன. தம்முடன் சார்ந்து திருமணம் செய்யமறுத்த ஓர் அன்பரை அதற்கு இசையும்படியும், அதற்குப்பின் சுற்றம் தழுவிக் கண்ணோட்டத்துடன் நடக்கும்படியும் அறிவுரை கூறியுள்ளார் (உரை : 364,66). தாம் நண்பர்களுக்கு எழுதும் கடிதங்களில் அவர்கள் உடல்நலம் பற்றி உசாவி, உடலைப் பேணும் வகையைக் குறிப்பதும் அவர் வழக்கம்.

*"தாம் தம்முடைய தேகத்தை சாக்கிரதையாக உபசரித்து வர வேண்டும். . சாக்கிரதை என்பது அருந்தல்*

*பொருந்தல்களில் மிதபோசனம் : மிதபோகம். மிதபோஜனமாவது கோபம், விராகம், அலட்சியம், முயற்சி, விரைவு இவை முதலிய ஏதுக்களால் குறைத்தல். விருந்து சுவைவிரும்பு ஏதுக்களால் ஏற்றல் இல்லாமல் சமமாகப் பொசித்தலாம். மிதபோகமாவது அதிபரிச்சயம் அதிஞாபகம் முதலிய ஏதுக்களால் இரவு பகல் தோற்றாது பொருந்தல். விராகம் அலட்சியம் முதலிய ஏதுக்களால் பொருந்தாதிருத்தல்."* (உரை : 377)

இவை அவர் எழுதிய கடிதத்தில் உள்ள சில சொற்கள். சில அரிய செய்திகளை இவை உள்ளடக்கியுள்ளன.

உணவு உண்ணலில் இருவகை. உணவு சுவையுடையதாய் நல்லதாகவே இருப்பினும், சினம், கவலை, முயற்சி இவை காரணமாக அளவு குறைவாக ஒருவன் உண்ணலாம் அல்லது விருந்து, சுவை காரணமாக அளவு கடந்தும் உண்ணலாம். இரண்டும் நடக்கக் கூடியன. இரண்டுமே தவறு என்கிறார் வள்ளலார். உண்ணும் போது மன அமைதி, உணவில் அளவு, விரைவும் மந்தமும் இல்லாமல் சரியாக உண்ணல் என்ற அவருடைய சிந்தனைகள் இன்றைய மருத்துவ உலகம் வலியுறுத்துவன.

அதேபோல உடலுறவு கொள்வதாகிய போகம் பற்றி அவர் எழுதியதும் கருதத்தக்கது. அதே நினைவுடன், அருகில் இருக்கிறாள் என்பதற்காக இரவுபகல் என்ற வரையறையில்லாமல் மனைவியுடன் கூடலும் தவறு. அல்லது மனத்துன்பம், அலட்சியம் இவை காரணமாக மனைவி அருகிருந்தும் கூடாமலிருப்பதும் தவறு. இரண்டுமின்றி அளவாகப் பொருந்துவது என்று அவர் எழுதியது யாரும் மனங்கொளத்தக்க செய்திகள். "மலரினும் மெல்லிது காமம் சிலரதன் செவ்வி தலைப்படுவார்" என்று குறள் கூறியதன் ஆழம் வள்ளலார் எழுத்தில் வடிவம் பெறுகிறது.

உடல் நோயுறும்போது கொள்ள வேண்டிய உணவு, மருந்து ஆகியன பற்றி மருத்துவர் என்ற வகையில் அவர் பல செய்திகளைக் கூறியுள்ளார். சில மருந்துகளைத் தாமாகவே செய்தும் உள்ளார். கடிதங்களில் மருந்துண்ணும் முறை, கொள்ள வேண்டிய பத்தியம் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவர் எழுதிய ஒரு கடிதத்தில் சில செய்திகள் :

*"தங்களுக்கு இருமலால் தேகம் அபக்குவமாக இருக்கிறதாகத் தபாலில் எனக்குத் தெரிவித்தார். அவர் தெரிவித்தது தொடங்கி என் நினைப்பெல்லாம் தங்களிடமே இருக்கிறது..... அதிக உழைப்பெடுத்துக் கொள்ளாமல் சாக்கிரதையாக வரவேண்டும். கடினமான ஔஷதங்களைக் கொள்ள வேண்டாம் ...... உத்தியோகம் தடையாயிருந்தால் அதைவிடுத்துத் தேகத்தைப் பக்குவப்படுத்திக் கொள்ளுங்கள். தேகம் பக்குவமான பின்பு சிவானுக்கிரகத்தால் உத்தியோகம் சம்பாதித்துக் கொள்ளலாம். அது பரியந்தம் கடன்பட்டாவது ஜீவனம் செய்யலாம்"* (உரை : 387)

இந்தப் பகுதியிலிருந்து நான்கு கருத்துக்கள் தெளிவாகின்றன. 1) கடினமான மருந்துகளை உண்ணல் கூடாது. 2) அதிக உழைப்பு கூடாது. 3) செய்யும் பணி உடல் நலத்துகுத் தடையாயின் அதைவிட வேண்டும். 4) தக்கவேலை கிடைக்கும் வரை கடன்பட்டாவது வாழ வேண்டும்.

திருக்குறளில் மருந்து என்னும் அதிகாரம் நோய், நோயாளி, மருந்து என்பன பற்றி விரிவாகக் கூறுகிறது. வள்ளலார் திருக்குறட் கருத்துக்களை வாழ்நாளில் ஒல்லும் வகையில் பரப்பிவந்தார். ஆதலால் மேற்கண்ட கருத்துக்கள் புதிதல்ல. எனினும் வள்ளலார் அந்நாளில் அவற்றை வலியுறுத்தியதும் பரப்பியதும் அருஞ்செயல். "கடினமான ஔஷதங்கள்" என்று அவர் குறிப்பது வீரியம்மிக்க மருந்துகளை. அவற்றை உண்பதில் விழிப்புணர்வு தேவை. திறன்மிக்க மருத்துவர் கூட இன்றியமையாப் பொழுதில் அன்றி அவற்றைப் பயன்படுத்த மாட்டார். இன்றைய மருத்துவ உலகம் மக்களை நாள்தோறும் இதுபற்றி எச்சரிக்கை செய்கிறது. வள்ளலார் அன்றே இது பற்றிக் கூறியது அவருடைய முன்நோக்கு உணர்வைக் காட்டும்.

அதேபோல உடல்நலமே பெரிது. செய்யும் பணியோ ஈட்டும் பொருளோ அல்ல என அவர் கூறுவது இன்றைக்கும் பொருந்தும். வேளாவேளைக்கு உண்ணாமல் உறங்காமல் காசுதேடியலையும் மாந்தருக்கு இது ஒரு படிப்பினை. உழைப்பும் பொருள் தேடலும் இன்றியமையாதன. அதில் ஐயமில்லை. "வினையே ஆடவர்க்குயிரே" என்ற சங்கப்பாட்டு இன்று மகளிர்க்கும் பொருந்தும். பொருளிலாத உலகத்தைக் கற்பனை

செய்வும் முடியாது. எல்லாம் சரிதான். ஆனால் இன்று உலகில் நோய்கள் பலவற்றுக்கும் காரணம் பேருழைப்பினால் ஏற்படும் உடல்நலக் கோளாறுகள் தாம். நலமற்ற, சத்து குறைந்த உணவுண்டு அதிகமாக உழைத்தால் நல்லுடலும் சீர்கெடும். உழைப்புக்கேற்ற ஊதியம் தேடல் பிழையில்லை. அதைவிட உடலுக்கேற்ற உழைப்பு ; உழைப்புக்கேற்ற உணவு என வள்ளலார் எண்ணியமை போற்றற்குரியது கடன்பட்டாவது உடல்நலம் பேணுக என்று சொல்லும்போது கடன்வாங்கச் சொல்வதல்ல. உடல்நலம் பேணலைக் குறிப்பதற்கே ஆகும். "வைத்தியனுக்குக் கொடுப்பதைவிட வாணியனுக்குக் கொடு" என்பது பழமொழியல்லவா?

அதே போல இன்னொரு கடிதத்தில், தம் ஆசிரிய நண்பருக்குப் பிள்ளைகளுக்குப் பாடஞ்சொல்வது கூட உடலநலத்துக்கேற்றவாறு இருக்க வேண்டும் எனக் கூறியுள்ளார். "படிக்கின்ற விசயத்தில் அதிக அதிக்கிரம பிரயாசை எடுத்துக் கொள்ளப்படாது" என்பன அவர் சொற்கள் (உரை : 392). ஆசிரியத் தொழிலை வள்ளலார் போற்றியவர் ; கற்பித்தல் பற்றிப் பல அரிய கருத்துக்களை வேறு இடங்களில் கூறியவர். எனினும் அந்த உயர்ந்த தொழிலும் உடல்நலனுக்குக் கேடு தருமாயின் விட்டுவிட வேண்டும் என்பது மனம் கொளத்தக்க செய்தியாகும்.

"வரவுக்குத்தக்க வாழ்வு" என்பது வள்ளலார் நண்பர்களுக்கு வலியுறுத்திய இன்னொரு கருத்தாகும்.

"தங்கள் வரவுக்குத் தக்க செலவு செய்துகொண்டிருக்க வேண்டும்" (உரை : 405)

"வரவுக்குத் தக்க செலவு செய்ய வேண்டும்" (உரை : 368)

இரண்டு நண்பர்களுக்குத் தனித்தனியாய் எழுதிய கடிதங்களின் வரிகள் இவை. பணம் வரும் வழி சிறிதாயினும் கேடில்லை, செலவு பெரிதாக இல்லாதவரை என்று குறள் கூறுவதும் எண்ணற்குரியது (478). ஆடம்பரமும் புறநாகரிகமும் முதன்மை பெறும் போலி வாழ்வே மக்கள் துன்பத்துக்குக் காரணம். "பொய்கட்டிக் கொண்ட" வாழ்வு என்று இதை வள்ளலார் குறிக்கிறார் (5564). பத்துப்பாடல்களில் இத்தகைய வாழ்வை அவர் கடுமையாகச் சாடியுள்ளார் (5556-5565). வீண் செலவு, தேவையற்ற சடங்குகளுக்கான ஆர்ப்பாட்டம் இவை எளிமையின் வடிவமாக இருந்த அவருக்கு உடன்பாடில்லை.

எனினும் தவிர்க்க முடியாத வேளைகளில் பணம் கடன் வாங்க வேண்டிய நிலை அவருக்கும் ஏற்பட்டது.

"*இந்தக் கடிதம் கொண்டு வருகிற அம்மாளுக்குத் தாங்கள் கடன் வாங்குகிற இடத்தில் இரண்டு வராகன் கடன்வாங்கிக் கொடுக்க வேண்டும் ...... இவ்விடத்தில் எனக்கு வழக்கமாகக் கடன் கொடுக்கிறவர்கள் சமீபத்திலில்லை.*" (உரை : 381)

மற்றவர்களுக்காக, அவர்களின் நோய் தீர்வதற்கு உதவவும், படிப்பதற்கு உதவி செய்யவும் மற்ற நண்பர்களிடமிருந்து அவர் பணம் கடனாகப் பெற்றுள்ளார் என்பதற்கு மேற்கண்ட கடிதப் பகுதி சான்றாகும். பிறரும் அவருக்காகக் கடன் வாங்கியுள்ளனர்.

வள்ளலார் சொன்னதால் ஒரு நண்பர் கடன்பெற்றுப் பலருக்கு உதவியுள்ளார். ஒரு பௌராணிகர்க்கு மாதம் நான்கு ரூபாய் கடன் வாங்கித்தருமாறும், அதிகம் தந்தால் அவர் வீண்செலவு செய்து விடுவார் என்றும் ஒரு கடிதத்தில் எழுதினார் (உரை : 395). உதவி செய்வது பெரிதல்ல : தக்கார்க்குத் தக்க அளவே செய்ய வேண்டும் என்பதில் அவர் கண்டிப்பாக இருந்தார். தம்மிடம் பழகினவர்களைப் பற்றி அவர் சரியான மதிப்பீடு செய்திருந்தார் என்பதை இந்தச் செய்தி காட்டும். எல்லாரிடமும் அவர் பணம் கேட்கவில்லை. இறுக்கம் இரத்தின முதலியார் என்ற நண்பரிடம் மட்டும் இந்த உரிமை கொண்டிருந்தார். மற்றவர்கள் பணம் தந்தபோது கூட கண்டிப்புடன் மறுத்துவிட்டார் (உரை : 405).

வடலூரில் சன்மார்க்க நிலையங்களைத் தோற்றுவித்து நடத்த அவர் பல துன்பங்களைப் பட்டார். அவருடன் இருந்த நண்பர்கள் தத்தம் பொருள்களை அடகு வைத்தும் தொண்டாற்றியுள்ளனர் (உரை : 486). "வட்டிமேல் வட்டி கொள்ளும் மார்க்கத்தில்" நின்ற மக்களைக் கடுஞ்சொற்களால் வள்ளலார் திட்டியதற்கு இத்தகைய நிகழ்ச்சிகள் காரணமாக இருந்திருக்குமோ என்று எண்ண வேண்டியுள்ளது. அந்நிறுவனங்களை நடத்தப் பலரும் பலவகையில் பொருளாலும் உழைப்பாலும் துன்புற்றனர். பொதுப்பணியில் ஒருவர் ஈடுபடுவது எளிதன்று ; தன்னலம் துறந்தோரால் தான் அது இயலும். சமூகத்துக்குப் பயன்தரும் ஒரு நல்லறத்துக்காக வள்ளலாரும் அன்பர்களும் கடன் வாங்கியும் பணியாற்றினர் என்பது தமிழக மக்கள் அறிய வேண்டிய செய்தியாகும்.

தனிமனிதனுக்கு மூன்று பண்புகளை அவர் வலியுறுத்தினார்.

"*புண்படா உடம்பும் புரைபடா மனமும்*
*பொய்படா ஒழுக்கமும் பொருந்தி*" (3556)

வாழ வேண்டும் என்பது அவர் பாட்டு. இம்மூன்றும் எல்லாருக்கும் பொருந்தும். "பரனளித்த தேகம்" என்று மானிட தேகத்தைச் சுட்டி, இறைவழிபாடு செய்யவும் தியானம் புரிந்தின்பம் பெறவும் உடல் வேண்டும் என்று கூறுகிறார் (உரை : 481). உரைநடையில் நித்திய கருமவிதி, கடிதங்கள், உபதேசக் குறிப்புக்கள் இவற்றில் உடல்நலம் பேணல், தனிமனித ஒழுக்கம் பற்றிய செய்திகள் நிறைய உள்ளன. தூய உடம்பு, தூய மனம், தூய ஒழுக்கம் என அவர் கூறுவது விழுமியதாகும். இவற்றின் அடிப்படையில், இவற்றை விளக்குவது போல இந்திரிய ஒழுக்கம், கரண ஒழுக்கம், ஜீவ ஒழுக்கம், ஆன்ம ஒழுக்கம் என நான்கு பற்றி எழுதியுள்ளார்.

இந்திரிய ஒழுக்கம் தனிமனிதனின் முதல் அடிப்படை. நற்சொல் கேட்டல், தூயவை தீண்டல், அன்புடன் நோக்கல், இன்சொல்லாடல், நல்லோரிணக்கம், அறவழி ஈட்டல், ஈதல் மற்றும் புறத்தூய்மை பற்றிய செய்திகள் இப்பகுதியுள் உள்ளன. இவையேயன்றி மலம், சிறுநீர் இவற்றைச் சமப்படுத்தல், இவற்றில் தடை ஏற்படின் மருந்து புறக் கருவிகளால் சரிசெய்தல் என்ற குறிப்புகளும் உள்ளன (உரை : 308). அழுக்குடை, அறியாமை, புறத்தூய்மைக் குறைவு என மக்கள் ஏழ்மையால்துன்பப்பட்ட நேரத்தில் அவர்களிடையே இது பற்றி அவர் கூறியது எண்ணற்குரியது.

மலம், சிறுநீர் பற்றி அவர் கூறுவன எளிய மக்களுக்குப் புதியன : மருத்துவர் நோயாளிக்குச் சொல்வது போன்றன. கூடலும் குறைத்தலுமின்றி உணவுண்டு மலக்கழிவில் ஒழுங்கு பேண வேண்டும். மலச்சிக்கல் ஏற்பட உணவு ஒரு காரணம். அதிக உழைப்பு. கால வேறுபாடு, வெப்பமிகுதி போன்றவையும் சிறு பாதிப்பை ஏற்படுத்தும். மலச்சிக்கல் ஏற்படின் மருந்து, புறக்கருவி, கைப்பிடிப்பு, யோகம் ஆகியவற்றால் அதை நீக்கிக் கொள்ள வேண்டும். புறக்கருவியை அவர் பௌதிக மூலங்கள் என்கிறார். இன்றுள்ள "எனிமா" கருவி போன்றது எனலாம். கைப்பிடிப்பு மசாஜ் (Massage) எனல் வேண்டும். "அஸ்தபரிச தந்திரம்" என வள்ளலார் இதைக் குறிக்கிறார். உடல்நலம் காப்பதில் யோகத்துக்குள்ள பங்கை இன்று மருத்துவ உலகம்

ஏற்றுள்ளது. மேற்சொன்ன நான்கும் இன்றும் வழக்கிலுள்ளவை. அவர் அன்றே இவற்றைக் கூறியது எண்ணத்தக்கது (உரை : 308).

சிறுநீர்க்கழிவு பற்றி அவர் சொன்னது அறிவியல் நோக்கில் சிறப்புடையது. பாலுணர்வு மண்டலமும் சிறுநீர் மண்டலமும் ஒன்றுடன் ஒன்று தொடர்புடையன. சிறுநீர்க் கழிவில் தடை ஏற்படின் பாலுணர்வு பாதிக்கப்படும். அதேபோல அதிகமான காமஉணர்ச்சியும் உறவும் சிறுநீர் மண்டலத்தைப் பாதிக்கும். ஆதலால் போகம் மிதமாக இருக்க வேண்டும் என்று கூறினார்.

அடுத்து வரும் கரண ஒழுக்கம் மனம் பற்றியது. மனத்தை அறிவிற் கிடமாக்கல், தீச்செயல் பற்றாதிருக்கச் செய்தல், பிறர்குற்றம் நாடாமை, தன்மதிப்பில்லாதிருத்தல், தன் கருத்தைப் பிறர்மீது திணியாமை போன்றவை இதனுள் கூறப்படுகின்றன (உரை : 309). தனிமனிதனின் பெருமை அவன் மனத்தால் ஏற்படுவது. நல்ல சிந்தனைகள் செயலூக்கத்தை வளர்க்கும். உடல் நலம் ஒருவனுக்கு வேண்டும் : ஆனால் கூடவே மனநலமும் கட்டாயம் வேண்டும். "மனநலம் மன்னுயிர்க்கு ஆக்கம்" என்பது குறள். பிறர் தீமை சொல்லாதிருப்பது சான்றோர்க்கு அழகு. வள்ளலார் "சீவதோஷம் விசாரியாதிருத்தல்" என்று அதைக் கூறுகிறார். பிறருடைய குற்றங்குறைகளைத் தெரிந்து கொள்வதால் இழிவாகப்பேச வாய்ப்பு நேர்கிறது. ஆதலால் "பிறர்தோஷம் விசாரிக்க" வேண்டாம் என அவர் தெளிவாக்குகிறார். இன்னொரு கருத்தையும் மனநலத்துக்காக அவர் சொன்னார். "தனது தத்துவங்களை அக்கிரமத்தில் செல்லாது கண்டித்தல்" என்பது ஒருவன் தன் கருத்தைக் கூறலாம்; வற்புறுத்தலாகாது எனும் பொருள்பட்டது. தற்செருக்கு வேண்டாம் என்பது இதன் குறிப்பு. மனிதன் அறிய வேண்டிய ஒழுகலாறுகளில் சிறந்ததும் ஆகும்.

மூன்றாவதாக ஜீவ ஒழுக்கம். மேற்சொன்னவாறு உடல்நலமும் மனநலமும் பெற்ற ஒருவன், தன்னைச் சுற்றியுள்ளவர்களுடன் கொள்ள வேண்டிய உறவுகளைக் கூறுகிறது.

*"ஜீவ ஒழுக்கமாவது ஆண்மக்கள், பெண்மக்கள் முதலிய யாவர்களிடத்திலும் சாதி, சமயம், மதம், ஆசிரமம், சூத்திரம், கோத்திரம், குலம், சாஸ்திர சம்பந்தம்,*

*தேசமார்க்கம், உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனும் பேதம் நீங்கி எல்லவரும் தம்மவர்களாய்ச் சமத்தில் கொள்வது"*
(உரை : 309)

இது அவரே தொகுத்துக் கூறியது. எல்லாரையும் ஒன்றாகக் காணும் உயர்ந்த அறத்தை அவர் உயிரின் ஒழுக்கம் எனவே வகுப்பது சிறப்புக்குரியது. சமயத்தில் ஒரே தெய்வத்தை வழிபடுவார் ஒன்றுபடுவது இயல்பு. அது போதாது. சமூக நிலையில் எல்லாரும் ஒன்றாக வேண்டும். சாதிகுல வேறுபாடுகளைப் பிறரும் கடிந்தனர். ஆனால் "தேசமார்க்கம்" என்ற நாட்டு எல்லையைத் தாண்டி ஆண், பெண் என்ற பால்வகுப்பைத் தாண்டிப் பொதுச் சிந்தனையை வள்ளலார் காட்டுகிறார். "எல்லவரும் தம்மவர்" என்பது மனுக்குலத்துக்கு வழிகாட்டி. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற கணியன் பூங்குன்றன் பாட்டு (புறம் : 192) இங்கு முழங்குகிறது.

ஆன்ம ஒழுக்கம் இந்தப் படிநிலை வளர்ச்சியில் இறுதியானது. உடம்பு, மனம், சமூகம் என விரிந்து மானிடர் எல்லாரையும் தம் உறவினராகத் தழுவிய பிறகு அதையும் தாண்டி எல்லா உயிர்களையும் ஒன்றென மதித்துப் போற்றுவது ஆன்ம ஒழுக்கம். "யானை முதல் எறும்பு ஈறாக எவ்வுயிரும்" இறைவன் வடிவே என உணரும் முதிர்ச்சிநிலை இது (உரை : 309).

"*எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்*
*தம்முயிர் போல் எண்ணியுள்ளே*
*ஒத்துரிமையுடையவராய் உவக்கின்ற*" (5296)

உயர்ந்த ஞானநிலையும் இதுவே. "ஆருயிர்கட்கெல்லாம் அன்பு செய்து" வாழ இது வழிகாட்டுகிறது.

எல்லாருக்கும் இந்த ஒருமையுணர்வு எளிதில் வந்துவிடாது. அறிவும் ஒழுக்கமும் ஒத்தவர்க்கே இது கூடும். பிறருக்கு ஒரு எளிய வழியை வள்ளலார் காட்டுகிறார்.

"*தன்னால் இதரர்களுக்கு இம்சை இல்லாது, அவர்கள் செய்யினும் தான் சகித்து அடங்கி நிற்க வேண்டும்*"
(உரை : 309)

இவை அவர் சொற்கள். இன்னா செய்யாமை, பொறையுடைமை, அடக்கமுடைமை என்ற திருக்குறள் அதிகாரங்களின் பிழிவை இவற்றுள் காணலாம். "உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை" தவத்திற்கு இலக்கணம் என்று வள்ளுவர் கூற (குறள் : 261). வள்ளலார் அதை எல்லோருக்கும் பரவலாக்குகிறார். தான்

பிறர்க்குத் துன்பம் செய்யாதிருத்தல், பிறர் செய்யினும் பழிவாங்காதிருத்தல் ஆகிய இரண்டு நற்பண்புகள் வளரின் அவர்காண விரும்பிய "ஒத்தார் உயர்ந்தார் தாழ்ந்தார்" எவரும் - எதுவும் - ஒன்றாகும் ஒருமை நிலை கனியும் என்பதில் ஐயமில்லை.

இத்தனையும் தனிமனித மேம்பாட்டுக்காக அவர் கூறியவை. எளிமையில் வாழ்ந்து பிறர், பிறவுயிர்கள் துன்பம் கண்டு உருகுவோர் எல்லோரும் தொழத்தக்க வித்தகர் ஆவர் (5279). அன்பு, இரக்கம், அறிவு, ஊக்கம் முதலியன வாய்க்கப் பெற்ற தனிமனிதர் நிறைந்த சமுதாயமே வேண்டத்தக்கது. துன்பமில்லாது வாழ நல்லோர் காட்டிய வழியில் நடக்க வேண்டும். அந்த நல்லோரைப் பணியவும் வேண்டும். (குடும்ப கோஷம் : 101)

சமூகப் பொறுப்பு ஒவ்வொருவருக்கும் உரியது. துறவியும் அதை விலக்குவதில்லை. பெரியராயினும் சிறியராயினும் அவரவர் பணியை, பிறரை மதித்துச் செய்ய வேண்டும். உடம்பு, மனம், உயிர், ஆன்மா எனும் வரிசையில் ஒவ்வொருவர் வாழ்வும் படிநிலை வளர்ச்சி பெற வேண்டும் என்ற சிந்தனைகளை இவற்றுள் காணலாம். அவருடைய தன்வரலாறு போலவே இப்பகுதி அமைந்துள்ளது. சமூகத்தில் மனிதன் இருக்கும் வரை அதனுடைய ஒரு அங்கம் தான் என அவனுணர்ந்து கடமைகளைச் செய்ய வேண்டும் என்ற செய்தி புலனாகிறது. அவர் அப்படி வாழ்ந்தார். தூக்கம் குறைத்து, ஓய்வு சிறிதே கொண்டு, கொஞ்சமே உணவுண்டு பிறருக்காக அவர்பட்ட துன்பங்களை அவர் எழுதிய கடிதங்களும் பாடல்களும் காட்டுகின்றன. துறவியாகக் காடு தேடிப் போகவில்லை. மக்கள் நடுவில் வாழ்ந்த மாமனிதர் அவர். தம்மைப் போலச் சிலராவது வாழ வேண்டும் என அவர் எண்ணியிருக்கக்கூடும். அந்த எண்ணம் நிறைவேறிற்றா என்பதைக் காலமே காட்ட வேண்டும்.

வள்ளலார் பாடியவற்றுள் "குடும்பகோஷம்" என்பதும் ஒன்று. பத்தொன்பது படலங்களில் ஒரு சிறுநூலாக அதை ஆக்க எண்ணியிருந்தார். ஆனால் இரண்டு படலங்களே கிடைத்துள்ளன. எஞ்சியவை பற்றிய தலைப்புக்கள் உள்ளன. அவற்றுள் உலகியற்படலம், பெண் சமூகப் படலம், ஆண் சமூகப்படலம் என மூன்று உள்ளன. இந்நூல் முழுவதும் பாடப்பட்டிருப்பின், அல்லது பாடப்பட்டு நமக்குக்

கிடைத்திருந்தால் ஆண், பெண், சமூகம் பற்றிய அவருடைய சிந்தனைகளை முழுமையாக நாம் அறிந்திருக்கலாம். இவையேன்றி "உலகியல் விளக்கம்" என்னும் தனிநூலும் அவர் எழுதத் திட்டமிட்டு அதுவும் எழுதப்படவில்லை எனத் தெரிகிறது.

ஓர் அருளாளர், நல்ல சமுதாயம் உருவாக ஆவன செய்ய வேண்டும் என்னும் நோக்கில் பலவற்றையும் எண்ணி ஆய்ந்து குறித்து வைத்துச் சிலவற்றை எழுதிச் செயல்பட்டார் என்பது தனிமனித வாழ்வில் அவர் கொண்டிருந்த அக்கறையைத் தெளிவாகக் காட்டுகிறது.

## 5. உணவு - நல்வாழ்வு

*இன்பால் உலகங்கள் யாவும் விளங்கின*
*துன்பால் இறந்தவர் துன்பற்றுத் தோன்றினர்*
*அன்பால் அடியவர் ஆடினர் பாடினர்*

*- 5534*

வெளியுலகத்தில் ஒரு தனிமனிதன் எவ்வாறு பழக வேண்டும், எப்படிப் பொறுப்புக்களை ஏற்று நடத்த வேண்டும் என முன்னர் தனிமனித ஒழுக்கநெறிகளாகக் கூறிய வள்ளற்பெருமான், ஒருவன் உடல்நலத்தோடு இருந்தாலே இவை கூடும் என்று கருதினார். உணவு, நீர், உடற்பயிற்சி, உறக்கம், உடலுறவு, தொழில் என்று ஒரு தனிமனிதனைப் பாதிக்கும் பொருள்கள் பல. அவைபற்றித் தெளிவாக அறிந்திருந்தாலே வாழ்க்கையும் செம்மையுறும். இவற்றை உய்த்து ஆராய்ந்து அன்றே அவர் பல கருத்துக்களைக் கூறியுள்ளமை இன்றும் பொருந்துவதாகும்.

உணவு இல்லாமல் உயிர் வாழ்வில்லை. பசி தீர்க்கும் பேரறத்தில் இது பற்றிப் பல செய்திகள் கூறப்பட்டன. எதை எவ்வளவு உண்பது? அரிசி முதலிடம் பெறுகிறது. ஆனால் அதிகமாகக் கிழங்குகளை உண்ணக்கூடாது. பழங்களும் அதிகம் வேண்டாம் என்கிறார் வள்ளலார். பேயன், ரசதாளி சேர்க்கலாம் என்று அனுமதிக்கிறார். எஞ்சிய, பழைய காய்கறிகளைக் கொள்ளக் கூடாது. புளி, மிளகாய் குறைவாகவும் மிளகு சீரகம்

கூட்டியும் பயன்படுத்த வேண்டும். உப்பு குறைவாக இருப்பது நல்லது. எண்ணெய்ப் பண்டங்களை என்றாவது ஒருநாள் கொள்ளலாம். துவரம்பருப்புடன் நெய்சேர்த்து உண்பது நலம் பயக்கும். புலாலுணவு முற்றிலும் வேண்டாம். வாதபித்த சிலேத்துமங்களை அதிகரிக்கும் உணவுகளைக் கண்டறிந்து விட வேண்டும். இலைகளை நிறையக் கொள்ள வேண்டும் (உரை : 240,41).

இவை வள்ளலார் சொற்கள். எல்லாருக்கும் தெரிந்த சாதாரண செய்திகள். ஆனால் அவற்றுள் பொதிந்திருக்கும் நுட்பங்களை உணர்தல் வேண்டும். ஒருவருடைய உடம்புபோல இன்னொருவர்க்கு இல்லை. வாதம், பித்தம், சிலேத்துமம் என்னும் மூன்று குணங்கள் ஒவ்வொருவர் உடம்பினுள்ளும் உண்டு. அவை இருக்க வேண்டிய அளவுக்கு மேல் கூடினாலும் தீமை : குறைந்தாலும் தீமை (குறள் : 941). வாத உடம்பு, சிலேத்தும உடம்பு, பித்த உடம்பு என உடம்பும் மூன்றுவகை. எந்த உணவு பொருந்தும் எது சேராது என அவரவர் பட்டறிவால் தான் கண்டறிய வேண்டும்.

கிழங்குகள் வாதத்தை மிகுவிப்பன. பழங்களில் சில சிலேத்துமத்தைக் கூட்டிச் சளித்தொல்லையைத் தரும். தயிரும் கீரையும் நல்லதே யாயினும் இரவில் உண்டால் செரிப்பு தடைப்படக்கூடும். எண்ணெய்ப் பொருள்கள் பித்தம் மிகுவிக்கும் என்பது பலரும் அறிந்ததே. எனவே எதை யுண்ண வேண்டும் என்பதை அவரவரே காண வேண்டும். "மாறுபாடில்லாத உண்டி" என்று வள்ளுவர் கூறுவதன் அடிப்படையும் இதுவே (945). உணவுக்குச் சுவைதந்து நாக்கினைத் தூண்டும் பலவும் உடல் நலத்துக்குக் கேடேதரும்.

> "*இன்புறும் உணவு கொண்ட போதெல்லாம்*
> *இச்சுகத்தால் இனியாது*
> *துன்புறும் கொல்லோ என்றுளம் நடுங்கிச்*
> *சூழ்வெறும் வயிற்றொடும் இருந்தேன்.*" (3439)

இது வள்ளலாரின் அருட்பா. சுவைமிக்க உணவு கண்டு அவர் அஞ்சி நடுங்கினார் என்பதற்குச் சான்று. ஆதலால் தான் மக்களுக்குத் தம் பட்டறிவைக் கூறினார். இன்று "உணவியல்" என்ற ஒரு பிரிவு தனியாகப் பாடமாகப் பயில்விக்கப்படுகிறது. பெரிய மருத்துவமனைகளில் உணவியல் வல்லுநர் ஒருவர் இருந்து யாருக்கு என்ன உணவு என்று வரையறுப்பதும் தெரிந்த செய்தி.

எப்போது உண்பது? "துய்க்க துவரப் பசித்து" என்பது குறள் (944). "உண்" என்று கூடச் சொல்லவில்லை. "துய்க்க" என்று உணவை அனுபவித்து உண் என்று கூறுகிறது. "பசி கண்டவுடன் தடை செய்யாமல் ஆகாரம் கொடுத்தல் வேண்டும்" என்கிறார் வள்ளலார் (உரை : 239). பசிக்கும் முன் உண்ணக்கூடாது. பசித்தபின் உணவின்றி இருக்கவும் கூடாது. சுவைகருதி அதிகமாக உண்பதும், வெறுப்பால் குறைவாக உண்பதும் உடல்நலத்துக்குக் கேடு விளைவிக்கும்.

> "*விருப்பால் ஏறாமலும் வெறுப்பால் குறையாமலும் தராசுமுனைபோல் அளவறிந்து சமமாகப் புசித்தல் நல்லது*" (உரை : 246)

உண்ணும் அளவு பசிக்குத் தக்கதாக இருக்க வேண்டும். பசி ஒரு நெருப்பு. அதை அணைக்கும் அளவுக்கு உண்ணல் சாலும்.

> "*அக்கினி அளவுக்கு அதிகப்படாமலும் குறைவு படாமலும் அறிந்துண்ணுதல் வேண்டும். ஆயினும் ஒரு பிடி குறைந்த பட்சமே நன்மை*"
>
> (உரை:240)

என்பது அவர் கூற்று.

> "*தீயளவு அன்றித் தெளியான் பெரிதுண்ணின்*
> *நோயள வின்றிப் படும்*" (குறள் : 947)

இது ஒரு புதுவகை நெருப்பு ; எரியும் : உணவால் அணைக்கலாம். மீண்டும் அது தோன்றும். மறுபடியும் ..... இப்படிச் சாகும்நாள் வரை அளவோடு செய்ய வேண்டும். அந்தச் சமநிலை கொஞ்சம் மாறினும் கேடே. இதை வள்ளலார் "தராசுமுனை போல" என்று அழகாகக் குறிப்பது எண்ணத்தக்கது.

இரண்டு உணவுகளுக்கு இடையே குறைந்தது மூன்றுமணிநேர இடைவெளி வேண்டும் என்று மருத்துவ உலகம் இன்று கூறுகிறது. செரிப்பு நடைபெற்று முழுமையுற இது தேவை. பின்னர் உட்கவர்தல் நடந்து சத்துக்கள் இரத்தத்தில் கலக்கின்றன : எஞ்சிய சக்கை மலமாகத் தள்ளப்படுகிறது. இந்த உடலியல் நிகழ்வை வள்ளற்பெருமான்,

> "*மேற்படி அன்னத்தை ஏழரை நாழிகைக்குள் - அதிலுள்ள திரவாம்சத்தைப் பிரித்து உதிரமாக்கி ஊட்டுகின்றது. ஏழரைக்குமேல் மேற்படி சக்கையை மலபாகத்தில் தள்ளிவிடுகிறது. ஆதலால் ஆகாரம் கொண்ட ஏழரை நாழிகைக்கு மேல் ஆகாரம் கொள்ள*

*வேண்டும்.*" (உரை : 260) (2 1/2 நாழிகை - 1 மணி) இது ஒரு நல்ல குறிப்பு. உணவு கொள்ளும்போது இடையிடையே நீர்குடிப்பது, உண்ட உணவு நீர்த்துப் போகச் செய்து செரிப்பைப் பாதிக்கும். செரிப்பதற்குத் தேவையான நீர்கள் சுரப்பதும் மாறுபடும். இது உடல்நலத்துக்கு ஆகாது. இது இன்றைய மருத்துவர்கள் ஏற்று வலியுறுத்தும் செய்தி (Radiant Health, p:76). அதேபோலக் காய்ச்சிய நீரையே அருந்த வேண்டும் எனவும் வள்ளலார் கூறியதும் ஏற்புடையதே (உரை : 240). நீரிலுள்ள மாசுக்களால் நோய் பரவுவதை இதன்மூலம் தடுக்கமுடியும்.

உணவு, நீர் பற்றிக் குறித்த வள்ளலார் அடுத்து உடற்பயிற்சி பற்றிச் சில கருத்துக்களைக் கூறியுள்ளார். காலைக் கடன் முடித்த பிறகு இரண்டு மணி நேரம் கழித்து உடற்பயிற்சி செய்ய வேண்டும். உடலை அதிகம் வருத்தக்கூடாது. உடல் மெலியும் அளவுக்குப் பயிற்சி இருக்கலாகாது. "இலேசான முயற்சியில் வருத்தந்தோன்ற முயலுதல் வேண்டும்" (உரை : 239) இந்தச் சொற்கள் ஒன்றைத் தெளிவாக்குகின்றன. உடலுக்குப் பயிற்சி தேவை. ஆனால் உடலை வருத்துவதாகவோ, மெலியச் செய்யும் அளவுக்கோ அது இருத்தலாகாது. கடுமையான பயிற்சியும் உழைப்பும் நன்மைக்கு மாறாகத் தீமையே செய்யும். உண்ணும் உணவிலிருந்து கிடைக்கும் சக்தி உடல்வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்யும். அதிக உழைப்பு இந்த வளர்ச்சியையும் கெடுக்கும் என்ற கருத்து இன்றும் போற்றற்குரியது.

ஓய்வு பற்றியும் வள்ளற்பெருமான் எண்ணியிருக்கிறார். மதிய உணவுக்குப்பிறகு சிறது ஓய்வுகொள்ள வேண்டும். "சற்றே படுத்தெழுந்தல்லது வேறு காரியங்களில் பிரவேசிக்கப்படாது. ஆயினும் நித்திரை வரும்படி படுக்கப்படாது" என்று கூறியுள்ளார் (உரை : 241). அரிய கருத்து. இன்று மருத்துவர்கள் இதை வலியுறுத்துகின்றனர். நான்கைந்து மணிநேரம் தொடர்ந்து உழைத்த பிறகு, உணவுண்ட பின் சற்று ஓய்வு என்பது உடல்நலம் பேணச் சிறந்த வழி. ஆனால் பகல்தூக்கம் ஆகாது என்றும் வள்ளலார் எச்சரிக்கிறார். இது யாவரும் பின்பற்றத்தக்க அறிவுரையாகும்.

அதேபோல மாலையில் காலார நடந்து வருவது நல்லது. "சாயங்கால வெய்யில் தேகத்தில் படும்படி சிறிது உலாவுதல்

வேண்டும். காற்று மிகுந்தடிக்கில் அப்போது உலாவப்படாது. அன்றி கடின வெய்யில், பனி, மழை இவை தேகத்தில் பட உலவப்படாது" (உரை : 242)

உலாவுதல் நல்லதாயினும் தட்பவெப்பநிலைகளையும் நோக்க வேண்டும். அதிக வெய்யில், காற்று, பனி, மழை இவையிருக்கும்போது வெளியே செல்வது நலத்தைத் தருவதற்கு மாறாகத் தீமையே தரும் என்பது குறிப்பு.

வள்ளலார் எழுதிய "நித்திய கருமவிதி" என்னும் உரைநடைப் பகுதி இதுபோல அன்றாட வாழ்வு செம்மையாக அமையப் பல நல்ல குறிப்புகளை உள்ளடக்கிய படைப்பாகும். நல்ல உடல், நல்ல மனம் இவை பெற ஒருவனுக்கு வழிகாட்டும் அரிய பகுதியாகும். சில மட்டுமே இங்கு சொல்ல நேர்ந்தது. சன்மார்க்க அன்பர்கள் இந்தப் பகுதியை ஆழ்ந்து படிக்க வேண்டும். வள்ளலாரின் இன்னொரு அருள்முகத்தை, உடல்நலமும் மனநலமும் பெற்று மக்கள் வாழ வேண்டும் என அவர் கொண்டிருந்த அக்கறையை அது காட்டும்.

## 6. கல்வி

*வையமும் வானமும் வாழ்த்திட எனக்கருள்*
*ஐயறி வளித்த அருட்பெருஞ் ஜோதி*
*பொதுஅது சிறப்பது புதியது பழையது*
*என்று அதுவதுவாய்த் திகழ் அருட்பெருஞ்ஜோதி*

*- அகவல்.*

ஒரு மனிதன் உடல் நலத்தோடும் மன நலத்தோடும் வாழ வேண்டும் எனில் இவற்றுக்கெல்லாம் நல்ல அடிப்படை அவன் பெற வேண்டிய கல்வியே ஆகும். ஓதாதுணர்ந்தவராக வள்ளலார் வாழ்ந்தாலும் கல்வி பற்றிய சிந்தனைகளும் அவர்க்கு இருந்தன

19ஆம் நூற்றாண்டில் கல்விநிலை குழப்பமாக இருந்தது குருகுலக் கல்விமுறை மாறி, முறை சார்ந்த பள்ளி, கல்லூரிப் படிப்பு பரவிவந்த நேரம். இது ஆங்கில அரசின் நல்ல கொடைகளில் ஒன்று. ஆயினும் தமிழ் வழிக்கல்வி இல்லை. தமிழும் புறக்கணிக்கப்பட்டது. ஜி.யு.போப், கால்டுவெல் போன்ற

வெள்ளையர்கள் தமிழின் பெருமையைத் தமிழர்க்குச் சொல்லிய நேரம் அது.

எந்தப் பள்ளியிலும் எந்த ஆசிரியரிடத்திலும் வள்ளலார் முறையாகப் படிக்கவில்லை. ஆயினும் அவர் படிக்காதது ஏதுமில்லை. தொல்காப்பியம் உள்ளிட்ட இலக்கணங்களைக் கற்றுத் தேர்ந்திருக்கிறார்.

"........ *நின்னுடைய அருளால்*
*கற்றது நின்னிடத்தே பின்கேட்டது நின்னிடத்தே*" - 3044

என்பது அருட்பா. சென்னையில் வாழ்ந்தபோது கற்றோர் புகழும் பெருமையை அவர் பெற்றிருந்தார். "சென்னைப் பட்டினம் வித்வான் மகா.ரா.ரா.ஸ்ரீ இராமலிங்கபிள்ளை" என மற்ற புலவர்களால் அழைக்கப்படும் அளவு அவருடைய அறிவுப் புகழ் பரவியிருந்தது. கற்ற மேதைகளுடன் வாதமிட்டு வெல்லும் அளவு அவருக்கு வடமொழியறிவும் தமிழறிவும் நிறையவே இருந்தன.

இந்தப் பின்னணியில் கல்வி பற்றிய அவருடைய கருத்துக்களை எண்ணல் தகும். அருட்பாத் தொகுதியில் "குருட்டாட்டம்" என்று ஒரு பதிகம். பத்தொன்பது பாடல்களால் ஆனது. (ஆறாம் திருமுறை ப : 1094 - 1098) அறியாமையில் தடுமாறும் மாணவன் அறியாமை மிக்க ஓராசிரியனிடம் அகப்பட்டுத் திணறும் அவலநிலையைச் சற்று நகைச்சுவையுடனும் வருத்தத்துடனும் வள்ளலார் பாடியிருக்கிறார். கல்வியில் ஆர்வமில்லாது, புறஉலக இன்பங்களைத் தேடும் மாணவர்களுக்கு வாய்த்த ஆசிரியர்கள் ஒழுக்கமற்றவர்களாய், தெளிந்த அறிவில்லாதவராய் இருந்தனர். எல்லா மாணவரும் ஆசிரியரும் இப்படி இருந்தனர் என்று பொருளல்ல. சிறிய அளவாவது இத்தகைய நிலையில்இருந்தோரை அவர் கண்டிருக்கலாம்.

இந்தப் பதிகத்துக்கு அவர் வைத்த தலைப்பே அழகானது. திருமந்திரத்தில் கல்வி பற்றி வரும் ஒரு பாடலே இதன் கருவாகும்.

"*குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்*
*குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்*
*குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக்*
*குருடும் குருடும் குழிவிழுந்த வாறே.*" - திருமந்திரம்

மிக அழகான, ஆழ்ந்த பொருளுடைய பாடல். நல்லாசிரியர் இல்லை என்றால் குழியில் கண்ணைத் திறந்து கொண்டு கூட விழ வேண்டிவரும் என்று எச்சரிக்கும் பாடல்.

இத்தகைய சூழலில் ஒழுக்கம், அறிவு, தெளிவு மாணவரிடம் அன்பு, ஆகிய நற்பண்புகள் நிறைந்த ஆசிரியராக அவரே இருந்து வழிகாட்டினார். அவருடைய பலவகைப் பணிகளுள் ஆசிரியராய் இருந்தமையும் பெருமையுடன் குறிக்கத்தக்கது. பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் அவர் பாடம் நடத்தியுள்ளார். சிறுவர்கள் பயிலும்போது குறும்புகள் செய்தால், தொடக்க நிலையில் அடித்து இருக்கிறார்.

"*தொகுப்புறு சிறுவர் பயிலுங்கால்*
*பயிற்றும் தொழிலிலே வந்தகோபத்தால்*
*சகிப்பிலாமையினால் அடித்தனன்*" (3445)

என்று அவரே கூறி, பின்னர் அதற்காக வருந்தியுமிருக்கிறார். ஆதலால் கற்பிக்கும்போது பிள்ளைகளை அடிக்கக்கூடாது என மற்றவர்களை வற்புறுத்தியுமுள்ளார்.

தொழுவூர் வேலாயுத முதலியார், பொன்னேரி சுந்தரம்பிள்ளை போன்ற பலர் அவரிடம் முறையாகப் பாடம் கேட்டனர். தொழுவூரார் பின்னாளில் உபயகலாநிதிப் பெரும்புலவர் என்னும் பட்டம் பெற்றுச் சிறந்தார். மாநிலக் கல்லூரியில் தமிழாசிரியராகவும் இருந்தார். நல்ல மாணவப் பரம்பரையை உருவாக்கிய பெருமை வள்ளற்பெருமானுக்கும் உண்டு. "படிக்க வேண்டும்" என்று சொல்லி யார் உதவி கேட்டு வந்தாலும், இயன்ற வகையில் எல்லாம் அவர் உதவினார்.

"*சிரஞ்சீவி நமசிவாயப்பிள்ளை அவ்விடம் படிக்க வேண்டும் என்று வருகிறான். அவனைப் படிப்பிக்கிற விஷயத்தில் மாத்திரம் அடிக்கடி விசாரிக்க வேண்டும்*" (உரை : 363)

"*சிரஞ்சீவி குமாரசாமி அவ்விடம் வருகிறபடியால் அவனுக்குப் படிப்பும் முயற்சியும் ஊதியமும் உண்டாகிறவகை ஆராய்ந்து கூட்ட வேண்டும்.*" (உரை : 364)

சென்னை சென்று படிக்க வேண்டும் என விரும்பிய இரண்டு மாணவர்க்கு உதவுமாறு வள்ளலார் நண்பருக்கு எழுதிய கடிதங்களின் வரிகள் இவை. பிறருக்குக் கல்வியில் உதவ வேண்டும் என்னும் அவருடைய ஆவலை இவை காட்டுகின்றன.

"*குமாரசாமி பிள்ளை படிக்க வேண்டும் என்று விரும்பியிருக்கிறபடியால் அவனுக்கு எந்த விதத்தில் படிப்பித்தால் படிப்பு வருமோ அந்த விதத்தில் படிப்பிக்க*

*வேண்டும். சிரஞ்சீவி நமசிவாயத்துக்கும் இதுவே"* **(உரை : 364)**

இது ஒரு கடிதத்தின் இன்னொரு பகுதி. அந்தச் சென்னை நண்பர் இறுக்கம் இரத்தின முதலியார் ; ஆசிரியராக இருந்தவர். அவருக்குக் கற்பித்தல் முறைகள் தெரிந்திருக்கும். ஆதலால் எப்படிப் படிப்பித்தால் படிப்பு வருமோ அப்படிக் கற்பிக்கச் சொன்னார். ஏதோ ஒரு வகையில் மாணவர் கல்விபெற வேண்டும் என்ற அவருடைய அக்கறையை இதில் காணலாம். படிப்பு - முயற்சி - ஊதியம் என்ற மூன்றைக் குறிப்பிட்டு அவற்றின் தொடர்பைச் சுட்டியதும் எண்ணத்தக்கது. படிப்புக்கேற்ற ஊதியமில்லையெனில் ஆர்வம் போய்விடும். முயற்சி இல்லையெனில் படிப்பு வராது என்ற கருத்துக்கள் தெளிவாகின்றன. ஏதேனும் ஒரு வேலையை மாணவருக்குச் செய்வித்துப் பின்னர் பாடமும் சொல்லியிருக்கலாம். பயன்முறைக் கல்வி பற்றிய அவருடைய சிந்தனைக்கு இது சான்று.

பெண்களுக்குக் கட்டாயம் நல்ல கல்வியை அளிக்க வேண்டும் என்பது வள்ளலாரின் துணிந்த முடிபு. "ஏட்டையும் பெண்கள் தொடுவது தீமையென்று" பலர் எண்ணியிருந்ததைப் பாரதி சாடியதற்கு வள்ளலார் புரட்சிக் குரல் கொடுத்தார். பெண்ணை அறிவற்றவளாக இருத்தியதில் ஆணுக்குப் பெரும்பங்கு உண்டு. பெண்ணை வீட்டில் இருக்கும் அஃறிணைப் பொருள்களில் ஒன்றாகவே சமுதாயம் கருதியது. நூல்கள் பலவும் அப்படியே சொல்லி வந்தன.

இந்தச் சூழலில் வள்ளலார்,

*"பெண்களுக்கு யோகம் முதலிய சாதனங்கள் அவசியம் கற்பிக்க வேண்டியது. மேலும் பேதமற்று அபேதமாய்ப் படிப்பு முதலியவையும் சொல்லிக் கொடுக்க வேண்டியது. தத்துவம் முதலியவற்றின் சொரூப ரூபாதிகளைத் தெரிவித்துச் சரளமாக்கினால் பின் தடையின்றி நம்முடைய துரிய ஆசிரம காலத்தில் ஒத்திருப்பார்கள்"* (உரை : 322)

என்று கூறினார். வடமொழி கலந்த தமிழில் உரைநடை எழுதுவது அக்கால வழக்கம். அதன்படி இதில் வடசொற்கள் உள்ளன. ஆனால் சில செய்திகள் தெளிவாக உள்ளன.

ஆண் பெண் வேறுபாடில்லாமல் எல்லாப் படிப்பையும் பெண்களுக்கும் சமமாகக் கொடுக்க வேண்டும். (பேதம் -

வேற்றுமை. அபேதம் - வேறுபாடின்மை). தவிர யோகம் முதலிய கல்வி தாண்டிய பயிற்சிகளையும் தர வேண்டும். சாதனம், மன அமைதியையும் ஆன்மிக நிறைவையும் தருகின்ற வழி. மூன்றாவது இவற்றுடன் நின்றுவிடாமல் தத்துவங்கள் பற்றியும் தெளிவாகப் போதிக்க வேண்டும். "ஸ்வரூப ரூப" என்றும் தொடர் தத்துவ உட்பிரிவுகளின் அமைப்பை - கட்டமைப்பைக் குறிக்கும்.

பெண்மேம்பாடு கருதி வள்ளற்பெருமான் கூறிய இந்தக் கருத்துக்கள் இன்றும் முழுமையாக நடைமுறைக்கு வரவில்லை என்பது வருத்தத்துக்குரியது. ஏட்டுக் கல்வி வேண்டும். பெண்ணுக்கு யோகப்பயிற்சி வேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாகத் தத்துவ சிந்தனையும் வேண்டும் என அவர் கூறுவது அவருடைய பேராவலைக் காட்டும். கூடவே "தெய்வம் தொழாஅள் என்னும் தேவர் குறளால் இதை அறிக" என்று அந்தப் பகுதியை முடிக்கிறார். அடிமையாய், அறிவில்லாத சடப்பொருளாய் மனைவியிருந்து கணவனை வழிபடுவதைக் குறள் குறிக்கவில்லை. மாறாக, எல்லாம் அறிந்தவளாய் அவனுக்கு ஒத்து நின்று ஒரு பேரறத்தில் சமபங்கு பெறுகிறாள் என்று குறளுக்கே புத்துரை வகுக்கிறார் வள்ளலார். சமஉரிமை பெற்ற பெண்ணாக, காதலன் ஒருவனைக் கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் பங்குபெறும் தோழியாக, அறிவு வடிவமாகப் புதுமைப் பெண்ணைப் பாரதிக்கு முன்பே எண்ணிய பெருமை வள்ளலாருக்குண்டு.

இந்த நோக்கில் அவர் சில கல்வி நிலையங்களை நிறுவத் திட்டமிட்டிருக்கிறார். 1867இல் தருமச்சாலை ஏற்படுத்திய போது மக்களுக்கு உணவிடல் மட்டும் போதாது ; கூடவே அறிவு பெருக்கவும் வழிகளைப் பற்றி அன்பர்களுடன் கலந்து பேசியிருக்கிறார்.

> "*சமரச வேத தருமச்சாலையைச் சார்ந்த வைத்தியசாலை, சாஸ்திர சாலை, உபகாரச் சாலை, விருத்திசாலை, உபாசனா சாலை, யோகசாலை, விவகார சாலை - இவைகளைக் குறித்துச் சமரச வேத சன்மார்க்க சங்கத்தவர்கள் ஏற்படுத்திக்கொண்ட கையொப்ப ஏற்பாடு*" (உரை : 426)

சாஸ்திர சாலை, உபாசனா சாலை, யோக சாலை என்ற சொற்கள் மூலம் சாத்திரம், வழிபாடு, யோகம் ஆகியவை

தொடர்பாகப் பள்ளிகள் நிறுவ அவர் திட்டமிட்டிருந்தது தெளிவாகிறது.

அதே போலச் "சன்மார்க்க போதினி" என்ற ஒரு பள்ளி நடத்தப்பட்டது பற்றிய குறிப்பு கிடைத்துள்ளது. இதன் அறிவிப்பிலிருந்து மூன்று செய்திகள் தெரிய வருகின்றன (உரை : 428).

*1. சிறுவர் முதல் பெரியோர்கள் வரை இங்கு பயிலலாம்.*
*2. தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் கற்பிக்கப்படும்.*
*3. தொழுவூர் வேலாயுத முதலியார் போன்ற அறிஞர்கள் ஆசிரியராக இருந்து நடத்துவர்.*

இவை சில நோக்கங்களைப் புலப்படுத்துகின்றன. ஆங்கிலக் கல்வி பரவிவந்த அந்நாளில் அதைப் புறக்கணிப்பதற்கில்லை. பிறநாட்டு நல்லறிஞர் நூல்களும் அறிவியல் கருத்துக்களும் தமிழர்க்குத் தெரிய வேண்டும் என்று வள்ளலார் கருதியிருக்கக் கூடும். ஆங்கிலத்தை ஒரு பாடமாக அமைத்திருக்கலாம்.

தமிழைக் கற்பித்தல் இயல்பானது. அக்காலத் தேவைக்கு ஆங்கிலம் வேண்டியிருந்தது. ஆனால் ஆரியம் என்னும் சமஸ்கிருதத்தையும் கற்பிக்க முயன்றது சிறப்புக்குரியது. ஞானசாத்திரங்கள், தத்துவ நூல்கள், வேதங்கள் அந்த மொழியில் தான் அதிகமாக உள்ளன. காவிய வளங்களும் உள்ள மொழியாக அது இருந்தமையும் பாடத்திட்டத்தில் அதைச் சேர்க்கக் காரணமாயிருந்திருக்கும். அவர் வடமொழி கற்றவர். அதனுடைய செழுமையை அறிந்தவர். ஆதலால் தமிழர் அதைக் கற்க வேண்டும் என்று அறிவுத் தாகத்துடன் சொன்னார்.

பள்ளியில் சேர வயது வேறுபாடில்லை. அறியாமையை நீக்கிக் கொள்ள வயது ஒரு தடையன்று. எல்லோரும் அறிவுபெற வேண்டும் என்பதே அவருடைய நோக்கம். "முதியோர் கல்வி தர முற்பட்ட சான்றோர்" என ஊரன் அடிகள் வள்ளலாரைப் பாராட்டுவது முற்றிலும் பொருந்தும்.

"என்னொருவன் சாந்துணையும் கல்லாதவாறு?" (வர : 369) என வள்ளுவர் கேட்கவில்லையா?

ஆங்கிலம் கற்க விரும்பினவர்க்கும் வாய்ப்பு. அதற்காக மரபு வழிப்பட்ட பெருமையை இழக்க வேண்டியதில்லை. தக்க

ஆசிரியர்களை அமர்த்தித் தமிழ், சமஸ்கிருதம் உள்ளிட்ட மொழி கற்பிக்கவும் ஏற்றம் கொடுத்தனர். தக்காரைத் தேர்ந்தெடுக்கும் மதி நுட்பத்தை வள்ளலார் பெற்றிருந்தார். ஆசிரியர்களின் திறமைகள், தகுதிகளைச் சொல்லிப் பள்ளியின் பெருமையையும் மாணவர் பெறக் கூடிய நன்மையையும் குறிப்பால் உணர்த்திய நுட்பம் எண்ணி மகிழத்தக்கது.

மூன்றாவதாகச் "சமரச வேத பாடசாலை" என இன்னொரு பள்ளி நிறுவ அவர் திட்டமிட்டிருந்தார் (உரை : 431,432). மேற்சொன்ன பள்ளிகள் போலன்றி இது சற்று வேறுபட்ட தன்மையுடையது.

*1) பதினைந்து வயதுக்கு மேற்பட்டோரே இதில் சேரத் தகுதியுடையவர்கள்.*

*2) நல்லறிவு, கடவுள்பக்தி, உயிரிரக்கம், பொது நோக்கம் முதலான சன்மார்க்க ஒழுக்கமுடையவராயிருக்க வேண்டும்.*

*3) பயிற்சி பெற்றவர்க்குக் குடும்பத்திற்குத் தக்கபடி மாதம்தோறும் பொருளுதவி தரப்படும்.*

*4) காலை மாலை இரண்டிரண்டு மணி நேரம் படிக்க வேண்டும்.*

இந்த நான்கு விதிகளும் பள்ளியின் அமைப்பு பற்றிய தெளிவு தருகின்றன. அது பயிற்சிப்பள்ளி போன்றதாக இருந்திருக்க வேண்டும். அதனால்தான் வயதுவரம்பு, குறிக்கப்பட்டிருக்கிறது. தவிர நல்லறிவு போன்ற ஒழுக்கத் தகுதிகளையும் சேர்வோர்க்கு விதித்தார். ஆசிரியர்கள் வெளியே செல்லும்போது மட்டுமல்லாமல், உள்ளே வரும் போதே தகுதியுடையவர்களாக இருக்க வேண்டும் என்பது நல்ல கோட்பாடு. ஆதலால் இந்தப் பள்ளி எல்லார்க்கும் உரியதன்று என்பதும், அடிப்படைக்கல்வி ஓரளவு பெற்று ஒழுக்கம் உடையவர்களே இதற்கு உரியவர்கள் என்பதும் தெளிவாகின்றன.

இது பயிற்சிப் பள்ளியாக இருந்திருக்கலாம். இதில் "சிலகாலம் வாசித்து ஒருவாறு வாசிப்பில் பயிற்சி நேரிட்டால்" என்னும் சொற்கள் இதை உறுதிப்படுத்துகின்றன. (உரை : 432) தவிர, பயிற்சி பெற்றவர்களுக்கு அவர்கள் குடும்பத்திற்குத் தக்கபடி மாதம்தோறும் பொருளுதவி தரப்படும் என்னும் குறிப்பும் கவனிக்கத்தக்கது. இன்று தரப்படும் படிப்புதவித் தொகை போன்றதாக இது இருந்திருக்கும். அரசு சார்பாக அல்லாமல், பிறரைத் தாம் சார்ந்து வாழ்ந்தாலும்,

படிப்பவர்களுக்கு, தக்கவர்களுக்குப் பண உதவியும் தரவேண்டும் என்ற அவருடைய சமூக சிந்தனை எவ்வளவு தொலைநோக்குடையது! அந்த உதவிப்பணமும் இன்றுபோல எல்லாருக்கும் சமபங்காக அன்று : பயிற்சிக்கேற்ப, குடும்பத்துக்குத் தக்கவாறு மாதந்தோறும் தரப்படும் உதவித்தொகை என்பது ஆழ்ந்த பொருளுடையது. படிப்பவனுக்கும் படிக்காதவனுக்கும் இன்று ஒரே வகையில் தரப்படுவது சரியா என்ற வினாவைக் கூட இந்தக் குறிப்பு எழுப்புகிறது. அவரவர் தகுதிக்கும் படிப்புக்கும் ஏற்றவாறு "வரிசையறிந்து ஈதல்" சங்கத் தமிழ்ப்பண்பாடு அல்லவா? தவிர, நல்ல சமுதாயத்தில் தனிமனிதனின் தேவையுடன் அவன் குடும்பத்தின் தேவையையும் கணக்கில் கொள்ள வேண்டும் என்பதும் அரிய உண்மையே.

இந்தப் பள்ளிகள் தொடர்ந்து நடத்தப்பட்டதாகச் சான்றுகள் இல்லை. அவருடைய இறுதிக் காலத்திலேயே சன்மார்க்க அன்பர்களிடையே கருத்து வேறுபாடுகள் தோன்றிச் சிலர் அவருடைய எண்ணங்களுக்கு மாறாக நடந்து அவரும் எச்சரித்திருக்கிறார். இவை நின்றுபோனது தமிழனுடைய தவக்குறைவு. அவை தொடர்ந்திருந்தால் இன்று ஆல்போல் தழைத்து இராமகிருஷ்ண மிஷன் போல உலகெங்கும் பரவியிருக்குமே என்ற ஏக்கம் மேலிடுகிறது.

பள்ளிகளே யல்லாமல் தனியாகத் திருக்குறள் வகுப்புகள் நடத்தவும் அவர் ஏற்பாடு செய்திருந்தார். எல்லாத் தரத்தினரும் எல்லா வயதினரும் திருக்குறள் கற்க வந்தனர். பெரும்புலவர்களுக்கு வள்ளலாரே ஆழமாகப் பாடம் நடத்தினார். மற்றவர்களுக்குத் தொழுவூரார் போன்றவர்கள் வகுப்பு எடுத்தனர். திருக்குறளில் ஆர்வம் கொண்டவர்கள் சிலராக இருந்து சிலருக்கும் மட்டுமே கற்பித்து வந்த அந்நாளில் திருக்குறளைப் பொதுமக்களுக்கும் உரிமையாக்கிப் பரப்ப முற்பட்டவர் வள்ளலார்.

அறிவு நாட்டமிக்க கல்விப்பணி தொடர்பாகப் பதிப்பு மற்றும் பத்திரிகையாசிரியராக இருந்து அவர் செய்த பணிகளும் குறிக்கத்தக்கன. இவை கல்விப்பரப்பில் திறன்மிக்க ஊடகங்கள். ஆசிரியருடன் நேரடித் தொடர்பு இல்லாமலே ஒருவர் அறிவுபெறத் துணை செய்யும் வாயில்கள். 1851இல் அவர்

ஒழிவிலொடுக்கம் என்னும் நூலைப் பதிப்பித்தார். அப்போது அவருக்கு வயது இருபத்தெட்டு. அந்நிலையில் அவர் பெற்றிருந்த இலக்கண இலக்கியப் புலமையை இந்தப் பதிப்பு காட்டுகிறது. பின்னால் தொண்டமண்டல சதகமும், சின்மய தீபிகை என்னும் நூலும் அவரால் பதிப்பிக்கப்பட்டன. 1858இல் சென்னையை விட்டு வந்த பின்னர் இந்தப் பணி நின்று போயிற்று. 1867இல் அவர் நாளில் அவர் அன்பர்கள் திரு அருட்பாவின் முதல் நான்கு திருமுறைகளை வெளியிட்டனர். வடலூரில் வாழ்ந்தபோது அழைப்புக்கள், அறிவிப்புக்கள், கட்டளைகள் எனத் துண்டுத்தாள் வடிவத்தில் அச்சிடப்பட்டு மக்களிடையே கருத்துப் பரப்பலும் நடந்துள்ளது.

வடலூரில் இருந்து "சன்மார்க்க விவேக விருத்தி" என்னும் திங்களிதழ் தொடங்க ஏற்பாடு நடந்துள்ளது.

> "*உலகில் வழங்கும் பிறப்புகளுள் உயர்பிறப்பாகிய மனிதப் பிறப்பைப் பெற்றுக்கொண்ட நாமனைவரும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பொருளின் அனுபவங்களைக் காலமுள்ளபோதே அறிந்து அனுபவித்தல் வேண்டும். அங்ஙனமறிந்து அனுபவிப்பதற்குச் சன்மார்க்க விவேக விருத்தியே சாதனமாதலின் அதனை அடைதற்குத் தக்க நன்முயற்சிக்கோர் முன்னிலையாகச் சன்மார்க்க விவேக விருத்தி என்னும் பத்திரிகையொன்று வழங்குவிக்கும் நிமித்தம்*" (உரை : 427)

என்று அதன் நோக்கம் பற்றி வெளியிட்ட அறிவிப்பு கூறுகிறது. வள்ளலார் உள்ளிட்ட 49 பேர் இதற்கு மாதம்தோறும் பொருளுதவி செய்ய இசைந்து கையொப்பம் இட்டுள்ளனர். அவர்களுள் "பரங்கிப்பேட்டை காதர் சாயபு" என்ற முஸ்லிம் அன்பரும் இருந்துள்ளார். சமயப்பொது என்பதைச் சொல்லாலன்றிச் செயலாலும் மெய்ப்பித்தவர் வள்ளலார் என்பதற்கு இது ஒரு சான்று. கூர்த்தநோக்கும் மக்கள் நலநாட்டமும் அவருடைய ஒவ்வொரு செயலிலும் இருந்துள்ளன.

ஆசிரியர், உரையாசிரியர், கவிஞர், பள்ளி நிறுவனர், பத்திரிகையாசிரியர் எனப் பன்முகங்களில் அவருடைய கல்விப்பணி இருந்துள்ளது. எந்தப் பின்புலமும் பின்வலியும் இன்றித் தன்வலியும் துணை வலியும் மட்டுமே கொண்டு அந்நாளில் இத்தனையும் அவர் செய்தார் அல்லது செய்ய

முற்பட்டார் என்பது வியப்புக்குரியது. அறிவு நாட்டத்தில் அவர் பழைமையை முற்றும் தள்ளவும் இல்லை ; புதுமையை முற்றிலும் கொள்ளவும் இல்லை. ஆங்கிலக் கல்வி பரவினால் ஆட்சி செய்வோர் அவர்களுடைய பண்பாடு, மரபு, நாகரிகம் போன்றவற்றையே பரப்பத் திட்டமிடுவர். (மெக்கலே கல்வி முறை அப்படி அமைந்ததே என்பது வரலாறு). ஆதலால் தமிழ்ப்பண்பாடு அழியாமல் இருக்க வேண்டும் என்பதை மையமாகக் கொண்டு, ஆயினும் ஆங்கிலம் கற்க வேண்டும், அறிவியல் கற்பிக்க வேண்டும் என்ற எண்ணங்களுடன் அவர் திட்டமிட்டது அவர் கொண்ட வேட்கையைக் காட்டும். உணவுதந்து படிப்பித்தல், படிப்புக்கேற்ற உதவித்தொகை, குடும்பத்துக்குப் பொருளுதவி, மும்மொழிப் பாடத்திட்டம், ஏட்டுக் கல்வியுடன் யோகம் முதலியவற்றையும் கற்பித்தல் என்று பல வடிவமைப்புகளை அன்றே அவர் வடிவமைத்தார் என்பது எண்ணிப் போற்றற்குரியது.

# சமயப் பணிகள்

## 1. சன்மார்க்கம்

*"கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக*
*அருள்நயந்த நன்மார்க்கர் ஆள்க - தெருள்நயந்த*
*நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைந்து*
*எல்லோரும் வாழ்க இசைந்து" - 5618*

பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சமயநிலை பற்றி முன்னர் கூறப்பட்டது. சமயம், சமூகம் எதிலும் அன்று அமைதியில்லை. பரவி வந்த அறிவுப் புதுமையின் தாக்கம் வழிவழி வந்த பழைமையைக் கடுமையாகத் தாக்கியது. மரபு நெறி பிறழாமல், ஆனால் சடங்குகளைக் கழித்து எல்லாரையும் அணைத்துக் கொண்டு சமயத்தை எளிமைப்படுத்த வேண்டிய கட்டாயச் சூழல் ஏற்பட்ட வேளையும் அதுவே. ஒரு வகையில் இது நல்லதாயிற்று. இயக்கமற்று உறங்கிக்கிடந்த சமய உணர்வு விழித்தெழுந்தது. குறை கூறப்பட்ட போதே மக்கள் தம் பழம்பெருமையை உணர்ந்தனர். அதைக் காலத்துக் கேற்றவாறு புதுமைப்படுத்த வேண்டும் என்ற உணர்வு சில நல்லோருக்கு ஏற்பட்டது. மரபு இறுக்கமானதன்று : என்றுமே மாறாது எனச் சொல்ல முடியாது. "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்றும் நடப்பதே. பழையவற்றுள் எல்லாம் கழிவதுமில்லை : அப்படியே புதியவற்றுள் எல்லாம் புகுவதுமில்லை. தேவைக்கேற்ப மாறுதல்கள் நிகழவே செய்யும். ஆனால் மரபு வழிப்பட்ட அடிப்படைப் பண்புகள் ஆணிவேர் போன்றவை ; அவை மாறுவதில்லை.

வள்ளற்பெருமான் மேற்கூறிய நல்லோருள் மிகச் சிறந்தவராக இருந்து இப்பணியை ஒல்லும் வகையால் நிறைவேற்றினார். மனித வாழ்க்கைக்கும் இறையுணர்வுக்கும் தொடர்பில்லாதவாறு இருந்த ஒரு செயற்கை நீக்கப்பட வேண்டும்: மனிதர்களுக்கிடையே இருந்த வேறுபாடுகளும் நீங்க வேண்டும்.

இவையிரண்டும் வேறல்ல : ஒன்றே. சமூகத்தில் மேல்நிலையில் இருந்தவர்கள் - மடாதிபதிகள் உட்பட - ஏழைகளுக்கு உதவ முன்வராதபோது உயிர்க் கொள்கையான சமயத்தை அவர் கையில் எடுத்துக் கொண்டு சீர்திருத்தப் பணிகளையாற்ற முற்பட்டார். ஒருபுறம் பழைமைவாதிகளாகிய வைதிகர்கள் எதிர்ப்பு : மற்றொரு புறம் நாத்திகர்களின் எதிர்ப்பு. இரண்டையும் ஒருங்கே எதிர்நின்று ஏற்று மூன்று கோட்பாடுகளைச் சமயஞ்சார்ந்து அன்று அவர் வலியுறுத்தினார்: பரப்பினார் : அவற்றுக்காகப் பலவகையில் பாடுபட்டார். சன்மார்க்கம், அருட்பெருஞ்சோதி, உயிரிரக்கம் என்னும் இந்த மூன்றும் அவருக்கு, அவர் இயக்கத்துக்கு முப்பெரும் தூண்கள் என்பதில் ஐயமில்லை.

சன்மார்க்கம் இம்மூன்றனுள் முதலிடம் பெறுகிறது. வள்ளலார் என்னும் அவர் திருப்பெயரைச் சொன்னவுடன் சன்மார்க்கம் என்ற சொல் இணைந்து வருமளவு அவர் அருள்நெறியில் பிணைந்துவிட்டது.

சன்மார்க்கம் என்பது வடசொல். சத் + மார்க்கம் எனப்பிரியும். நல்வழி, நல்லாறு, மெய்வழி, மெய்ப்பாதை என இதற்குப் பொருள் விரிக்கலாம். அ.லெ.நடராசன்,

> "*சன்மார்க்கம் என்பதற்கு நிலையான ஒழுக்கம் என்பதே பொருள். தத்துவங்களையும் சடங்குகளையும் கடந்து தொழில்படுகிற நிலையான ஒழுக்கங்களையே அடிகள் சன்மார்க்கம் என்று குறிப்பிடுகிறார்கள்*" (வள்ளலார் வாழ்வும் வாக்கும், ப : 235)

என்று இதற்கு விளக்கம் கூறுகிறார். இது நல்ல கருத்து. "நிலையான ஒழுக்கம்" என்பதில் பொருளுண்டு. வள்ளலார்,

> "*எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாகிய அறிவுநூல் முடிவான நான்காவது மார்க்கம் ..... மேற்படி மார்க்கம் நான்காவன : தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம்*" (உரை : 298)

என்று தெளிவுபடுத்தியுள்ளார். அடிமை, மகன்மை, தோழமை, ஞானம் என வரும் நெறிகளில் நான்காவது என்பதும் எல்லாச் சமயங்களுக்கும் பொதுவானது என்பதும் பிழிந்த கருத்தாகும். இந்தக் கருத்துக்கு மேலும் வலிமையூட்டுவது போலப் பின்னாளில் திரு.வி.க. "எல்லா உயிரிலும் வீற்றிருக்கும்

பரம்பொருள் ஒன்றே என உணர்வது சன்மார்க்கம்" என்று கூறியுள்ளார். (சன்மார்க்க போதத் திறவு, ப : 77)

வள்ளலார் சமரச சுத்த சன்மார்க்கம் என்று இதை விரிவுபடுத்தி வேதாந்தம், சித்தாந்தம் என்னும் எல்லா அந்தங்களையும் தாண்டியது சமரசம் : சுத்தம் ஒன்றும் இல்லாதது .... சமய மதங்களைத் தாண்டியது என்று குறித்துள்ளார் (உரை : 302). சன்மார்க்கம் பழைய சொல் : சமரச, சுத்த என்ற முன்னடைகள் இரண்டையும் அவர் சேர்த்தார்.

வள்ளற்பெருமான் தாயுமானவரிடமிருந்து இந்த விழுப்பத்தைப் பெற்றிருக்க வேண்டும்.

"*சைவமுதலாம் அளவில் சமயமும் வகுத்துமேல்*
*சமயங்கடந்த மோன*
*சமரசம் வகுத்தநீ உன்னை நான் அணுகவும்*
*தண்ணருள் வகுக்க இலையோ?*"

(சின்மயானந்த குரு : 29)

"*வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற*
*வித்தகச் சித்தர் கணமே*" (சித்தர்கணம் : 1)

என்பன தாயுமானவர் பாடல்கள்.

"*வேதாந்த சித்தாந்த சமரசமும் வருமோ?*" (3378) என்றும்
"*வேதாந்த நிலையாகிச் சித்தாந்தத்தின்*
*மெய்யாகிச் சமரசத்தின் விவேகமாகி*" (2074)

என்றும் வருவன அருட்பா வரிகள். இரண்டுக்கும் உள்ள சீரான பிணைப்பு கூர்ந்து நோக்கத்தக்கது.

பெரியார் ஈ.வே.ரா. சமரச சன்மார்க்கம் என்பது, "கடவுள், மதம், சாதி, பணம், தொழில் முதலிய எல்லாம் சமரச சன்மார்க்கத்துக்குப் பகையானவை : மனிதரை வேறுபடுத்துபவை. இவை தொடர்பான எல்லாக் கட்டுப்பாடுகளையும் அழிப்பது சமரச சன்மார்க்கம்." (பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள், ப : 1407) எனக் கூறியுள்ளார். கடவுள் என்ற ஒரு சொல்லை நீக்கிவிட்டால் பெரியாரின் இலக்கணம் முற்றிலுமாக வள்ளலார் கருத்துக்கு அரண் செய்கிறது.

சன்மார்க்கம் என்பது பழைய சொல் : வழக்கில் வழிவழியாக வருவதும் ஆகும். திருமந்திரத்தில் இதன் ஆட்சியைக் காண்கிறோம்.

"வந்த மடம்ஏழு மன்னும் சன்மார்க்கம்" (பாயிரம் : 38) என்பது போலப் பல இடங்களில் இதன் ஆட்சியுண்டு. திருமந்திரம் சன்மார்க்கத்தை ஞானநெறி என்று பேசுகிறது. சமயங்கடந்தது எனச் சொல்லவில்லை. ஞான அனுபூதியில் இன்பம் பெற்றுத் தானும் அவனும் ஒன்றாதல் சன்மார்க்கம் என்றும் அது பேசுகிறது.

*"தான் அவன்ஆகி தான் ஐந்தாம் மலம்செற்று*
*மோனமது ஒழிப்பான் முத்தர் ஆவதும்*
*ஈனமில் ஞானானுபூதியில் இன்பமும்*
*தான் அவனாய் உறலான சன்மார்க்கமே".* (பா : 1483, 1481)

இவற்றிலிருந்து சன்மார்க்கம் ஞானநெறி : அதுவே நன்மார்க்கம். யாரிடத்தும் பகைமை கொள்ளா திருப்பது. இறைவனுடன் ஒன்றுவிப்பது என்னும் செய்திகள் புலனாகின்றன. எந்த வகையான மார்க்கத்தைப் பின்பற்றுவோராயினும் பகைமை கொள்ளாதிருப்பதே சன்மார்க்கம் என அமுதசாகரம் கூறுகிறது.

வள்ளலார் பாடல்களில் இக்கருத்துக்களுக்கு உடன்பாடாகப் பல சொற்கள் காணப்படுகின்றன. "வன்பெலாம் நீக்கி நல்வழியெலாம் ஆக்கி" உயிர்களை அன்பின் வழிச் செலுத்துவது சன்மார்க்கம் (3676). "இயற்கைத் தொன்மையாம் சுத்த சன்மார்க்கம்" (3738) என்று அதனுடைய பழைமையையும் இயற்கையான தன்மையையும் வள்ளலார் பாடி மகிழ்கிறார். "மலைவறு சன்மார்க்கம்" (3768) ; "கொல்லா நெறியது கோடா நிலையது" (4053) ; "துதிசெயும் முத்தரும் சித்தரும் காணச் சுத்த சன்மார்க்கம்" (4961) என்று பல பாடல்கள் அதனுடைய தொன்மை, சடங்குகளைக் கடியும் நிலை, கொல்லாமை பூணல் ஆகியவற்றை வலியுறுத்துகின்றன. அன்பின் வழி நிற்போர் ஞானம் பெறலாம் என்பது குறிக்கத்தக்க செய்தி. ஞானத்தைத் தேடிப்போக வேண்டியதில்லை. கொல்லா நிலையில் அன்பினைப் பேணினால் போதும் : அது தானாக வரும் என்று எளிமையாகச் சொன்னார். சினம் தவிர்த்து, சத்துவ குணமுடையராய் இருந்தால் போதும் : சன்மார்க்கம் வரும்.

*"சத்துவ நிரம்பும் சுத்த சன்மார்க்கத்*
*தனில் உறும் அனுபவம்"* (4031)

என்று அவர் பாடுகிறார்.

சன்மார்க்க நெறி நிற்பவர்களுக்குப் புல்லறிவு தானே போகும் : நல்லறிவு மலரும். நல்லறிவு வந்தால் உலகம் முழுதையும் இறைவன் திருக்கோயிலாகக் காணும் முதிர்ச்சி ஏற்பட்டு இன்பம் கிடைக்கும்.

"*வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்*"

என்று குறள் கூறுகிறது.

"*மன்செய்து கொண்ட சன்மார்க்கத்தில் இங்கே*
*வான்செய்து கொண்டது நான் செய்து கொண்டேன்*"

என்று வள்ளலார் மகிழ்கிறார் (4725). வாழ்வாங்கு வாழும் முறை சன்மார்க்க நெறிமுறை என்பது போல இந்தப் பாடல் அமைந்துள்ளது.

"பாடகக்கால் மடந்தையரும் மைந்தரும் சன்மார்க்கப் பயன்பெற" நல்லருளளித்தான் பரமன் (4642) என்பது அவர் பெற்ற தெளிவு. ஆதலால் இந்த நெறியில் மக்கள் தாமாக ஈடுபாட்டுடன் முன்வந்து சேர வேண்டும் என அவர் விண்ணப்பித்தார்.

அரசியலில் மக்கள் அடிமைப்பட்டிருந்த அந்நாளில் சமூகத்தில் அமைதியில்லை. சமயத்தில் தனிமனிதன் மனத்தில் அமைதியில்லை. அரசியல் கொடுங்கோன்மை அன்று நிலவியது. அவருடைய நெஞ்சம் உருகி நின்ற நேரம் அது. இந்தக் கொடிய ஆட்சி போய் நல்லவர்களாகிய சன்மார்க்கர் ஆட்சி வரக்கூடாதா என்று ஏங்கினார். அந்த ஏக்கம் கொடிய ஆட்சி அழியவும், நல்லாட்சி மலரவும் தெய்வ ஆணையாக அவர் வாயில் பிறந்தது.

"*கருணை இலா ஆட்சி கடுகி ஒழிக*
*அருள் நயந்த நன்மார்க்கர் ஆள்க - தெருள்நயந்த*
*நல்லோர் நினைத்த நயம் பெறுக நன்று நினைந்து*
*எல்லோரும் வாழ்க இசைந்து*" (5618)

இந்தப் பாடல் வள்ளற் பெருமானின் தொலை நோக்கைக் காட்டும். நல்ல ஆட்சி, நலம்பெற்ற மக்கள் சமுதாயம் இசைந்த வாழ்வு என்று சன்மார்க்கம் தரும் பயன்கள் விரிந்து போகின்றன. சன்மார்க்கத்தைச் சமயம் கடந்து சமூகப் பயன்பாட்டுக்கு அவர் கொண்டு செல்வது புரட்சிக் கருத்தாகும்.

வள்ளலார் இந்தச் சன்மார்க்க நெறிக்கு வருமாறு எல்லோரையும் பலமுறை பல பாடல்களில் திரும்பத் திரும்ப

அழைத்தார். அப்படிக் கூறியபோது இரண்டு கருத்துக்களை வற்புறுத்தினார் (உரை : 307).

1) சன்மார்க்கத்துக்கு முக்கிய தடைகள் சமய, சாதி வேறுபாடுகள். இவை நீக்கப்பட வேண்டும்.

2) இந்தத் தடைகளைத் தாண்டி வந்தால் சாகாநிலையாகிய பேறு கிடைக்கும்.

இந்த இரண்டு செய்திகளும் ஆழமாக எண்ணிப்பார்க்கத் தக்கன. ஒருவன் தன் சமயத்தைப் போற்றிக் காப்பதில் பிழையில்லை. ஆனால் இன்னொரு சமயத்தை அழிக்க எண்ணுவது அறமாகாது. தத்தம் சமயநெறியில் நிற்பதே சிறந்தது. அப்படி நில்லாதவரை,

*"தத்தம் சமயத் தகுதி நில்லாதாரை வேந்தன்*
*மெய்த்தண்டம் செய்வது கடனே"*

என்று திருமந்திரம் ஆணையிடுகிறது (246). அந்தப் போலிகளை அரசன் தண்டிக்க வேண்டும். திருமந்திரத்தைப் போற்றிய வள்ளலாரை இந்த ஆணை பெரிதும் கவர்ந்திருக்கும்.

அவர் சமயப் பொதுமையைப் பலவாறு வற்புறுத்தினார். "எம்மதத்தில் எவரெவர்க்கும் இயைந்த அனுபவமாய் எல்லாமாய்" (3147) இருக்கும் பொதுநிலையை அவர் கண்டுகளிக்கிறார். அனுபவம் ஒன்று ; அதைத் துய்க்கும் வழிகள் பற்பல. இதைப் புரிந்து கொள்ளாமல் பன்னெறிச் சமயங்கள், மதங்கள் என்று பேசுவது பாவம். அது மக்களை இருள் நரகத்துக்கு, துன்ப வாழ்க்கைக்கே செலுத்தும். சுத்த சன்மார்க்கம் மட்டும் புத்தமுதத்தைத் தந்து மக்களை வாழ்விக்கும் (3696). அந்த நெறியை எல்லோரும் பெற வேண்டும் என்பது அவர் விருப்பம்.

*"எவ்வுலகமும் எத்தேவரும் எவ்வுயிரும்*
*சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்"* (4084)

என்ற வரிகள் அவருடைய ஆவலைக் காட்டும். போர் மேகங்கள் உலகெங்கும் சூழ்ந்துள்ள இந்நாளில் வள்ளலாரின் இந்தக் கருத்து - உயிர்க்கருத்து - ஆழமாகப் பின்பற்றத்தக்கது என்பதில் ஐயமில்லை.

போரற்ற உலகே சன்மார்க்கத்தால் வரும் பயன். "போருற்று இறந்து வீண் .....போகாதபடி புனிதமுறு சன்மார்க்க நெறிகாட்டி" (3677) உலகை வாழவைக்க எல்லாரும் முன்வர வேண்டும். சமய மதங்கள் பெயரில் நடக்கின்ற போர்கள் பித்துப்பிடித்தவர் செய்யும் பேயின் விளையாட்டு. அதனால் அழிவது ஏழை மக்கள்

**கூட்டமே. சமய மதங்கள் காட்டுவது புன்னெறி : சன்மார்க்கம் காட்டுவது நன்னெறி. இந்த வாழ்வுக்கு அரசு புரிவோரும் மக்களும் திரும்பினால் போரற்ற இன்ப உலகம் பிறக்கும் : வானத்துப் புத்தமுதை உண்டு இங்கேயே எல்லாரும் இன்பமுடன் வாழலாம்.**

வைகுந்தம், கைலாசம், வீடுபேறு, சுவர்க்கம் என்று பிறசமயவாதிகள் கூறுபவற்றை அவர் பாடவில்லை. மண்ணில் இன்பம் காணும் வழியைப் பற்றி அவர் ஆய்ந்தார். இருப்பது ஒரு தெய்வம். அதைப் பற்றிய கலக வழக்குகள் தேவையில்லை. அந்த ஒரு தெய்வ வழிபாட்டுக்கு உரிய நல்வழி சன்மார்க்கம் என்பன அவர் பெற்ற தெளிவுகள்.

சரி. இந்தச் சன்மார்க்க நெறியை ஒருவன் எவ்வாறு பெறுவது? பெரிய தவம் ஏதும் செய்ய வேண்டியதில்லை. அல்லது பேரறம் ஏதும் செய்ய வேண்டியதில்லை. இரண்டே இரண்டு பண்புகளைக் கொண்டிருந்தால் போதும் என்கிறார் வள்ளற்பெருமான். "சுத்த சன்மார்க்க சாதனம் இரண்டு வகைப்படும். பரோபகாரம், சத்விசாரம். பரோபகாரம் என்பது தேகத்தாலும் வாக்காலும் திரவியத்தாலும் உபகாரம் செய்வது. சத்விசாரம் என்பது ஆன்மநேய சம்பந்தமான தயாவிசாரத்தோடு இருப்பது" (உரை : 311). இவை இரண்டும் எல்லோரும் பின்பற்றக்கூடிய எளிய பண்புகள். பிறருக்குச் செய்யும் உதவி பரோபகாரம் : பிறஉயிர்களுக்காக அவற்றின் துன்பம் நீங்க வழிபாடு செய்வதும், கடவுளிடம் குறையை விண்ணப்பித்தலும் சத்விசாரம். உயிருக்குத் தொண்டாற்றல் கடவுளை வழிபடுதல் இரண்டும் பலரும் பலகாலும் வற்புறுத்திய நல்லறங்கள். தொண்டின் பெருமையை வள்ளலார் முதலில் வைத்தார். செல்வர் தாம் உதவி செய்ய வேண்டும் என்பதில்லை. பிறவுயிர்த் துன்ப நீக்கத்துக்காக வழிபடப் பொருள் தேவையில்லை. மனம் இருந்தால் போதும். நிதிமிகுந்தவரிடம் பொற்குவையும், நிதி குறைந்தவரிடம் காசுகளும், அதுவுமற்றவரிடம் வாய்ச்சொல் உதவியும் பாரதி கேட்டாரே! மனத்துக்கண் மாசிலாமல், மனமிரங்கிச் செய்வதே அறம். மற்றவை ஆரவார விளம்பரங்கள் என்று வள்ளுவர் பேசியதும் அதுவே.

இந்த இரண்டு பண்புகள் பெற்றவர்களே சன்மார்க்கத்துக்குரியவர். இவை இரண்டும் இருந்தால் அங்கு

சாதிமத வேறுபாடு வராது : கொலை, புலை முதலிய தீய எண்ணங்களும் தோன்றா.

"*அப்பா நான் வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்*
*ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்*"
(4079) என்று அவருடன் சேர்ந்து எல்லாருமே வேண்டலாம்.

சன்மார்க்கத்தின் இரண்டாவது பண்பு சாகா நிலை என்பதாம். "என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்" என்று அவர் தெளிவாகக் கூறுகிறார் (5601). பல பாடல்களில் சாகாநிலை பற்றி வள்ளலார் பாடியுள்ளார். சாவுமட்டுமல்ல : சன்மார்க்கம் பிணி, மூப்பையும் தவிர்க்கும் "சிறந்திடு சன்மார்க்கம் ஒன்றே பிணிமூப்பு மரணம் சேராமல் தவிர்த்திடும்" (5600). இது அவர்கூறும் உறுதி. சாதல், நோயுறல், மூத்தல் என்பன உயிரின் பண்புகள். இவை கூடச் சன்மார்க்கத்தால் தடுக்கப்படும் என்பது வள்ளலார் நம்பிக்கை. சாதலின் இன்னாததில்லை, கூற்றம் குதித்தலும் கைகூடும் என்று இரண்டைச் சொல்லி வள்ளுவர் அதன் கொடுமையையும் அதை வெல்லும் வழியையும் சுட்டுகிறார். "மரணபயம் விட்டொழிந்தேன்" என்பது அருட்பா (4731).

ஆயினும் சாகாநிலை என்றால் என்ன என்பது பற்றித் தெளிவாகக் கூறுவதற்கில்லை. சாவே இல்லாமல் உடம்பையும் மறைத்துக்கொண்டு இருப்பது சித்தர்கள் காட்டிய வழி என்று ஆய்வாளர்கள் சொல்கிறார்கள். இறப்பு நிகழும்போது உடம்பொடு மறைதல் சாகாக்கலை என ஊரன் அடிகள் கருதுகிறார். உடம்பை நீக்கிய முத்தியா? உடம்புடன் முத்தியா என்பது பற்றிச் சமயவாதிகளிடையே கருத்து வேறுபாடு உள்ளது. முடிந்த முடிவாக ஏதும் கூறற்கில்லை.

சாகாக்கலை அல்லது சாகாநிலை என்பது பிறப்பறுத்தல் என்று ஆகுமா? ஏனெனில் பிறவாநெறி பிறவாமை பற்றிய சிந்தனைகள் நிறையவே காணக்கிடக்கின்றன. தவத்தின் ஆற்றலைப் பெற்றவர்கள் எமனையும் வெல்லக் கூடும் என்றும், இறைவன் திருவடியை ஓயாது பற்றியவர்கள் பிறவிப் பெருங்கடலையும் நீந்தலாம் என்றும் குறள் கூறுகிறது (269-10). இது பிறவாநெறி பற்றிய குறிப்பாகும். ஞானநெறி நின்றவர்களுக்குப் பிறப்பில்லை.

"ஞானவாசல் ஊடுபோய் எல்லைவாசல் கண்டவர் இனிப்பிறப்பது இல்லையே" என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

ஞானநெறி சன்மார்க்கம் அல்லவா? ஆதலால் சன்மார்க்க அன்பர்களுக்குப் பிறப்பில்லை. இறைவனுடன் ... அருள்கலப்பு பெற்றவர்.

"...... *அதன் கண் நேயன் ஆனபின்*
*சாதலும் பிறத்தலும் இல்லை இல்லை இல்லையே*"

என்பதும் சிவவாக்கியர் பாட்டே. "இனிப் பிறப்பில்லை என்று ஆடு பாம்பே" என்கிறார் பாம்பாட்டிச் சித்தர். திருமந்திரம் யோகம் செய்து, உயிர்வளியாகிய பிராணவாயுவைக் கட்டுப்படுத்துவதால் ஆற்றல்பெறும் வழியைக் குறிக்கிறது. அந்த ஆற்றல் கூற்றை உதைக்கும் வலிமையைத் தரும். "நட்டங்கிருக்க நமனில்லை தானே" என்கிறார் திருமூலர். "நமனில்லை" என்ற சொல்லுக்கு உரைகாரர் "நீண்டநாள் வாழலாம்" என்று எழுதுகிறார்.

இன்னோரன்ன குறிப்புகள் ஓரளவு ஒரு தெளிவைத் தருகின்றன. சாகாநிலை இறப்பில்லாமல் வாழ்வது என்பதன்று : மீண்டும் பிறவாநிலை என்பதே ஆகும். எடுத்த உடல் இறக்கும் தன்மை உடையது என்பது முன்னோர் முடிபு. "எடுத்த தேகம் இறக்கும் முன் எனைக் கொடுத்து நின்னையும் காண்பேனோ?" என்று தாயுமானவர் கேட்கிறார். "பிறப்பறுக்கல் உற்றார்க்கு உடம்பும் மிகை" என்று குறள் கூறுகிறது.

ஆதலால் சாகாநிலை என்பது இறவாநிலையன்று : இறப்பதற்கு அஞ்சா நிலை : மீண்டும் பிறவாநிலை என்று பொருள் கொள்ளலாம். "நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்" என்பது அப்பர் வாக்கு. "பிணியெலாம் வரினும் அஞ்சேன் பிறப்பினோடு இறப்பும் அஞ்சேன்" என்பது திருவாசகம். இந்த வழிவந்தவர் வள்ளலார். சன்மார்க்க நெறி நிற்போருக்கு இயல்பாகவே இறைவன் மீது பற்றும் பிற பொருள்கள் மீது பற்றற்ற நிலையும் வரும். எதைப் பற்றியும் அவர்களுக்கு அச்சம் என்பதில்லை.

" ....... *ஒரு ஞான*
*நாட்டமும் கற்ப கோடியினும்*
*வயத்தொடு சாகா வரமும் என்தனக்கே*
*வழங்கிடப் பெற்றனன் மரண*
*பயத்தை விட்டொழிந்தேன்*" (4731)

என்ற அருட்பா நோக்கற்குரியது. சாகாவரம் பெற்றேன்.

மரணபயம் விட்டொழிந்தேன் என்ற இயைபு - தொடர்பு - சாகாநிலை என்ன என்பதைத் தெளிவாக்குகிறது. சாவை யாராலும் தடுக்கமுடியாது. தம் நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதத்தில்

> *"திருவேங்கட முதலியார் காலஞ் சென்றதைக் குறித்து விசாரப்படுகின்றேன். ஆயினும் அது அரிபிர மாதிகளுக்கும் உள்ள காரியம். ஆதலால் புதிதல்ல"*
> (உரை : 386)

என்று தெளிவாகவே தம் உட்கிடக்கையை வெளிப் படுத்தியுள்ளார். திருமால், பிரமனுள்ளிட்ட தெய்வங்களுக்கும் இறப்பு உண்டு என்றால், மனிதனுக்குச் சாகாநிலை உண்டு என்பது எவ்வாறு பொருந்தும்? ஆதலால் உடம்பொடு முத்தி என்பது பொருந்தாது. மாறாக இறப்பு கண்டு அஞ்சாமை என்பதே பொருத்தம். "அச்சத்தை வேட்கைதனை அழித்துவிட்டால் அப்போது சாவும் அங்கு அழிந்து போகும்" என்று பாரதி பின்னாளில் முரசு கொட்டுவது இந்த வழியில் வந்தே என்பதில் ஐயமில்லை.

வள்ளலாரின் சன்மார்க்கம் எது என்னும் கருத்து வேறுபாடு நிகழ்வதும் சற்று எண்ணற்குரியது. சிலர் அது சமயப்பொது என, வேறு சிலர் பழஞ்சமய மறுமலர்ச்சி என, இன்னும் சிலரோ சமய சீர்திருத்தம் என்று மூவகையாகக் கூறுகிறார்கள். வள்ளலார் கூறும் கருத்துக்கள் பிற சமயங்களில் இல்லை என ஊரன் அடிகள் கூற அது ஒரு உலகப்பொது சமயம் எனச் சுப. அண்ணாமலை எழுதுகிறார். வள்ளலார் போலத் தெளிவாகச் சமயப் பொதுமையை உணர்த்தியவர் வேறு யாருமில்லை என்பது மு.வ.வின் கணிப்பு. இது ஒருபுறம்.

வள்ளலாரின் சன்மார்க்கம் புதியதன்று : தொன்றுதொட்டு வரும் கோட்பாடே, கால இடச் சூழலுக்கு ஏற்ப அவர் அதை மறுமலர்ச்சியடையச் செய்தார் என்பது தெ.பொ.மீ, திரு.வி.க. போன்ற அறிஞர்கள் கூறும் கருத்தாகும். எல்லாச் சமயங்களுக்கும் எல்லாத் தத்துவங்களுக்கும் அடிப்படை உண்மைகளைக் கொண்ட பழைய நெறி சமரச சன்மார்க்கம் என்பது தெ.பொ.மீ.யின் தெளிந்த முடிபு. (The Pageant of Tamil Literature, p:70) "வள்ளலார் சன்மார்க்கம் என்னும் பெயரில் பழம்பெரும் நெறியை ஓம்பிச் சென்றார்" என்பது திரு.வி.க. கருத்து. (இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் முன்னுரை)

மூன்றாவதாக வள்ளலார் ஒரு புது சமயத்தையே, புது நெறியையே உண்டாக்கினார் என்போரும் உண்டு. முருகரத்தினம் "தம் காலத்துச் சமய, சமூகக் குறைகளை நீக்கி, புத்தர் ஏசு நபிகள் ஆகியோர் கண்டது போலப் புதுச்சமயத்தை வள்ளலார் கண்டார்" என்று எழுதுகிறார். (அன்றைய சிக்கல்களும் இராமலிங்க அடிகளார் கண்ட தீர்வும் - ப : 22) ஜோர்டன்ஸ் என்னும் ஆங்கிலேயர் வள்ளலாரை "மகாத்மா இராமலிங்கம்" எனக்குறித்து அவர் பணியை இந்த நாடு பெரிதாகப் போற்றவில்லை என வருந்துகிறார். (A Cultural History of India, 366)

மூன்று வேறுபட்ட கருத்துக்கள். அவர் சமயப் பொதுமையை வலியுறுத்தியவர் என்பதில் ஐயமில்லை. ஆனால் அவர் கண்டது புதிய சமயமன்று. அவருடைய கொள்கைகளில் சீர்திருத்தக் கூறுகள் இருப்பதாலேயே புதிய சமயம் எனக் கொள்வதற்கில்லை. திருமூலரும் தாயுமானவரும் சித்தர்களும் சொல்லாதவற்றை வள்ளலார் புதியதாகக் கூறினார் எனச் சொல்ல முடியாது.

மதங்களற்ற பொதுநிலை நல்லதே. தாம் முதலில் சைவ சமயத்தில் பற்றுவைத்துப் பின்னாளில் விட்டுவிட்டதாகவும், சைவம், வைணவம், சித்தாந்தம் வேதாந்தம் முதலியவற்றில் ஈடுபாடு வேண்டாம் என அவர் மக்களிடம் கூறியதாகவும் குறிப்புகள் உள்ளன (உரை : 355). இப்படி அவர் சொல்லியிருக்கலாம். ஆனால் எந்தச் சூழலில் யாரிடம் இப்படிக் கூறினார் என்று தெரியவில்லை. வேதம், புராணம், இதிகாசம் எதிலும் ஈடுபட வேண்டாம் எனக் கூறிய அவரே, "வேதாகம விதிப்படி உண்மையாய்ப் பக்திசெய்து அவர் அருளைப் பெற வேண்டும்" என்று சொல்லியதாகவும் குறிப்புகள் உள்ளன (உரை : 342, 353). வேதமும் ஆகமும் இந்தக் கருத்துப் படி அவருக்கு உடன்பாடாகின்றன. ஆனால் இறுக்கமாக கண்மூடித்தனமான சடங்குகளில் ஈடுபட வேண்டாம் என எச்சரித்திருக்கலாம். வேதம், புராணம், சாத்திரம், ஆகமம் முதலியன அறவே வேண்டாம் என அவர் தள்ளவும் இல்லை : முற்றிலும் கொள்ளவுமில்லை. "ஒரு பழுத்த சைவசித்தாந்தி, சிறந்த சன்மார்க்கி எவ்வளவுக்குக் கொள்ளலாகுமோ, அவ்வளவுக்குக் கொண்டார்" என ஊரன் அடிகள் குறிக்கிறார் (வர : 403). ஊரன் அடிகள் வள்ளலாரைச் சைவசித்தாந்தி என ஏற்றுக்கொள்வது

வியப்புக்குரியது. அவரே வள்ளலாரின் சன்மார்க்கம் சமயங்கடந்தது சமயாதீதமானது என்று முதலில் கூறியவர் (வர : 286). இங்கு சைவசித்தாந்தி சன்மார்க்கி என இருவரையும் ஒன்றாக்குகிறார்.

வள்ளலார் வேதத்தையும் ஆகமத்தையும் முற்றும் தள்ளாமைக்குக் காரணம் சைவ உலகில் வேதம் பொதுநூல், ஆகமம் சிறப்பு நூல் என்பதே. வேதம் வேறு ஆகமம் வேறல்ல: சைவருக்கு இரண்டும் ஒன்றே. ஆதலால் தாம் போற்றிய சைவ சமயத்தையும் தாண்டி அவர் பின்னாளில் உயர்நிலை - உலகப் பொதுசமயம் - கண்டார் எனச் சுப. அண்ணாமலை கூறுவது இசைவாயில்லை. (Life and Teachings of St.Ramalinga p : 126) "சைவ சமயம் முன்னாளில் இருந்தது போலில்லை : பின்னால் பௌராணிகர்கள் புராணக் கதைகளைக் கலந்து அதை மாசுபடுத்தி எல்லாவற்றையும் குழப்பிவிட்டனர்" என்று திரு.வி.க. வருந்துகிறார் (இரா.சுவா. திருவுள்ளம் : 40). சைவம் வேறு : புராணங்கள் கூறும் கதைகள் வேறு. நாத்திகவாதிகள் இந்தக் கதைகளை மட்டும் வைத்துக் கொண்டு சமயத்தைப் பழித்தனர். வள்ளற்பெருமான் சைவத்தைப் போற்றினார். ஆனால் அதனுள் மலிந்துகிடக்கும் புராணக் கூறுகளைக் கடுமையாகச் சாடினார். இந்த நுட்பத்தைப் புரியாது விட்டுவிட்டால் அவருடைய கருத்துக்களில் முரண் இருப்பது போலத் தெரியும். தம் வாழ்நாளில் நிறைவுவரை அவர் சைவ சமயஞ் சார்ந்தே இருந்தார் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு.

அவர் மறைவிற்கு மூன்று திங்கள் முன்னாள் அவர் ஆற்றியதாகச் சொல்லப்படுவது பேருபதேசம். இதனுள் அவருடைய "முடிந்தமுடிபான பல கருத்துக்கள் இருப்பதாக" ஊரன் அடிகள் ஒப்புகிறார் (உரை, ப : 24). இதில்தான் சைவம் முதலிய சமயங்கள், புராணங்கள், கலைகள், வேதங்கள் ஆகியவற்றில் பற்று வேண்டாம் எனவும், உருவ வழிபாடு செய்யவும் ஆகாது எனவும் அவர் கூறியதாகக் குறிப்புகள் உள்ளன. இவை மெய்யா? சற்று ஆழ்ந்து எண்ணத்தக்க செய்திகள் இவை.

வள்ளற் பெருமான் தாம்பெற்ற அருள் வாழ்வுக்கு இரண்டு காரணங்களைக் கூறியுள்ளார். நடம்புரியும் இறைவனின் சாயையாக எத்தேவரையும் பார்த்தது ஒன்று : கருணையும்

சிவமே பொருள் எனக் காணும் காட்சியை - ஞானத்தைப் - பெற்றது இரண்டாவது (3503, 3635). அவருடைய சைவப் பற்றை இவை தெளிவாக்கும். மேலும் "நாமடைய வேண்டியது முடிவான ஆன்மலாபமாகிய சிவானுபவமேயன்றி வேறில்லை" என்றும் உறுதிப்படுத்துகிறார் (உரை : 359). இது பேருபதேசத்தில் வரும் தொடர்.

அருள்சேர்ந்த அறிவே பூரண இன்பம். அதுவே ஒப்பற்ற பெருந்தயவுடைய பேரறிவு. இதைத் தாயுமானவரின் "சந்ததமும் வேதமொழி" என்னும் பிரமாணத்தால் உணர்க எனக் கூறினார். இதுவும் பேருபதேசத்தின் தொடரே. வள்ளற்பெருமான் குறிப்பிடும் தாயுமானவர் பாடல் முனிவர், கடவுளர், தேவர், கணநாதர், நவநாத சித்தர், திங்கள், கதிரோன் ஆகிய எல்லாரும் துதிக்கின்ற கடவுள் "சிற்சபையில் நடிக்கின்ற கருணாகரக் கடவுள்" என்பதை வலியுறுத்துகிறது.

பேருபதேசம் செய்வதற்குச் சில நாட்கள் முன்பு (1873 செப்டம்பர்) "சாகாத்தலை, வேகாக்கால் போகாப்புனல் போன்ற உபாயங்களை ஒருவாறு தெரிவிப்பது சைவசமயங்கள் ; வேறு எவ்வித சமயங்களிலுமில்லை" என அவர் கூறியதாக ஒரு குறிப்பு உண்டு (உரை : 333). தம்முடைய கடிதங்களில் "சிற்றம்பலத் தந்தையார் திருவருளால் சுகமாக வாழ்வீர்களாக" என்றும் "எல்லாம் வல்ல திருச்சிற்றம்பலக் கடவுள்" என்றும் எழுதுவதும் அவர் வழக்கம் (உரை : 429-430). தாம் வெளியிட்ட சபை விளம்பரத்தில் அருட்பெருஞ்சோதி ஆண்டவர் யார் எனக் கூறுகையில் இயற்கையில் தானே விளங்குகின்றவர், சுத்த மெய்யறிவு எனும் பூரணப்பொது வெளியானவர், இரண்டுபடாத பூரண இன்பமானவர் என்று தெளிவாக்கினார். இயற்கை உண்மை, இயற்கை அறிவு, ஆனந்தம் என்பன வேறில்லை. அது சிவபரம் பொருளே. "சச்சிதானந்த" வடிவம் சிவனுடையதல்லவா?

வடலூரை உத்தரஞான சிதம்பரம் என்றே அவர் அழைத்தார். சிதம்பரம் இராமலிங்கம் என்றே கையொப்பமிட்டார். மருதூரில் பிறந்தாலும் அவருக்கு இருந்த சிதம்பரப்பற்று இத்தகையது. சிவபெருமானை "உயிர்த் துணைவர்", "சன்மார்க்க சங்கத்தின் முதல் தனி நடராசர்" (3702, 3703) "சங்கத்தார் தழுவிய பதி தனிநடராச சற்குரு" என்று

ஐயத்துக்கு இடமில்லாமல் தம் தெய்வம் எது என்பதை மற்றவர்க்குப் புரியவைத்தார். "நீறணிந்து ஒளிர் அக்கமணி தரித்து உயர்சைவ நெறிநின்று ஐந்தெழுத்தை ஓதுபவரே" (3703) "நீறணிந்து ஒளிர் அக்கமணி பூண்டு சன்மார்க்க நெறி நிற்கும் அன்பர்" (2609) என்ற அவர் சொற்களில் எந்த முரணும் இல்லை. "சைவர் என்னும் நின்னடியார் சபை நடுவே வைத்தருளி" என்பதும் அவர் பாட்டே (4800). ஆறாம் திருமுறையின் இறுதிப் பதிகத்தில் கூடச் "சிவம் ஒன்றே பொருள் எனக் கண்டறிமின்" (5595) என்று முரசறைந்தார்.

சிதம்பரப் பற்று அந்த அருளாளரிடம் அதிகமாகவே இருந்தது. சிதம்பரம் பொருளாகத் தாம் 200 பாமாலைகள் (2000 பாடல்கள்?) இயற்றியதாக அவரே எழுதுகிறார் (உரை : 393). சிதம்பரம் அருவுருவத்தலம். ஒளி வழிபாடும் அங்கு நடக்கிறது. ஆதலால் எல்லார்க்கும் ஏற்புடையது. பிற சமயத்தவரும் அங்கு வழிபடுவர் என்பதை "எச்சமயத்தவர்களும் வந்து இறைஞ்சா நிற்பர்" என்று தாயுமானவரும் பாடுகிறார். சமயப் பொதுமையும் சமய சமரச நிலையும் சைவத்தின் ஆதிக் கோயிலாகிய சிதம்பரத்தில் நடைமுறையிலிருந்தது என்பது யாவரும் அறியத்தக்க செய்தி. அந்த நெறியைச் "சன்மார்க்கம்" என்று அதே பாடலில் தாயுமானவர் கூறுகிறார்.

*"சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறும்*
*சமய சங்கேதப் பொருளும் தான் ஒன்றாக*
*பன்மார்க்க நெறியினிலும் கண்டதில்லை*
*பகர்வரிய தில்லைமன்றுள் பார்த்தபோதங்கு*
*என்மார்க்கம் இருக்குது எல்லாம் வெளியே என்ன*
*எச்சமயத்தவர்களும் வந்திறைஞ்சா நிற்பர்."* (143)

வள்ளலாரும் இக்கருத்தையொட்டி "எச்சமய முடிபுகளும் திருச்சிற்றம்பலத்தே இருந்த" என இறைவன் அருளியதாகப் பாடுகிறார் (4605).

சன்மார்க்கத்தைக் குறிக்கும் போது அதன் முன்னும் பின்னுமாக அடைமொழிகள் சேர்ப்பது அவர் இயல்பு. "சன்மார்க்க சுத்த சிவநெறி", "சிவசன்மார்க்கம்", "சிவஅனுபவமாகிய சமரச சன்மார்க்கம்" என்பன சான்றுகள். சிவபெருமான் தொடர்புடையதாகவே சன்மார்க்கத்தை அவர் தெளிவாகக் காட்டுகிறார்.

திருமந்திரத்தில் சன்மார்க்கக் கருத்துக்கள் பல உள்ளன. சன்மார்க்கமே ஞானம் : ஞானத்தின் மிக்க சமயமோ அறநெறியோ நன்றன்று : சன்மார்க்க நெறி நின்றவர்கள் சிவயோக சித்தராய்க் கூற்றத்தை வென்றார்கள். தெய்வச்சிவ நெறி சன்மார்க்கமே. சிவகதி சேர்வார்க்குத் தன்னெறியாவது சன்மார்க்கமே (திருமந் : 246, 1440, 50,51) என்பன சில. திருமந்திரம் வள்ளலார் போற்றிய நூல். "சாத்திரங்களில் சிறந்தது திருமந்திரம்" என்பது அவர் முடிபு. "சன்மார்க்கத்தின் உண்மை தெரிய வேண்டில் திருமந்திரத்தைக் கவனிக்கில் விளங்கும்" என்று அவரே கூறியுள்ளார்.

இத்தனை சான்றுகளும் ஒருண்மையை உறுதிப் படுத்துகின்றன. வள்ளற் பெருமான் போற்றிய சன்மார்க்கம் சைவ சமயம் காட்டும் பழநெறியே தவிர வேறில்லை. அவர் புதிய உலகச் சமயம் எதையும் படைக்கவில்லை. "சன்மார்க்கம் சமயமதங் கடந்தது" என்பதற்குச் சமய மதப் பிணக்குகளற்றது என்றே பொருள்கொள்ள வேண்டும். சன்மார்க்கம் சைவம் கூறும் ஞானமார்க்கம். முன் நாளில் அந்தச் சைவத்தில் இல்லாது பின்னர் வந்தேறி அதை மாசுபடுத்த முற்பட்ட சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் அவர் களைந்தெறியப் போராடினார். வேத ஆகம, புராணங்கள் பற்றிய அவர் கருத்துக்களை இந்த நோக்கில் காண வேண்டும். அப்படியில்லாமல் சொற்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டு அவர் சமயங்கடந்தவர், புதுச்சமயம் கண்டவர் என்று கருதுவது பொருந்தும் எனத் தோன்றவில்லை. முன்னோர் விழுமிய கருத்துக்களை அவர் வலியுறுத்தினார் எனக் கொள்வதே சிறப்பு. இப்படிக் கூறுவதால் அவர் பெருமைக்கோ அவருடைய சன்மார்க்கக் கோட்பாட்டுக்கோ எந்த இழுக்கும் தாழ்வும் இல்லை. அவரே தாம் "வாழையடி வாழை என வந்த மரபில்" வந்ததாகக் கூறிப் பெருமைப்பட்டுக் கொள்ளும்போது - தம் முன்னோரையும் தம் பண்பாட்டுச் சமய வரவையும் சொல்லி நிறைவு கொள்ளும்போது - மற்றவர்கள் அவர் புதுச்சமயம் கண்டவர் என்றோ புதுமரபு படைத்தவர் என்றோ சொல்வது அவருடைய எண்ணத்துக்கே மாறானது என்பதை உணர்தல் வேண்டும். "போற்றுதல், புகழ்தல்" என்பன எல்லை மீறிப்போகும்போது போற்றப்படும் அல்லது புகழப்படும் மனிதர் அல்லது பொருள் தன்பெருமையை இழக்கும் வாய்ப்பு நிகழலாம் என்பதும் எச்சரிக்கையுடன் உணரத்தக்கதாகும்.

## உ. அருட்பெருஞ்சோதி

*எங்கெங் கிருந்துயிர் ஏதேது வேண்டினும்*
*அங்கங் கிருந்தருள் அருட்பெருஞ் சோதி*
*பொதுவது சிறப்பது புதியது பழையதென்று*
*அதுவது வாய்த்திகழ் அருட்பெருஞ் சோதி*

*- அகவல்.*

வள்ளற் பெருமானின் மூன்று உயிர்க்கொள்கைகளில் இது இரண்டாவது. முன்னது சன்மார்க்கம். எஞ்சியது உயிரிரக்கம். இறைவனை ஒளிவடிவமாகக் காண்பதும் வழிபடுவதும் தொன்றுதொட்டு இருந்துவருவனவே எனினும் அவற்றை இயக்கமாக்கிய பெருமை, நிலைநிறுத்திய வல்லமை வள்ளலாரையே சார்ந்தது. "அருட்பெருஞ்சோதியராகிய எமது ஆண்டவர்" (உரை : 434) என்றே அவர் எழுதுவார்.

அருட்பாவில் பல இடங்களில் ஒளி பற்றிய குறிப்புக்கள் உள்ளன. "தனிப்பெருஞ்சோதித் தலைவன்" (3410), "பேரருட்சோதி" (3411), "அரும்பெருஞ்சோதி" (3442) என்பன போல பல அடைமொழிகள் தந்து அவர் அதைப் போற்றுகிறார். "அத்துவித ஆனந்த ஜோதி" (4554) என்று குறித்து அதை இன்பத்தின் வடிவமாகவும் அவர் கண்டார். "மெய்ஞ்ஞான தீபம்" என்று ஒளியை (3954) அறிவின் விளக்கமாகவும் பரவுகிறார். அருட்பா முழுதும் அருட்சோதி, அருட்பெருஞ்சோதி என்றும் இரண்டு தொடர்கள் பயின்று வருகின்றன.

அருட்பெருஞ்சோதி எல்லோராலும் தொழத்தக்க சிறப்புடையது. "தொழுந்தகை உடைய சோதியே" என்பது பாட்டு. அவர் வலியுறுத்திய சமயப் பொதுமையை இது காட்டுகிறது. "தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்சோதி" என்று அழைப்பதன் வழி அது அருளுருவ வடிவமாக மலர்வதையும் காணலாம்.

"துண்ணுறாச் சாந்தசிவ ஞானிகள் உளத்தே ஞானியர் உள்ளத்து சுதந்தரித்து ஒளிசெய் ஒளியே" என்று ஞானியர் உள்ளத்து அகவிளக்காகவும் அது ஒளிவிடுகிறது. "இருள் கடிந்து உள்ளத்து எழுகின்ற ஞாயிறு" என இறைவனை மணிவாசகரும் பாடுகிறார். அருட்பெருஞ்சோதி இயற்கை உண்மை, இயற்கை

அறிவு, இயற்கை இன்பம் என மூன்றாகவும் விளக்கம் தந்து, அதை வழிபட்டால் அந்த மூன்றையும் ஒருவர் பெறலாம் என்று வள்ளலார் நுட்பமாகக் கூறுகிறார் (3666). சமயத்தின் பெயராலும் மதத்தின் பெயராலும் வாதம் புரிபவர்கள் குறைமதியுடையவர்கள்; அவர்கள் இருட்பாடுடையவர்கள் ; அத்தகையோர் மயக்க முடையவர்கள். அவர்களால் அருட்பெருஞ் சோதியை உணர முடியாது. "தேய்மதிச் சமயருக்கு அரிய ஒண்சுடர்", "மலைவறியாப் பெருஞ்சோதி" என்பன அருட்பா வரிகள்.

அருட்பெருஞ்சோதியை உயிர்ப்பொருளாகவும் உயிரில்லாப் பொருளாகவும் உருவகப்படுத்திப் பல்வேறு கோலங்களை வள்ளற்பெருமான் அகவலில் வடித்துள்ளார். பரம்பொருள், நற்றாய், உயிர்த்துணை, தந்தை, நட்பு, நிதி, மலை, கடல், கரை, கா, கனி என்று இன்னும் பலவாகக் குறித்து, சோதியின் நலமும் சுகமும் அளிக்கும் தன்மைகளைப் பாடி மகிழ்கிறார். "எங்கெங்கு பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்" இறைவனைத் தாயுமானவர் முன்னர் பாடினார். அந்த வரிசையில் வள்ளலார் பாட்டாகவும் இசையாகவும், மலராகவும் மணமாகவும் இவைபோல இணைந்துள்ள வகைகளை அகவலில் விதந்து விதந்து ஓதுகிறார். அனுபூதி நிலையில் ஒளிவெள்ளத்துத் தோய்ந்த அவர் நெஞ்சம் இப்படி விரிந்து கனிகிறது.

வெவ்வேறு விதமாக அவர் பாடினும், அவர் கருத்துக்களை மூன்று பிரிவுகளில் காணல் நல்லது. அருட்பெருஞ்சோதி (1) ஞாயிறு, திங்கள், தீ எனும் முச்சுடர்களைக் குறிக்கும். (2) அது அறிவு வடிவம். (3) தில்லைச் சிற்றம்பலக் கடவுள் என்பன அந்த மூன்று.

*"தண்ணார் மதியே கதிர்பரப்பித் தழைத்த*
*சுடரே தனிக்கனலே"* என்றும்
*"முச்சுடர்களும் ஒளி முயங்குற அளித்தருள்"* என்றும்
*"முச்சுடர் ஆதியால் எச்சக உயிரையும்*
*அச்சறக் காத்தருள் அருட்பெருஞ் சோதி"*

என்றும் அகவலில் வரும் சொற்கள் அவர் முச்சுடரைப் போற்றிய பாங்கைக் காட்டும்.

திங்களையும் ஞாயிற்றையும் போற்றிக் கடவுளை வாழ்த்துவது இளங்கோவடிகள் அன்றே செய்தது. "ஞாயிறு போற்றுதும் திங்களைப் போற்றுதும் மாமழை போற்றுதும்"

என்னும் சிலம்பின் ஒலி இயற்கையில் ஒன்றிப்போன தமிழ்நெஞ்சத்தின் ஒலி என்பதில் ஐயமில்லை. உலகத்தார்க்கு விளக்காக இருப்பன. ஞாயிறு, திங்கள், தீ ஆகிய மூன்று. இவை புறஇருளைப் போக்கும் : இவற்றுக்கும் போகாத அறியாமை இருளைப் போக்குவது அறிவுச் சுடர் என்னும் பொருளில் ஞானத்தின் பெருமையைப் பரிமேலழகர் உணர்த்தியது பலரும் அறிந்த செய்தி (குறள் : 299). தொல்காப்பியர் கூறும் கொடிநிலை, கந்தழி வள்ளி என்பன முச்சுடர்களே என்று கொள்ள இடமுண்டு. கொடிநிலை கீழ்த்திசை வெஞ்சுடர் மண்டிலம் பற்றுக் கோடின்றித் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள், வள்ளி தண்கதிர் மண்டிலம் என நச்சினார்க்கினியர் உரை எழுதுவது இங்கு எண்ணற்குரியது.

ஒளியை ஞானவடிவமாகக் குறிக்கும் பழைமைக்குப் பரிமேலழகரின் மேற்கண்ட சொற்கள் சான்றுகள். "ஞானஒளி", "ஞானமன்றில் நாடகம் செய்யும் சுடர்", "ஞானசுந்தரவடிவச் சோதி", "மெய்ஞ்ஞான தீபம்", "ஞானமெய்க்கனல்", "உலகறிவுக் கப்பாற்பட்ட மெய்யறிவு" என்றெல்லாம் அருட்பெருஞ்சோதியை அவர் அறிவின் உருவாகப் பாடியுள்ளார்.

நடம்புரியும் இறைவனைச் சோதியாகக் குறித்து அவர் நடம் நிகழும் ஞானம் எனக் குறிப்பது ஒரு புதுமை.

> "*மதம்புகல் முடிவு கடந்த மெய்ஞ்ஞான மன்றிலே*
> *வயங்கொள் நாடகம் செய்*
> *பதம்புகல் அடியேற்கு அருட்பெருஞ்சோதி*" (3736)

என்பது அழகான பாட்டு.

> "*வேதமும் ஆகம விரிவும் பரம்பர*
> *நாதமும் கடந்த ஞான மெய்க்கனலே*" (அகவல்)

என்று அதன் எல்லாம் தாண்டிய பரத்துவத்தைப் பாடுகிறார். "கல்வியல்ல கேள்வியல்ல கைகாட்டும் காரணம் காண் எல்லையளவற்றதடி எங்கும் நிறைந்ததடி" என்று பட்டினத்தடிகளும் பாடவில்லையா? தத்துவங்கள் குப்பை போன்றவை : துன்பம் தருபவை : அவற்றை நீக்கியின்பம் தரும் அகவிளக்கு அருட்பெருஞ்சோதி என்பது அவர் கண்டதுணிபு.

ஒப்பற்ற பெருந்தயவுடைய பேரறிவு, அதுவே பூரண இன்பம் என அருட்பெருஞ்சோதிக்கு அவர் பொருள் விளக்கம் தருகிறார்.

*"தயவு, கருணை, அருள் என்பவை ஒரு பொருளையே குறிக்கும். ஆதலால் பெரிய தயவுடைய அறிவே பூரண இன்பமாம் : அது ஒப்பற்ற பெருந்தயவுடைய பேரறிவாம்"* (உரை : 359)

என்பன அவர் சொற்கள். உயிரிரக்கம், அருளறிவு, இறையின்பம் என்னும் முக்கூறுகளை இச்சொற்களில் காணலாம். முன்னது அவர் வாழ்வு நெறி : அதனை அடையத் துணை செய்வது சன்மார்க்கமாகிய அருளறிவு : இரண்டும் பொருந்த வருவது இறையின்பம் (உரை : 433). தீமையிலாத வாய்மை கலந்த அறிவு என இதைக் கொள்ளலாம். "வாய்மை கலந்த தீமையிலாத சொல்" குறளில் கூறப்படுகிறது. ஆதலால் அவர் அறிவு வடிவமாக அருட்பெருஞ்சோதியைக் காண்பதில் பொருளுண்டு. அது வெற்றறிவன்று. பிற உயிர்க்குத் தீங்கு எண்ணாத, செய்யாத அருளறிவாகும். "அறிவே வடிவாய், அறிவே உருவாய், அறிவே பொறியாய், அறிவே மனமாய், அறிவே அறிவாய், அறிவே அனுபவமாய்" (உரை : 441) அது விரிந்து போகிறது.

*"அருளறிவொன்றே அறிவு மற்றெல்லாம்*
*மருளறி வென்று வகுத்த மெய்ச் சிவமே"*

என அவர் பாடுவது இந்தத் தெளிவால் பெற்ற நிறைவாலே தான்.

மூன்றாவது நிலையில் அருட்பெருஞ்சோதியைத் தில்லையம்பலத்தில் நடமிடும் இறைவனாக வள்ளலார் பாடுகிறார்.

*"ஆடியபாதம் அறியநான் அறியேன்*
*அம்பலத்து அரும்பெரும் சோதி"* (3631)
*"அருள்வெளி விளங்கவே அருள்நடம் செய்தருள்*
*அருட்பெருஞ்சோதி"* (3666)
*"அருட்பெருஞ் சோதிய தாகிய பாதம்*
*அம்மையும் அப்பனும் ஆகிய பாதம்"* (4320)
*"ஆடிய பாதம் மன்றாடிய பாதம்"*
*"வாழி அருட்சோதி வாழி நடராயன்*
*வாழி சிவஞான வழி"* (4776)
*"பாதவரை வெண்ணீறு படிந்திலங்கச் சோதிப்*
*படிவம் எடுத்தம்பலத்தே பரதநடம் புரியும்"* (5632)
*"அருளரசை அருட்குருவை அருட்பெருஞ்சோதியை என்*
*அம்மையை ........*
*கருணைநடம் புரிகின்ற கனகசபாபதியை"* (4004)

தமிழகத்தில் தொன்றுதொட்டு ஒளிவழிபாடு நிகழ்ந்து வருகிறது. மாசறு கதிரோனை வழிபட்ட தலைவியைக் கலித்தொகையில் காணலாம் (143). முத்தீ வளர்த்து அதன் முன் அமர்ந்து இறைவழிபாடு செய்தவர்கள் பற்றிய பல குறிப்புகள் சங்க இலக்கியத்தில் பல இடங்களில் உள்ளன. வேதகாலத்துக்கு முன்பே இறைவனை ஒளியுருவில் வழிபடுவது வழக்கமாக இருந்துள்ளது.

"*பேரொளி வடிவில் என்றுமுள்ள, எல்லையற்ற வான்வெளியின் நுண்வடிவே சோதி : அது முழுமுதற் கடவுளின் திருவுரு : பழந்தமிழர் அதை அன்றே உணர்ந்தனர்*" (மறைமலை அடிகள், தமிழர் மதம், ப : 146)

"*அங்கண் ஏர் வானத்து அணிநிலாத் திகழ்தரும்*
*திங்களும் தெறுகதிர்க் கனலியும் நீ*"
என்பது பரிபாடல். (1)

ஆக, முச்சுடர் வழிபாடு ஞானவடிவம் பெற்றுச் சிவவழிபாடாகப் பின்னாளில் மலர்ந்தது. ஞாயிறு, திங்கள், தீ என்பன சிவபெருமானின் மூன்று கண்கள் எனச் சொல்லும் மரபு உண்டு. திரு.வி.க. "கந்தழி" எனப் போற்றப்பட்டது பின்னாளில் சிவனாக வழங்கப்பட்டது என்கிறார். (சைவத்தின் சமரசம் : 18)

"*சித்தன் பெரியவன் செம்மல் திகழொளி*
*சங்கரன், ஈசன், சயம்பு, சதுமுகன்,*
*பண்ணவன் எண்குணன் பாத்தில் பழம்பொருள்*
*விண்ணவன் வேதமுதல்வன் விளங்கு ஒளி*" (10 : 175-180)

என்று சிவபெருமானைப் பரக்கப் பேசுகிறது சிலம்பு. சிவனுடைய செஞ்சடை நெருப்பே மருளும் அளவு சிவந்தது. அது திசைகளை எல்லாம் அலசுவது போல எண்திக்கும் விரிந்தது என்று கல்லாடம் பாடுகிறது. சொற்றுணை வேதியனைச் சோதிவானவன் என்று அப்பர் தேவாரம் குறிப்பது பலரும் அறிந்தது.

திருமந்திரமும் திருவாசகமும் ஒளியின் மூன்று வடிவங்களையும் பரவலாகக் கூறுகின்றன. சிவன் சுந்தரச் சோதியான அழகு வடிவினன் என்னும் திருமந்திரத் தொடர் அருட்பாவில் ஞானசுந்தர வடிவச் சோதி என அமைகிறது. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதி என்னும் திருவாசகப்பாட்டு "அருட்பெருஞ்சோதி" என அருட்பாவில் மாறுகிறது.

*"இன்பம் பெருக்கி இருளகற்றித்*
*துன்பத் தொடர்பறுக்கும் சோதி"*

என மாணிக்கவாசகர் பாட,

*"துன்பெலாம் தவிர்க்கும் திருச்சிற்றம்பலத்தே*
*சோதியுள் சோதியே அழியா*
*இன்பெலாம் அளிக்கும் இறைவனே"*

என்று வள்ளலார் அதற்கு விரிவுரை கூறுகிறார்.

இவ்வாறு வள்ளலாரின் அருட்பெருஞ்சோதிக் கோட்பாட்டில், அவர் தமக்கு முன்னே இருந்த அருளாளர்கள் வழியே, மரபே போற்றப்பட்டிருப்பது கண்கூடு. எனினும் வள்ளலார் பற்றி அன்பர்களும் ஆய்வாளர்களும் பல வேறுபட்ட கருத்துக்களைக் கூறியுள்ளனர். அது வள்ளலாரின் முடிந்த நிலையான வழிபாட்டுக் கொள்கை. அவருடைய ஒருகடவுள் வழிபாட்டை இது குறிக்கும் என்பது ஊரன் அடிகள் எண்ணம் (வர : 391). முத்தரசு, "அருட்பெருஞ்சோதி வழிபாடு ஒன்றாகிய, எல்லாம் கடந்த பரம்பொருள் வழிபாடு : சத்திய ஞானசபை மனித குலக்கோயில்" என்று கூறுகிறார். (The Life of St. Ramalingar, p : 161) எல்லாச் சமயங்களுக்கும் பொது என இதில் குறிப்பில்லை. ம.பொ.சி. சமய, மதபேதங்கடந்த ஆலயம் எனச் சபையைக் கருதுகிறார். (வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு : ப : 161) சன்மார்க்கம் உலக சமயம் ; ஒளியை வழிபட எழுந்தது ஞானசபை : ஆதலால் ஒளி வழிபாடு உலகப் பொது வழிபாடு என்று அருட்பாவில் முதலாய்வு செய்த சுப. அண்ணாமலை நிறுவுகிறார். (Life and Teachings of Ramalingar, p : 130)

மேற்கண்ட கருத்துக்களிலிருந்து ஒன்று புலனாகிறது. அருட்பெருஞ்சோதி வழிபாடு பொதுவானது : சமயங்கடந்தது என்பதே அது. இதை முழுமையாக ஏற்பதற்கில்லை. இதற்கு முன்னர் பல சான்றுகள் வழி முச்சுடர், ஞானம், சிவபெருமான் என்ற மும்மை நிலை பற்றிக் கூறப்பட்டது. சன்மார்க்கம் எப்படிச் சைவநெறியாகிய ஞானமார்க்கமோ, அப்படி அருட்பெருஞ்சோதி வழிபாடும் சிவ வழிபாடே : சமயங்கடந்தது என்றோ பொதுவானது என்றோ அதைச் சொல்வதற்கில்லை. சமயத்தைச் சமூகத்தோடு இணைத்துத் தொண்டாற்றிய வள்ளலரர் சில நெறிகளுக்கு உயிரூட்டி மலர்வித்தார் : சில்வற்றை, மாற்றியமைத்தார். மாற்றுவதும் உயிரூட்டுவதும் புதியன ஆகா. "அருட்பெருஞ்சோதி" என்ற சொல்லும் புதியதன்று : ஆனால்

அதைப் பரவலாக்கிய பெருமை அவருக்குண்டு. விளக்கு, சுடர், சோதி என்னும் வரிசை ஓரியையுடையது. "அருள் விளக்கே அருட்சுடரே அருட்சோதிச் சிவமே" என்பது அருட்பா (4090). "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்ற திருவாசகத்தின் மறுவடிவமே இது (29 : 1).

ஒளி ஞானத்தின் வடிவம். அந்த ஞானம் சிவஞானமே. ஞானத்தைச் "சிவ" எனும் முன்னொட்டுடன் கூறுவதே வழக்கம். விஷ்ணு ஞானம், முருக ஞானம், விநாயக ஞானம் எனக் கூறுவதில்லை. ஞானவடிவமாகவும் ஒளியாகவும் இறைவனை வழங்குவதில் பொருளுண்டு. அது வெற்றறிவன்று. அருள்சேர்ந்த அறிவு. பெருந்தயவுடன் கூடிய அறிவு. இது பற்றி முன்னரும் விளக்கப்பட்டது.

எனவே ஒளிவழிபாடு பழைமையானதே. எனில், அது உருவ வழிபாடா, அன்றா எனும் ஐயம் எழலாம். வள்ளலார் பின்னாளில் உருவ வழிபாட்டை எதிர்த்தார் என ஒருவர் கூற, (அ.லெ.நடராசன், வள்ளலார் வாழ்வும் வாக்கும், ப : 265) ஊரன் அடிகள் வள்ளலார் உருவ, அருவ வழிபாடு இரண்டையும் ஆதரித்தார் என்கிறார் (வர : 308). பிரமசமாஜ அன்பர் ஒருவர் உருவ வழிபாடு தேவையற்றது எனப் பேச, அது தேவை என அவரை வள்ளலார் எதிர்த்து வாதாடித் தம் கருத்தை நிறுவினார் என அவர் வரலாறு கூறுகிறது (297-303). ஆதலால் அவருக்கு உருவ வழிபாடு ஏற்புடையதே என்பது தெளிவு. மன முதிர்ச்சியடையாதவருக்கு உருவமும், முதிர்ச்சியுற்றோருக்கு அருவமும் வழிபடும் பொருள்களாம் என்பது அவர் உட்கிடக்கை (வர : 303).

எனில் பரம்பொருளை அவர் ஒளிவடிவில் உருவமாக வழிபட்டாரா, அருவமாக வழிபட்டாரா? எனும் வினா எழும். தீ - சுடர் - சோதி உருவமா அருவமா அருவுருவமா? அருவம் என்று சொல்ல இயலாது, ஏனெனில் கண்ணுக்குப் புலனாகிறது. ஒழுங்கான வடிவம் அதற்கில்லை. என்றாலும், ஏதோ ஒரு வடிவம் இருக்கிறது. அருவுருவம் என்றே அதைச் சொல்லல் சாலும். "சோதியாய்த் தோன்றும் உருவம்" என்று எவ்வளவு அழகாகத் திருவாசகம் இதை விளக்குகிறது (22 : 9)!

கல்லாத, மன முதிர்ச்சியில்லாதானுக்கு உருவ வழிபாடே தக்கது. அருவமும், வெறும் பண்பியும் அவனுக்குப் புலப்படல்

அரிது. அவதார தெய்வங்களே அவன் தொழத் தக்கவை. அதனால் அற்புதங்கள் - சித்துக்கள் - செய்வோரையும் அவன் தெய்வமாகக் கருதுகிறான். உருவ வழிபாடு என்னும் ஆணிவேரை அறுத்துவிட்டால், தெய்வ நம்பிக்கை என்ற பெருமரம் அடியற்று அங்கு வேரோடு சாய்ந்துவிடும். அருவமாகவும் பண்பே இல்லாததாகவும் கற்பிக்கப்படும். "நிர்க்குண பிரம்மத்"தை அவனால் ஏற்றுக்கொள்ள முடியாது. அந்தத் திறனும் அவனுக்கில்லை. உருவ வழிபாட்டை எதிர்த்துப் போராடிய பிரம்மசமாஜ இயக்கத்தின் மூத்த தலைவர்களில் ஒருவரான கேசவ சந்திர சென் பின்னாளில் மனம் மாறிக் கூறியவை இவை :

> *"உருவ வழிபாடு முழுமுதல் இறைவனில் உடைந்துபட்ட சிறுபண்புகளின் அடையாளமாகும். அவற்றை ஒன்று சேர்த்தால் பரத்துவத்தை உணரலாம் ...... மக்கள் தாங்கள் கண்ட ஒவ்வொரு இயல்புக்கும் ஒரு தெய்வத்தைப் படைத்தனர். ஆதலால் ஒருவகையில் உருவ வழிபாடு தெய்வத் தன்மையுடையதே. ஓரியல்பே தெய்வமாகாது : ஒருருவமும் தெய்வமன்று. ஆனால் தெய்வ இயல்பை உருவமாக வழிபடுவதில் பிழையில்லை. நாத்திகன் உருவத்தை எள்ளலாம் : உருவஞ்சார்ந்த தெய்வத்தியல்பை எள்ள முடியாது"* (Quoted in Rise of Christian power in India, p : 159)

இந்தச் சொற்கள் உருவ வழிபாட்டின் தேவையை வற்புறுத்துகின்றன. "உருவ வழிபாடு உலகம் முழுதும் பரவியிருப்பதே. உலகளாவிய எதிலும் மாசு படரும் : திரிபு தோன்றும் : மனித அழுக்குகளும் தீமைகளும் உருவங்களையும் பற்றின. அது மனிதன் குறை, உருவத்தின் குறையன்று" (திரு.வி.க. "உள்ளொளி" 204)

வள்ளலார் உருவ வழிபாட்டை அழுத்தமாகவே வலியுறுத்தியுள்ளார்.

> *"ஞானிகள் கடவுளை எங்கும் உபாசிப்பார்கள்*
> *யோகிகள் இருதயத்தில் உபாசிப்பார்கள்*
> *கர்மகாண்டிகள் அக்கினியில் உபாசிப்பார்கள்*
> *பக்திகாண்டிகள் விக்கிரகத்தில் உபாசிப்பார்கள்*
> *என்றும் விதித்திருக்கிறது"* (உரை : 341)

இறையனுபவம் உருவ வழிபாடு செய்தாலன்றி வராது. எல்லோரும் யோகியரும் ஞானியரும் ஆகிவிட முடியாது.

ஆன்மீக வீடாகவும் மானிட உடல் இருக்கிறது. அதுபோலத் தெய்வ ஒளி வெளிப்படும் இடங்கள் கோவில்கள். அங்கு உள்ள உருவங்கள் தெய்வங்களின் முழுமையல்லவாயினும் தெய்வத்தன்மை உடையவை.

> "*தியானம் செய்ய வேண்டுமானால் ஏதாவது ஓர் உருவத்தைத் தியானிக்க வேண்டும். நிஷ்களமாயிருக்கப் படாது. உருவமாக இருக்க வேண்டும். அருவமாகத் தியானிக்கப்படாது. பின் உருவங்கரைந்து அருவமாகும்.*"
> (உரை : 296)

இது அவர் கண்ட தெளிவு.

வள்ளலார் பாடல்களிலோ உரைநடைப் பகுதியிலோ உருவ வழிபாடு எதிர்ப்புக் கருத்து ஏதுமில்லை. தத்துவத்தைப் புரியாது உருவத்தை வழிபடுவதில் பயனில்லை. புராணக் கருத்துக்களுக்கு அவர் தத்துவ விளக்கங்கள் கூறியமை இந்த நோக்கில்தான் இருக்க வேண்டும். எளிய மனிதனுக்கு வழிபட உருவம் வேண்டும்: ஞானிக்கும் யோகிக்கும் அது தேவையில்லை. சித்தர்கள் இதை முன்பே கூறினர். சித்தர் பாடல்களில் காணப்படும் உருவ வழிபாட்டு எதிர்ப்புக் கருத்துக்கள் நாத்திகத்தால் வந்தனவல்ல : ஒரு கடவுள் வற்புறுத்தலால் என்பது எண்ணற்குரியது.

ஆனாலும் வள்ளற்பெருமான் ஒரு புதுமை செய்தார். ஒளி வழிபாட்டைக் கொண்டு வந்து பரவலாக்கினார். காரணம் சிவபெருமான் ஒளிவடிவில் அருவுருவப் பொருளாக உணரப்பட்டதே ஆகும். முச்சுடர், ஞானவடிவம், தில்லை நடராசன் என்ற வரிசை முன்னர் மெய்ப்பிக்கப்பட்டது. சிவபெருமானை அருவமாக வழிபடுவதும் உண்டு. திருப்பெருந்துறையில் கருவறைகளில் பீடங்களே உள்ளன : லிங்கத்திருமேனியோ அம்பிகையின் உருவமோ இல்லை.

சத்திய ஞானசபையைக் கோயில் என்னாமல் சபை என்று அவர் கூறியது ஏன்? நடராசப் பெருமானின் ஆடல் நிகழும் மன்றே அது என்பதால் தான். அருளுருவான ஒளி, ஆடும் திருவடியின் சிலம்பொலி இரண்டையும் ஒருங்கே துய்க்க அமைந்தது சபை. "நாதவிந்து கலாதி நமோ நம" என்றும் "ஓசைமணித் தீபத்தில் ஒன்றி நிற்பதெக்காலம்" எனவும் வழிபட்டது ஓசையும் ஒளியும் உள்ளே தோன்றிய நிலையில்தான்.

சபை எண்கோண வடிவத்தில் புதிய அமைப்புடையது. முன்மண்டபத்தில் பொற்சபை, சிற்சபைகள் உள்ளன. உள்மண்டபத்தில் அருட்பெருஞ்சோதி வழிபாட்டுக்குரியதாய் உள்ளது. வேறு தெய்வச் சிலைகள் இல்லை. அருட்பெருஞ்சோதி ஒப்புயர்வில்லாதது : சத்திய அறிவால் அறியப்படும் உண்மைக் கடவுள் ஒருவரே. சமயமத வேறுபாடின்றி மக்கள் அந்தக் கடவுளை வழிபடலாம். இவை சபையின் நோக்கங்கள் என ஒரு குறிப்பு கூறுகிறது (உரை : 433). ஒரு கடவுள், அதுவும் ஒளிவடிவம், எவ்வித வேறுபாடும் இல்லை என்ற கருத்துக்கள் அவருடைய சமயப் பொதுமையைத் தெளிவாக்குகின்றன.

சபையில் வழிபாடு புதுமையானது. அங்கு இசைக் கருவி முழக்கமில்லை. தேங்காய், பழம், நைவேத்தியம் இல்லை : இவற்றை "விநோதங்கள்" என வள்ளலார் கண்டிக்கிறார். "சன்மார்க்கத்திற்கு இப்படிப்பட்ட விநோதங்கள் வேண்டியதில்லை. மனநெகிழ்ச்சியோடு தோத்திரம் செய்வது தான் வழிபாடு" என்பன அவர் சொற்கள். அக்காலத்தில் இப்படி ஒரு கோயிலை அமைப்பதும் வழிபாடு நிகழ்த்துவதும் புதுமை. புறச்சடங்குகள் இல்லாமல், ஆரவாரமில்லாமல், மனத்தூய்மையுடன் வழிபாடு செய்ய வேண்டும் என்பது புரட்சிக்கருத்தே. "நெஞ்சமே கோவில் நினைவே சுகந்தம் அன்பே மஞ்சனநீர்" என்று தாயுமானவர் பாடினது இங்கு உயிர்பெறுகிறது.

ஞானசபை கோயிலாகுமா? அதைச் சங்கம் சார்ந்த திருக்கோயில் என்கிறார் ஊரன் அடிகள் (வர : 486). ம.பொ.சி.யும் அக்கருத்தை ஏற்கிறார். பெரும்பாலோர் அப்படியே கூறியும் வழிபட்டும் வருகின்றனர். ஆனால் சபை, கோயில் என்பதற்கில்லை. கோயிலின் அமைப்புக்கும் சபையின் அமைப்புக்கும் வேறுபாடுகள் உள்ளன. வள்ளலார் வடலூரில் நிறுவ எண்ணிய நிலையங்கள் பற்றிய ஒரு குறிப்பு அருட்பாவின் பழைய பதிப்பொன்றில் உள்ளது. அவை, "சத்திய தருமச்சாலை, சத்திய ஞானசபை, சமரச வேதபாடசாலை, சன்மார்க்க சங்கத் திருக்கோயில், நிருத்த சித்திவிநாயகர் ஆலயம்" என்பனவாம். (மணி திருநாவுக்கரசு முதலியார் பதிப்பு : 17) இதன் பதிப்பாசிரியர் வள்ளலாருடன் நெருங்கிப் பழகிய பூவை. கலியாணசுந்தர முதலியாரின் மாணவர். 1928இல் (வள்ளலார் மறைந்து 50

ஆண்டுகளுக்குப்பின்) இது வெளிவந்தது. பின்னாளில் வள்ளலார் வாழ்வில் நடந்ததாகச் சொல்லப்படும் வரலாற்று இடைச்செருகல்கள் இதில் இல்லை.

இந்தக் குறிப்பில் ஞானசபை வேறு : சங்கம் சார் திருக்கோயில் வேறு என்பது தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆதலால் அவை ஒன்றல்ல. விநாயகர் ஆலயம் பற்றிய செய்தியும் இதில் உள்ளது. ஆதலால் சபை கோயிலன்று என்பது உறுதி. பின் அது எதைக் குறிக்கும்?' கூட்டு வழிபாடு நடத்தப்பட்ட மன்றம் என்பதே சரியாகும். அந்நாளில் கிறித்தவர்கள் கூட்டு வழிபாடுகளை நடத்தி மக்களிடம் சமய உணர்வைப் பரப்பினார்கள் என்பது இங்கு எண்ணற்குரியது. ஏழைமக்களைத் தம் சமயத்தில் நிறுத்த மடங்கள் முயலாதபோது வள்ளலார் அவர்களை ஒன்றுகூட்டச் சபையை நிறுவினார். சங்கம், சாலை, சபை என்று அவர் கண்ட வரிசை இதை மெய்ப்பிக்கும். எல்லோரும் உடனுண்ண வயிற்றுப் பசிக்குச் சோறிடத் தருமச்சாலை தோற்றுவித்த அவரே, எல்லோரும் சேர்ந்து, எல்லாரும் உடன் எண்ணவும் வழிபடவும் சபை கண்டார். இதில் ஒரு மிகப்பெரிய விழிப்புணர்வு இயக்கத்தின் வித்தே அமைந்துள்ளது. மக்களை ஒன்று கூட்டல் (சங்கம்), சோறிடல் (சாலை), கூட்டு வழிபாடு செய்தல் (சபை) எனும் செம்மாந்த நோக்கு வள்ளற்பெருமானின் திட்டமிடல், செயல்படுத்தல், பயன்பெறச்செய்தல் என்னும் ஆளுமைப் பண்புகளைத் தெளிவாக்கும்.

எனின் "சங்கம் சார்திருக்கோயில்" எது எனும் ஐயம் எழும். மேற்சொன்ன அருட்பாப்பதிப்பு இதற்கும் தெளிவு தருகிறது.

"*சத்திய ஞானசபையில் சர்வேஸ்வர பிரதிபாத*
*ஏகேஸ்வர பரத்துவமாய ஒன்றான தெய்வ வழிபாடும்*
*நடராஜமணி சிவகாமியார் வீற்றிருக்கும்*
*அற்புத ஆனந்தத் திருக்கோயிலின் முன்புறத்தில்*
*சாஸ்திர விசாரணையும்*"

நடைபெற வேண்டும் என அவர் எண்ணினார். சைவ நற்கோயில்: சிவகாமியம்மை உடனமர் நடராசர் திருக்கோயில் அது என்பது மெய்ம்மையாகப் புலப்படுகிறது. ஆனாலும் என்ன காரணத்தாலோ அது நிறுவப் பெறவில்லை. அவர் எண்ணம் செயல் வடிவம் பெற்றிருந்தால் கருத்துப் பூசலுக்கு இன்று இடமில்லாமல் போயிருக்கும்.

எனவே சபையில் வழிபட்டது அருட்பெருஞ்சோதி வடிவமான சிவபெருமானே என்பதில் ஐயமில்லை. தனி வழிபாட்டுக்கு வேறு கோயில் நிறுவ எண்ணினும், கூட்டு வழிபாட்டுக்கு இது உகந்தது என்று அவர் கருதியிருக்கக்கூடும். இளமையில் "அகமுக குரு தீக்கைபெற்று, திருவெண்ணீற்றுப்பை திருமந்திரச் சிறுபுத்தகம், உருத்திராட்ச ஜெபமாலை இம்மூன்றும் கைக்கொண்டு சிவசின்னங்களை உடையவராக" அவர் இருந்தார் என்பது ஒரு செய்தி. (ஆதிமூல முதலியார் அருட்பாப் பதிப்பு ப : 17) "ஜெபம்" செய்ய அவர் சபையை நிறுவியிருக்கக்கூடும்.

அங்கு அருவுருவமாக அருட்பெருஞ்சோதிக் கடவுளை, அருவுருவத் திருமேனிதாங்கிய சிவபெருமானை - "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்சோதியை"த்தம் அன்பர்களுடன் - சாதி மதம் இன வேறுபாடுகளைத் தாண்டி அவர் கூட்டு வழிபாடு செய்தார் என்பது என்றும் போற்றி உருகத்தக்க ஒரு செய்தியாகும்.

## ௩. உயிரிரக்கம்

*"வரும் உயிரிரக்கம் பற்றியே உலகவழக்கில் என்*
*மனம் சென்றதோறும்*
*வெருவிநின் அடிக்கே விண்ணப்பித்திருந்தேன்*
*விண்ணப்பம் செய்கின்றேன் இன்றும்*
*உருவஎன் உயிர்தான் உயிரிரக்கம்தான் ஒன்றதே*
*இரண்டிலை இரக்கம்*
*ஒருவில் என்உயிரும் ஒருவும்" - 3506.*

வள்ளற்பெருமானின் உயிர்நெறிகளில், உயர்நெறிகளில் தலையாயது இந்த உயிரிரக்கக் கோட்பாடு. அதனால்தான் தமிழ் முனிவர் திரு.வி.க. "வள்ளலார் சமயம் உயிரிரக்க சமயம் அல்லது அருள்நெறி என்றும் இராமலிங்கர் என்ற பெயருக்குச் சீவகாருணிய மூர்த்தி" என்றும் விளக்கம் கூறினார். (இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப : 76) "உயிரிரக்கம் வெறும் தத்துவமோ கோட்பாடோ மட்டும் அன்று : பிறவுயிரை மதித்தல் என அதற்குப் பொருள் கொள்ளவேண்டும். இன்றைய உலகிற்கு அது கட்டாயத் தேவையாகிவிட்டது. ஒருவன் தன்னைப் பேணவும் இந்தப் பண்பு வேண்டும்." என்பது தத்துவப் பேராசிரியர் ஒருவருடைய மதிப்பீடு. (வ.அ. தேவசேனாபதி, முன்னுரை Life of St. Ramalingar, by P. Mutharasu).

பழைமையான கோட்பாடே யாயினும், தமிழகம் முழுதும் இரக்க எண்ண அலைகளைத் தோற்றுவித்த பெருமை வள்ளலாருக்கு உண்டு. அருட்பா முழுதும் ஒரு பாமாலையாகக் கொண்டால் - அருட்பெருஞ்சோதி, சன்மார்க்கம் முதலிய இறைமை நெறிகளுடன், பசி நீக்கல், சடங்குகள் எதிர்ப்பு உள்ளிட்ட சமுதாயப் பணிகளையும் சேர்த்துப் பல வண்ணப் பூக்கலவைகளால் ஆன மாலை எனக் கொண்டால் அந்த உயிர்ப்பூக்களைக் கோத்து இணைத்து உள்ளம் உருக்கும் வகையிலாக்கிய கயிறுதான் உயிரிரக்கம். எந்த ஒரு அருட்பாட்டிலும் இதன் உயிர்ப்பை, உணர்வை, அதிர்வை, அழுத்தத்தை அறிய முடியும்.

உயிரிரக்கத்தைச் சீவகாருணியம் என்று பெருமான் கூறுகிறார். ஒரு மனிதன் கைக்கொள்ள வேண்டிய நல்ல பண்புகளில் அதுவும் ஒன்று. அது சீவர்கள் தயவு : ஆன்ம விளக்கம். சீவகாருணிய ஒழுக்கமே சன்மார்க்கம். இவற்றுக்கு மேல் போய், அறிவு விளங்கிய உயிர்களுக்குச் சீவகாருணியமே கடவுள் வழிபாடு என்றும் அறுதியிடுகிறார். இந்தக் கருத்துக்கள் உரைநடைப் பகுதியில் காணப்படுபவை.

"*யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை,*
*யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி*"

என்று திருமந்திரக் கருத்து தெய்வ வழிபாடாக வள்ளலாரிடம் முற்றுப்பெறுகிறது.

இறைவன்பால் அடியார் செலுத்துவது பக்தி. இது நடைமுறையிலுள்ள பொருள். வள்ளலார் அதைச் சற்று மாற்றியமைக்கிறார். ஒருவர் பிறஉயிர்களுக்கு ஏற்படும் துன்பம் கண்டு உருகவேண்டும். அந்த மன உருக்கமே பக்தி.

"*பக்தி என்பது மனநெகிழ்ச்சி : மன உருக்கம். ஈசுவர*
*பத்தி என்பது எல்லா உயிர்களிடத்தும் கடவுள்*
*வியாபித்திருப்பதை அறிதல், ஜீவகாருண்யம்*
*உண்டானால் அருள் உண்டாகும்*" (உரை : 314)

என்பன அவர் சொற்கள்.

உயிருக்குப் பணியாற்றுவது இறைவனுக்குத் தொண்டு செய்வதற்கு ஒப்பானது என்பது முன்னரும் தாயுமானவர் உள்ளிட்ட அருளாளர்கள் கூறியதே. எனினும் அதைப் பக்தி என்ற நிலைக்கு உயர்த்தியவர் வள்ளற்பெருமான். அன்பு அருள்

என்பன நிரல்பட நின்று முதிர்ச்சியாகின்றன. அருள் அன்பிலிருந்து தோன்றி விரிந்து உலகத்து உயிர்களை அணைக்கிறது. அந்த உயிரிரக்க அருள் இறைவன் வடிவாக, இயல்பாக வள்ளலாருக்குத் தோன்றுகிறது. "அருளென்னும் அன்பீன் குழவி" என்று வள்ளுவச் சான்றோன் கூறியது முழுமைபெற்ற ஒரு நெறியாக அருட்பாவில் விரிந்து எல்லாவற்றையும் தழுவுகிறது.

*"அருளே நம் அறிவு அருளே நம்மனம்*
*அருளே நம் குணம் அருளே நம்தொழில்"* (அகவல்)

"நமக்குத் தொழில் கவிதை" என்று பின்னாளில் பாரதி முரசறைந்தான். அவருக்கு முன், அவர் போற்றிய வள்ளலாரோ "அருளே நம் தொழில்" என்று உயிர் முரசம் - உயர்முரசம் - கொட்டுகிறார்.

சன்மார்க்கத்தின் முதல்நிலைக் கருவியாக உயிரிரக்கத்தை வள்ளலார் கருதினார். ஆதலால் சன்மார்க்கத்தின் வேர்ப்பொருளாகிய ஞானம் இதனுள் அடங்கிவிடுகிறது. "ஞானவழி என்பதும் சன்மார்க்கம் என்பதும் சீவகாருணிய ஒழுக்கம்" (உரை : 52) என்று வரையறைப் படுத்துகிறார். உயிரிரக்கம் கொண்டால் அறிவும் அன்பும் உடனாக நின்று தோன்றும். அதனால் பிறர் துன்பத்தை அறிதலும் அவர்க்கு உதவுதலும் தாமாக உள்ளுள் ஏற்படும். மாறாக இரக்கமில்லை எனில் அறிவில்லை : உதவும் அன்புமில்லை (உரை : 52). உயிரிரக்கத்தின் வழியாக அறிவு தோன்றும் என்பது ஒரு புதிய விளக்கம். அறிவு - பிறர் துன்பத்தை அறிவது. அன்பு - பிறருக்கு உதவிசெய்வது என்ற அவருடைய உயர்ந்த எண்ணப்போக்கு மனிதனை உயர்த்தும் ஆற்றலுடையது. கற்பதால் வரும் அறிவு, பிறர் துன்பத்தை அறியப் பயன்பட வேண்டும். "நிற்க அதற்குத் தக" என்று குறள் கூறவில்லையா? 1800 ஆண்டுகள் கழித்து அருளுரை எழுதி அதை வலியுறுத்தினார் வள்ளலார். உயிரிரக்கம் கொண்டோர் பெறும் இன்பம் கடவுளின்பம் : அவர்கள் பெறும் விளக்கம் கடவுள் விளக்கம். இந்த இன்பத்தையும் விளக்கத்தையும் பெற்றவரைக் கடவுள் மயமானவர் என்றே அவர் போற்றுகிறார் (உரை : 52). அவர்கள் சீவன்முத்தர்கள். கடவுள்மயமாதல் என்பது சன்மார்க்கம் கூறும் சாயுச்சிய நிலையே: அதுவே முடிந்த நிலை என்பது ஊரன் அடிகள் கருத்து (வர : 279) மேலான நிலையடையும் எளிய வழியைக் காட்டுவது உயிரிரக்கக் கோட்பாடு என்பது கண்கூடு.

ஒருவர் பிற உயிர்கள் மீது இரக்கம் காட்ட வேண்டும் என்பது இயற்கையானது. அப்படிச் செய்வது இறைவனின் அருளாணையைச் செயல்படுத்துவது போலாம். இவ்வுலக ஒழுக்கம் அதனாலேயே நடைபெற்று வருகிறது. அப்படி இல்லையேல் வாழ்வு நெறி சிதைந்து ஒழுக்கம் குன்றிப்போகும் என்று வள்ளலார் கருதினார். உயிரிரக்கமில்லையெனில் வலியவர், எளியவர் என்ற வேறுபாடு தோன்றிப் பொறாமை முதலான தடைகள் பெருகி உயிர்களின் அன்பு வாழ்க்கை அழிந்துபோகும் என்று அவர் அஞ்சினார் (உரை : 56).

உயிரிரக்கமில்லை என்றால் இவ்வுலக ஒழுக்கமன்றி மறுமையொழுக்கமும் இல்லை. ஏனெனில் கடவுள்நிலை அருளின்றியில்லை : அவ்வருளோ இரக்கமின்றி ஏற்படாது. மானிட உடல் அருள்விளக்கமும் ஆன்ம விளக்கமும் பெற்று விளங்குவதாகும். "உமது புத்திரன் சீவகாருணியமே தேகமாகக் கொண்டவன்" என்று மனுமுறை கண்ட வாசகத்தில் வள்ளலார் குறித்துள்ளதும் எண்ணற்குரியது. எல்லா உயிர்களிலும் மேம்பட்ட மனிதன் உயரறிவுடைய உடம்பைப் பெற்றவன், ஆதலால் அருள், ஆன்ம விளக்கம் என்பவற்றோடு உயிரிரக்கத்தையும் அவன் பெற்றிருத்தல் வேண்டும் என்பது இயற்கை நியதி. இந்தக் கருத்துக்கள் எல்லாம் உரைநடைப் பகுதியில் காணப்படுபவை.

உயிர்வாழ்வுக்கு அடிப்படைப் பண்பு இரக்கம் கொள்ளலே: இது வள்ளலாரின் முடிந்த முடிபு. அதில்லாமல் செய்யப்படும் யோகம், ஞானம், தவம் முதலியவற்றைக் கூட அவர் ஏற்க மறுத்தார். இரக்கமின்றி இவற்றைச் செய்பவர்களுக்கு இறையருள் கிட்டாது என்பது அவர் கூறிய தெளிந்த கருத்து. புறக்கோலமும் ஆரவாரமும் ஆகிய போலித் தவம், ஞானங்களை அவர் "பயனற்ற மாயாசாலச் செய்கைகள்" என்று கடிந்தார் (உரை : 71). இரக்கம் ஆன்மாக்கள் தயவு : அருள் கடவுள் தயவாம். சிறிய விளக்கைக் கொண்டு பெருவிளக்கை ஏற்றுவது போல உயிரிரக்கத்தால் பெருந்தயவைப் பெற முடியும் (உரை : 80).

பின்னர், ஏன் மனிதன் இதை உணராமல் இரக்கமில்லாமல் இருக்கிறான்? காரணத்தை வள்ளலார் நுட்பமாகக் கூறியுள்ளார். அது "பிறர் குறைகளை உசாவல்" என்பதே (உரை : 314). "அந்நியரின் தோஷம் விசாரியாமல் இருக்க வேண்டும்" என்பன

**அவர் சொற்கள். வேறு ஒருவருடைய குறைகளையே நாடும்போது வெறுப்பே மிஞ்சும். தம்மை உயர்ந்தவர் என்று ஒருவர் கருதுவதாலேயே உலகில் துன்பங்கள் தொடங்குகின்றன.** மனிதனுக்கு மனிதன் இப்படி வேறுபாடு கொள்ளும்போது, மனிதன் விலங்கு பறவை முதலிய உயிர்களிடம் அன்பு காட்ட வேண்டும் என்று எதிர்பார்ப்பது சற்றுக் கடினமானதே. வெறும் அறிவு பெற்றவனாக மனிதன் இருந்து பயனில்லை. அதில் அருள் கலந்து முதல் நிலை பெற வேண்டும்.

"*அருளறி வொன்றே அறிவு மற்றெல்லாம்*
*மருளறி வென்றே வகுத்த மெய்ச்சிவமே*"

என அவர் அகவலில் பாடுகிறார். அருளறிவு பெற்றவன் தேவன். அதில்லாதவன் மனிதன் (உரை : 276). மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து மனிதன் தெய்வமாகலாம் எனக் குறள் "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன்" என்று தொடங்கிக் கூறும். அன்பும் சிவமும் ஒன்றே எனத் திருமந்திரமும் இதை வற்புறுத்துகிறது. முன்னோரின் ஞானப் பிழிவுகள் அருட்பாவில் நிறைந்து மிளிர்கின்றன.

"*நத்தம்போல் கேடும் உளதாகும் சாக்காடும்*
*வித்தகர்க் கல்லால் அரிது*" - என்பது குறள்.

வாழ்வதாக எண்ணிச் சிலர் செத்துக் கொண்டிருக்கிறார்கள். செத்துவிட்ட சிலரோ இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இன்றும், என்றும் வாழ்பவரே வித்தகர்கள் : அறிவுடையவர்கள் என்பது இதன் ஆழமான பொருள்.

திருவள்ளுவர் வரிசையில் வந்த வள்ளலார் பாடுகிறார் :

"*எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும்*
*தம்முயிர்போல் எண்ணி உள்ளே*
*ஒத்துரிமை உடையவராய் உவக்கின்றார்*
*யாவர் அவர் உளந்தான் சுத்த*
*சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்*
*இடம்என நான்தெரிந்தேன் அந்த*
*வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடஎன்*
*சிந்தைமிக விழைந்த தாலோ.*" (5297)

**வித்தகர் என்ற சொல் இங்கும் இடம்பெறுகிறது. குறளில் வந்த அந்தச் சொல்லுக்கு விரிவுரையாக இப்பாட்டு அமைந்துள்ளது. வித்தகர், சதுரப்பாடும் அறிவுத் திறமையும் உடையவர்கள். அவர்கள் புகழோடு வாழ்பவர்கள். ஆனால் அதை - அழிவிலாத**

அந்த நிலைபேற்றைப் பெற எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி வாழ வேண்டும் என்ற கருத்தோட்டங்களை இதனுள் காணலாம். ஏனெனில் அப்படி உயிரிரக்கம் கொண்டோரின் உள்ளம் தான் சிவபெருமான் ஆடல்புரியும் மன்றாகவே ஆகும் என்பது வள்ளலார் வகுத்த வழி.

உயிரிரக்கம் ஒருவனிடம் தோன்ற என்ன வழி? இறைவனுடைய, அண்டத்தினுடைய பெருமையையும் தன்னுடைய சிறுமையையும் ஒரு மனிதன் நினைத்தால் போதும் இரக்கம் தானாகத் தோன்றும் (உரை : 316). இந்தப் பேரண்டம், அதில் ஒரு கதிரவன், அதைச் சுற்றிக் கோள்கள், அதனுள் இந்தப் பூமி, அதற்குள் கோடிக்கணக்கான உயிரினங்கள் அவற்றுள் தான் ஒரு சிறு இம்மி என இப்படி எண்ணிப்பார்க்கச் சொல்கிறார் வள்ளலார். அப்பொழுது ஒருமையுணர்வு அவனிடம் தானாக அரும்பும். மானிடப் பிறப்பின் மேன்மையை இப்படியெல்லாம் எண்ணிப்பார்க்கின்ற அறிவு இருப்பதாலேயே முழுமை பெறுகிறது. பசி, தாகம், பிணி, பயம், கொலை போன்றவற்றால் பிற உயிர்கள் படும் துன்பத்தைக் காண்பதாலும் கேட்பதாலும் இந்த அறிவு தானாகவே வரும். அனைத்தும் ஒரு கடவுள் படைப்புக்களே என்னும் உடன்படைப்பு, உடன் பிறப்புரிமை இதுவே. "ஒத்ததறிவான உயிர்வாழ்வான்" என்று திருக்குறள் நுட்பமாக இதன் பெருமையைச் சுட்டுவதும் எண்ணற்குரியது. உலக ஒருமைப்பாடு காண விரும்பும் இன்றைய அறிவியலுலகம் வள்ளலாரின் இக்கருத்தை மனத்தில் கொள்ள வேண்டும்.

**இரக்கமும் இன்பமும் :**

இரக்கம் பற்றிப் பலவற்றை எண்ணியும் பேசியும் எழுதியும் புதிய வேகமும் வீறும்கொடுத்த வள்ளற்பெருமான் அதைப் பற்றி நுணுக்கமாக ஆய்ந்து புதிய நோக்கையும் காட்டினார். பரசீவகாருணியம், அபரசீவகாருணியம் என இரண்டு வகைகளாக அவர் உயிரிரக்கத்தைப் பாகுபடுத்துகிறார். பர, அபர என்பன வடமொழி முன்னொட்டுகள். சீவகாருணியம் என்பதும் வடசொல்லே. அக்கால வழக்குப்படி அவர் அதை அப்படி எழுதினார். மேலானது, மேன்மை குறைந்தது எனத் தமிழில் சொல்லலாம். பசி, கொலை இவற்றால் வரும் துன்பங்களை நீக்க முயல்வது மேலான இரக்கம் ; பர சீவகாருணியம். பிற காரணங்களால் வருவதை நீக்க முயல்வது வெறும் இரக்கம் (அபரசீவகாருணியம்) (உரை : 58).

உயிர்களுக்கு ஏன் துன்பங்கள் வருகின்றன? ஊழ்வகையாலும் கவனக்குறைவாகவும் ஏற்படுகின்றன என்பது அவர் கருத்து. பசி, கொலை, பிணி, தாகம், எளிமை, பயம், இச்சை ஆகியவை துன்பம் வரக் காரணங்கள். அவற்றைத் தடுத்து நிறுத்தும் அறிவோ ஆற்றலோ இல்லாத உயிர்களுக்கு, இந்த இரண்டையும் இறையருளால் பெற்ற மனிதன் ஓடிச் சென்று உதவ வேண்டும். அது அவன் கடமை என்று வலியுறுத்தியுள்ளார்.

உயிரிரக்கம் இரண்டு வகைகளாதல் போல, அவற்றால் வரும் இன்பமும் இருவகையாம். பசி கொலை இவற்றைத் தவிர்ப்பதால் வரும் இன்பம் மேலானது (பர இன்பம்) : பிணிமுதலான கேடுகளை நீக்குவதால் வருவது அபர இன்பம்; வெறும் இன்பம். முன்னது முத்தியின்பத்துக்கு இணையானது. ஏனெனில், அப்படிச் செய்பவனுக்கு இம்மை, மறுமையின்பங்களையும் பேரின்பத்தையும் அது ஒருங்கே தரும். பிணி, பயம் போன்றவை இம்மை மறுமை இன்பங்களைத் தடுக்க, ஆசை இம்மை இன்பத்தை அழிக்கும். நிறைவேறாத ஆசைகள், அதிக ஆசை என்பன இன்பத்தை இழப்பதற்கும் துன்பத்தை அடைவதற்கும் வழிகள். இப்படியெல்லாம் பெருமான் உரை நடையில் விரிவாக எழுதியுள்ளார்.

பசி நீக்கல், கொலை தவிர்த்தல் என்ற இரண்டு அறங்களும் அவர் உள்ளும் புறமும் விரவி நிற்பன. பசி நீக்கல் பற்றி முன்னர் விரிவாகக் கூறப்பட்டது. கொலை தவிர்த்தல் இங்கு ஆழமாக எண்ணத்தக்கது. இந்த அறத்தை வள்ளலார் புலால் மறுத்தல், கொலை தவிர்த்தல் என இன்னும் இரண்டு பிரிவுகளாக்கியுள்ளார்.

புலால் மறுத்தல் :

புலாலுண்ணலை வள்ளலார் கடுமையாக எதிர்த்தார். உயிரிரக்கத்துக்கு அது எதிரானது. அருளுடைமை பேணுவோர் "தன்னூன் பெருக்கிற்கு"ப் பிறிதின் ஊனுண்ணான் என்னும் குறளின் கருத்து வள்ளலாருக்கு முழுமையாக உடன்பாடாகும். ஓருயிரைக் கொன்று அதன் புலாலால் இன்னோருயிரின் பசியை ஆற்றல் உயிரிரக்க ஒழுக்கமும் அன்று : கடவுளுக்கு ஏற்புடையதுமன்று என வள்ளலார் கருதினார்.

புலால் உண்ணக்கூடாது என்பதற்கு அவர் காட்டும் காரணங்கள் அறிவார்ந்தவை. தாவரங்களை உண்பதும்

உயிர்க்கொலையே அல்லவா என்று கேட்டவர்க்கு விடைதருவது போல அவர் எழுதிய குறிப்புக்கள் அவருடைய கூர்த்த அறிவைக் காட்டுகின்றன. தாவரங்கள் ஓரறிவாகிய தொடு உணர்ச்சியை மட்டும் உடையவை : அவற்றின் வித்துக்கள் சடப்பொருள்கள் : தவிர, வித்துக்கள் மூலம் பயிர் செய்யவும் முடியும் : தாவரம் உணவாகும்போது பெரும்பாலும் முழுத்தாவரம் உணவாவதில்லை: ஓரோர் உறுப்பே பயன்படுகிறது : ஆதலால் தாவரத்தின் முதல் கொல்லப்படுவதில்லை. இலை, காய் ஆகியவற்றை எடுக்கும்போது வெட்டல், அறுத்தல் போன்ற துன்பம் இல்லை : தாவரத்தின் உயிர் போவதும் அரிது. ஆனால், புலாலுக்காக ஒரு உயிரை - விலங்கோ பறவையோ - கொல்லும்பேர்து அந்த உயிரே போகிறது : அதை மீண்டும் உயிர்ப்பிக்கவும் முடியாது ஒருறுப்பை வெட்டினாலும் அதிர்ச்சியாலும் இரத்தப் பெருக்காலும் அது துன்புற்று இறக்கிறது. ஆதலால் அது - புலாலுண்ணல் - மிகவும் கொடிய செயலாகும்.

எந்த வகையிலும் புலால் உணவு கூடாது, என்பதில் அவர் உறுதியாக இருந்தார். சுத்த சன்மார்க்கிகளாய்த் துறவு பூண்டவர்கள் பால், நெய் கூடக் கொள்ளலாகாது என்பது அவர் கணிப்பு. உயிரிலிருந்தே அவை பெறப்படுகின்றன என்று அவர் கருதினார். தவிர, துன்பம் தராவிடினும் ஒருடம்பிலிருந்து, அவை பெறப்படுவதால் தாவர உணவாக அவற்றைக் கருதற்கில்லை.

புலாலுண்ணலைப் புலைநெறி என்று அவர் குறித்தார். அதே போல அற்புதங்கள் செய்யும் ஆற்றல் பெற்றவராயினும் - ஆணைப் பெண்ணாக்கியோ பெண்ணை ஆணாக்கியோ செய்யும் வல்லமை பெற்றவராயினும் புலாலுண்பாராக இருந்தால், அவர்கள் அறிவற்றவர்களே, ஞானியரல்லர் என்று அவர் தெளிவுபடுத்தியுள்ளார் (3027).

புலாலுண்ணலை இவ்வளவு கடுமையாக எதிர்த்தவர், உயிர்க்கொலையை இன்னும் வன்மையாக எதிர்த்தார். எல்லா உயிர்களும் இறைவனின் திருவடிவங்கள். அவற்றுக்கு உடம்பையும் பொறிகளையும் அவனே தந்தான். அவன் ஆக்கிய உயிரை, அவன் ஆக்கிய உடம்பிலிருந்து பிரித்தல் பெரும்பாவம். இயல்பாக ஓருயிர் தன்னுடலை நீத்தல் வேறு ; வன்முறையில் அதைப் போக்குவது வேறு. "கொலை" என்ற சொல்லுக்கு

இப்படி அவர் பொருள் கூறினார். இயல்பாக உயிர் நீத்தல் இறப்பு: வன்முறையால் நீக்கல் கொலை. இறப்பால் உடம்பு பெரும் துன்பம் உறுவதில்லை : கொலையின் போது சொல்லமுடியாத வேதனையை அடைகிறது. இறப்பை மனிதனால் தடுக்க முடியாது : ஆனால் கொலையை உறுதியாகத் தடுக்க முடியும். அவர் எழுதிய ஜீவகாருணிய ஒழுக்கத்தில் இது போன்ற பல அரிய கருத்துக்களைப் பரக்கக் காணலாம்.

ஓர் உயிரைப் பிறப்பிக்கும் உரிமையில்லாதவனுக்கு அதை இறக்கச் செய்ய உரிமையில்லை. கொலை செய்யப்படும்போது உயிர் படும் வேதனைகளை - துன்பக்குறிகளை - படிப்பார் உள்ளமுருகிக் கண்ணீர் சிந்தி அழும் அளவுக்கு - அவர் கூறியுள்ளார். ஒருவர் - ஒருயிர் - உணவின்றிப் பசியினால் படும் துன்பங்களை முன்னர் கண்டுரைத்த அவர், கொலைத் துன்பங்களை இங்கு விளக்கமாகக் கூறுவது எண்ணற்குரியது. இரண்டும் - இரண்டினால் ஏற்படும் துன்பங்களும் - இணையாகவே இருக்கின்றன. அதனால் அவற்றைத் தீர்க்கும் செயலை மேலான அறம் - பரசீவகாருணியம் என்று வற்புறுத்தினார்.

தனிமனித, தனி உயிர்க் கொலைகள் மட்டுமல்ல. அருளே நிறைந்த, இரக்கமே வடிவமான பெருமானின் உள்ளத்தில் உலகத்தில் போரினால் பலர் - பல்லாயிரம் பேர் - இறப்பதும் கொலைக்குச் சமமோ என்று பட்டது. அவர் பாடுகிறார் :

"*அரங்கினில் படைகொண்டு உயிர்க்கொலை புரியும்*
*அறக் கடையவர்*" (3288)

போர்செய்பவர்கள் அறநெறி பின்பற்றாத கடையர்கள் என்பது கணிப்பு. போரற்ற, கொலையற்ற உலகமே அவர் வேண்டியது. உயிரிரக்க நெறிக்குப் போர் எதிரிடையானது என்பது தெளிவு. கொலைக்காக மட்டுமல்லாது, கொலைக்குக் காரணமான விலங்குகள், சிறுதெய்வங்கள் இவற்றின் பெயர்களைக் கேட்டால் கூட அவர் அஞ்சினார்.

"*இயங்கு ஆளிபுலி கரடி எனப்பெயர் கேட்டு*
*உளம்நடுங்கி இருந்தேன் ஊரில்*
*சயங்காளி கோயிலைக் கண்டஞ்சி மனம்*
*தழுதழுத்துத் தளர்ந்தேன்*" (5342)

என்னும் பாடல் வரிகள் உருக்கமானவை. "நலிதரு சிறிய

**தெய்வம்", "கலியுறு சிறிய தெய்வம்" என்று அவற்றைக் கடுமையாகச் சாடினார். உயிர்க்கொலை, புலாலுண்ணல் பற்றிய அவருடைய உறுதியான நெறி இதன்மூலம் புலப்படும்.**

உயிரிரக்கம் என்பது இந்த இரண்டோடு நின்றுவிடுவதில்லை. பிறரும் பிற உயிர்கள் படும் துன்பங்களுக்காக இரங்குவதும், அவற்றை நீக்க முயல்வதும் மேலான அறங்களே. பல அருட்பாக்களில் இந்தக் கருத்தோட்டங்களைக் காண முடியும். பிள்ளைப் பெருவிண்ணப்பம் முழுதுமே அவர் பிறருக்காக, பிற உயிர்களுக்காக இரங்கிய உணர்வுகளின் பதிவேடு தான். ஒரு மனிதன் தன்னைச் சுற்றியுள்ளோர் பற்றியும் எண்ணி உதவ முன்வர வேண்டும் என்பதை அதனுள் வரும் பாடல்கள் உணர்த்துகின்றன. பிணியாளர், இறந்தோர், செல்வத்தைப் பறிகொடுத்தவர், கலகமிட்டவர்கள் என மனிதர்க்காக அவர் வருந்தினார். காக்கை, பல்லி, பசு, கன்று என விலங்குகளின் துன்ப ஒலி கேட்டும் உருகினார். "வாடிய பயிரைக் கண்டு வாடினேன்" என்ற அருட்பாவைப் பாடாத சன்மார்க்கி இல்லை. வெள்ளையான ஆடையில் சிறுகறை படுவது கூட அவருக்குத் துன்பம் தந்தது.

"*நறுவிய துகிலில் கறையுறக் கண்டே*
*நடுங்கினன் எந்தை நீ அறிவாய்*" (3435)

என்ற சொற்கள் உயிரிரக்கத்தின் மணிமுடிச் சொற்கள். உலக வரலாற்றில் எந்த அருளாளரும் இப்படி உருகி இருப்பரோ எனத் தெரியவில்லை. பிறருடைய துன்பம் கேட்டு அவர் உருகியதும், உதவியதும், உதவ முடியாத போது வருந்தியதும் அவருடைய கடிதங்கள் காட்டும் இரக்க அலைகளாகும். தமக்காக வருந்தாமல் பிறருக்காக அவர் வாழ்ந்தது

"*தமக்கென முயலா நோன்தாள்*
*பிறர்க்கென வாழுநர்*"

இருப்பதால் - பண்புடையார்ப் பட்டுண்டு இந்த உலகம் அழியாமல் இருப்பதாகப் புறமும் குறளும் கூறும் கருத்துகளுக்குச் சான்றாகும்.

**இந்த அறவுணர்வை அவர் பலகாலும் வலியுறுத்தினார்**
**"*அப்பா நான்வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்***
***ஆருயிர்கட்கு எல்லாம் நான் அன்பு***
***செயல்வேண்டும்*" (4079)**

என்று அவர் இறைவனிடம் கேட்பது வெறும் வரம் மட்டுமன்று: அருளுள்ளத்தின் உருக்கக் குரலுமாகும். தாம் உண்டதும் வாழ்ந்ததும் பிறருக்காக என்று பல இடங்களில் அவர் குறித்துள்ளார். அவர் முகத்தில் எப்போதும் ஒரு துயரக்குறி இருக்குமாம். தன்னுடைய துன்பத்துக்காக அல்லது உடல் வருத்தத்துக்காக அப்படி அவர் இருக்கவில்லை. தம்மைச் சுற்றிப் பலரும் பலவும் துன்பப்படுவதைப் பார்த்து உதவ முடியாமல் போன போது ஏற்பட்ட குறி அது. இந்த இரக்கம் ஒன்று பற்றியே உலக வழக்கில் - அன்றாட வாழ்வியலில் - இரண்டும் வேறில்லை: இரக்கம் நீங்கில் அவருயிரும் நீங்கும் என அவரே பாடியது இந்தப் பகுதியின் தலைவாசல் பாடலாக அமைந்துள்ளது.

"*இரக்கமே வடிவாம் வடலூரான்*" என்றும்
"*மிளகை நேரொரு சிறியவண்டு எழுந்து*
*விளக்கில் வீழினும் விழிப்புனல் சிந்தி*
*இளகும் நெஞ்சகம் பெறும் வடலூரான்*"

என்றும் அவருடைய சமகாலப்புலவர் - அவரை நேரில் கண்டு பேசிப் பழகிய வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பாடுவது வெற்றுச் சொற்களாலல்ல : தாம் நேரில் கண்ட அனுபவத்தால் தான்.

இரக்கம் மேலிட உயிர்களுக்குத் தொண்டு புரிவதை இறைவனுக்குச் செய்யும் தொண்டாகவே அவர் கருதினார். பிறருடைய துன்பங்கள் மிகுதியாக இருந்தபோதும், தம்மால் அவற்றை நீக்க முடியாத போதும் இனி வாழ்வதில் பயனில்லை என்னும் அளவு அவர் மனம் நொந்தார்.

"*என்னளவிலையே என்னினும் பிறர்பால்*
*எய்திய கருணையால் எந்தாய்*
*உன்னுறு பயமும்இடரும் என்தன்னை*
*உயிருடன் தின்கின்ற தந்தோ*
*இன்னும் என்தனக்கு இவ்விடரொடு*
*பயமும் இருந்திடில் என்னுயிர்தரியா*" (3537)

என்னும் சொற்கள் அவருடைய கசிந்த மனத்தைக் காட்டும். அவருக்கும் உயிர்வாழ ஆசையிருந்தது : ஆனால் தனக்காக அல்ல, பிறருக்காக என அவரே கூறுவது ஓர் அரிய குறிப்பு. மற்ற உயிரினங்களை விட மனிதன் மேம்பட்டவன் என்பது இந்தத் தன்மையால் தான் என்பதை அவர் வாழ்ந்து காட்டினார்.

**ஆன்மநேய ஒருமைப்பாடு :**

**இரக்கத்தின் முற்றியநிலை ஆன்மநேய ஒருமைப்பாடு. இதைச் "சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லட்சியம்" என்று அவர் எழுதுகிறார் (உரை : 444). ஒருயிர் பிறிதோருயிர் மீது கொள்ளும் அன்பு ஆன்மநேயம். பிறிதோருயிரின் துன்பம் ஒன்று சேர்ந்து ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையாகிறது. ஆதலால் ஞானவழியான சன்மார்க்கத்தின் ஆணிவேர் - முக்கிய லட்சியம் - இது என அவர் குறித்தது இந்த அடிப்படையில்தான்.**

உயிர்களனைத்தையும் ஒன்றாகக் காணும் காட்சி - தெளிவு - அவருக்கிருந்தது. உலகத்தார்க்கு அது என்று வருமோ என அவர் கவலைப்பட்டார். அந்த உணர்வு வராதவரை வேறுபாடுகள் இருக்கும் : அவற்றால் போர்கள் மலியும். எல்லாரும் வாழ வேண்டும் : எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும். அதுவே மனுக்குலத்தின் வெற்றிக்கு அடையாளம்.

"*ஒத்தாரும் உயர்ந்தாரும் தாழ்ந்தாரும் எவரும்*
*ஒருமையுளர் ஆகி உலகியல் நடத்தல் வேண்டும்*" (4082)

என்று தம் வேட்கையை - ஆவலை - வெளிப்படையாகவே பாடினார். இன்னார் இனியார், உயர்ந்தார் தாழ்ந்தார், ஏழை செல்வர் என்ற வேறுபாடுகளின்றி எல்லாரும் எல்லாமும் பெற வேண்டும் என்பதே ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை. கொலை புலை, புரிந்தாரை அவர் வெறுத்தார். எனினும் அவர்களுக்கும் துன்பம் ஏதேனும் நேரிட்டால் நீக்க வேண்டும் என எண்ணும் அளவு அவர் இந்நெறியை வலியுறுத்தினார். யார்பட்டாலும் துன்பம் துன்பமே : அதை நீக்குவது அறிவுடையார் கடன் என்பது அவர் கண்ட கனிவு.

"*கொடியவரே கொலைபுரிந்து புலைநுகர்வார் எனினும்*
*குறித்திடும் ஓர் ஆபத்தில் வருந்துகின்ற போது*
*படியில் அதைப் பார்த்துகவேல் அவர்வருத்தம் துன்பம்*
*பயந்தீர்த்து விடுக*" (4162)

எனத் தமக்கு இறைவன் ஆணையிட்டதாக அவர் பாடி எல்லார்க்கும் ஆணையிடுகிறார்.

**ஒருயிர் பெறும் இன்பத்தைப் பிற உயிரும் பெற வேண்டும் என்று எண்ணுவது இயற்கை. அதேபோலப் பிற உயிர்க்கு வந்த துன்பம் தனக்கு வந்ததாக எண்ண வேண்டும் என்று அவர் கூறுவது புரட்சி. அதுவே ஆன்ம நேயம். கருணை ஞானத்தில்**

கனிவது. "பிறிதின் நோயைத் தன்நோய் போல்" போற்ற வேண்டியது அறிவின் பயன் எனக் குறள் வலியுறுத்துவதை நினைவூட்டுகிறார் வள்ளலார். உயிர்களுக்கு இடையே வேறுபாடு காணும் செயற்கைச் சிறுமையை விட்டுவிட்டு "உயிரெலாம் பொது" எனும் செம்மாந்த நோக்கை மனிதன் பெறல் வேண்டும். கருணையும் சிவமும் ஒன்றே : வேறல்ல. தாவரமோ விலங்கோ உயிரில் வேற்றுமையில்லை : உடம்பமைப்பில் தான் வேறுபாடு.

"*எவ்விடத்தும் எவ்வுயிர்க்கும் இலங்கு சிவம் ஒன்றே*" (4175)

"*உயிர்த்திரள் ஒன்றென உரைத்த மெய்ச்சிவமே*" (4615)

என்றெல்லாம் வரும் அருட்பா வரிகள் எண்ணத்தக்கவை.

ஆன்மநேய ஒருமைப்பாட்டுணர்வு மருளற்றது. மயக்கம் தராதது. அருள்நெறி அதுவே. இரக்கம் வேறு அன்புவேறு என்பதை ஒருபாட்டில் குறிப்பாக அவர் புலப்படுத்துகிறார். அன்புடைமை அதிகாரத் தொடக்கத்தில் அன்பு தொடர்புடையாரிடம் கொள்ளும் காதல் என்றும், தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை அருள் எனவும் பரிமேலழகர் எழுதுகிறார். இவற்றைச் சற்று மாற்றி அருளை ஈரமென்றும் அன்பை அன்பென்றும் குறித்து அருள் இரக்கமாவதைச் சுட்டி,

"*ஈரமும்அன்பும் கொண்டு இன்னருள் பெற்றேன்*
*என்மார்க்கம் இறவாத சன்மார்க்கம்*" (4960)

என்று வள்ளலார் பாடுகிறார். இரக்கத்தை அவர் ஈரம் என்கிறார். இரக்கமுடையார் உள்ளம் கோயிலுக்குச் சமம் என்பது அவர் முடிபு. "எத்துணையும் பேதமுறாது" எனத் தொடங்கும் அருட்பாவில் அருளுடைய வித்தகர் உள்ளம் "எம்பெருமான் நடம்புரியும் இடம்" என்று முழக்கமிடுகிறார். "உள்ளம் பெருங்கோயில்" என்று திருமந்திரம் கூறுவது பலரும் அறிந்ததே. உயிரிரக்கம் உடையாரை வள்ளலார் வித்தகர், புண்ணியர், நல்லறிவாளர், நல்லமைதி பெற்றோர் எனப் புகழ்ந்து அவர்களுக்கு ஏவல் புரியவும் விரும்புகிறார். அத்தகையோர் கூறும் வாய்ச் சொற்கள் கூட வேதாகமங்களுக்குச் சமம் என அவர் முரசறைகிறார்.

"*பொருள்நெறி சற்குண சாந்தப் புண்ணியர்தம்*
*திருவாயால் புகன்ற வார்த்தை*
*அருள்நெறி வேதாகமத்தின் அடிமுடிசொல்*
*வார்த்தைகள்*"

என்பது அவர் முழக்கம்.

உயிர்களிடத்து இரக்கம், இறைவன்பால் அன்பு இந்த இரண்டும் ஒருவருக்கு இருக்க வேண்டிய சன்மார்க்க சாதனங்கள் என்பது அவர் கருத்து (உரை : 312). ஒருவர் வழிபாடு செய்யும் போது இவ்வுலகெலாம் நன்றாக வாழ வேண்டும் என மனமார வழிபட்டால், உலகத்துள் அவரும் ஒரு உறுப்பினராதலால் அவர் வேண்டுதலும் நிறைவேறும் என வழிபாட்டில் ஒரு எளிய நெறியைக் காட்டுகிறார்.

"*நான்பெற்ற பெரும்பேற்றை ஓதிமுடியாது*
*என்போல் இவ்வுலகும் பெறுதல் வேண்டுவனே*" (3630)
என்பது அவர் கண்ட அந்தநெறி : அன்புநெறி.

வள்ளலாரின் இந்த உயிரிரக்கக் கோட்பாடு எல்லாருடைய உள்ளங்களையும் ஈர்த்த உயர்வுடையது. தமிழறிஞர் பி.ஸ்ரீ. அவருடைய உயிரிரக்கம் சமதரும நிலையை அடிப்படையாகக் கொண்டதென்றும் அதன் பின்னணி சமூக மாறுதல் காண்பதென்றும் எண்ணுகிறார். (இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும் ப : 50) சமயத்திற்கு மட்டும் வலியுறுத்தப்படும் அறமாக மட்டுமல்லாமல், சமுதாயத் தீர்வுக்கும் இது பயன்படும் என்பது ஆழ்ந்து கருதற்குரியது. இன்று உலகம் முழுதும் போர் மேகங்கள் சூழ்ந்து வருகின்றன. உலகே அழிவின் விளிம்பிற்குப் போய்க் கொண்டிருக்கிறது. வள்ளலாரின் உயிரிரக்கக் கோட்பாடு இந்தக் காலச் சூழலில் மிகவும் போற்றிப் பயன்படுத்த வேண்டிய நல்லறம் என்று சமய, சாதி, உலகத் தலைவர்களுக்கு உணர்த்த வேண்டும்.

விலங்குகள் பால் இரக்கம் செலுத்தி இயக்கம் கண்ட திருமதி. ருக்மணியம்மாள், "உயிர்களிடத்துக் கருணைகாட்டல் மூலம் மானிட குலம் அழியாது நற்கதி பெறும் என வள்ளலார் நம்பியதாகவும், கொலை மறுத்தல் மூலம் வாயில்லா உயிர்களின் துன்பத்தைப் பாராதிருந்தோரின் மனத்தைத் திறந்து அங்கும் இறைவனின் இருப்பைக் காட்டியதாகவும் கூறுவது அழகான மதிப்பீடு. (பாலகிருஷ்ண பிள்ளை பதிப்பு. X : 34,35) மானுட எல்லை தாண்டிய ஆன்மநேய ஒருமைப்பாட்டு நெறியை நாரண.துரைக்கண்ணன் "தோழமை நெறி" என்கிறார். (திருவருட்பிரகாச வள்ளலார், ப : 12) "சன்மார்க்கம் தானே சகமார்க்கமாவது" என்று முன்னர் திருமந்திரம் கூறியதும் இதுவே. ஞானம் அருளாவது இயல்பே. வள்ளலார் இப்படிப் பயன்பாட்டு

நிலையில் சன்மார்க்கத்தின் மூலம் எல்லா உயிர்களையும் தோழமையாக்கினார். இது "ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய தோழனுமாய்" என்ற சுந்தரர் தேவாரத்தை எதிரொலிக்கிறது.

வள்ளலாரின் தத்துவம் பற்றி முனைவர் பட்ட முன்னோடி ஆய்வு செய்த திரு. சிவசுப்பிரமணிய பிள்ளை "சகோதர நேயம் வாழ்க்கையில் காணப்படும் தத்துவம் மட்டுமன்று : அது வாழ்க்கையில் ஒரு கூறுமாகும். வாழ்க்கையின் உயர்நெறியை அது காட்டுகிறது. தொடர்ச்சியாக மானிட வாழ்வின் மேன்மையும் அதுவே" என முடிவு கூறுவது போற்றற்குரியது.

**பழைமை :**

தமிழகத்தில் மட்டுமில்லாமல் இந்தியா முழுவதிலும் - உலகெங்கும் - புலாலுண்ணலும் உயிர்ப் பலியும் பழங்காலம் தொட்டு இருந்து வருகின்றன. இந்து சமயத்தில் சில பிரிவுகளுக்கு இவையிரண்டும் இன்று உடன்பாடே : ஆனால் சிலவற்றுக்கு ஏற்புடையன அல்ல. வீரசைவர்கள் இரண்டையும் கடிந்து ஒதுக்கினர். பௌத்தர்கள் கொலையைக் கடிந்தனர் : ஆனால் புலாலுண்ணலை வெறுக்கவில்லை. கிறித்தவ இஸ்லாம் சமயங்களிலும் முன்னது பற்றி அதிகக் குறிப்பில்லை. ஆனால் உயிர்ப்பலியை ஏற்கின்றனர். புலாலுண்ணல் கடியப்படாத ஏற்றுக்கொண்ட வழக்கமாக உள்ளது.

சமண ச்மயச் செல்வாக்கு தமிழகத்தில் கால்கொண்ட போதுதான் உயிர்க் கொலையும் புலைப்புசிப்பும் கடியப்படலாயின. இது சமணரின் கொடை. வடமொழி வேதங்களில் வேள்வி, உயிர்ப்பலி, புலாலுண்ணல் பற்றிய குறிப்புகள் உள்ளன. வேள்வி செய்வோர் உயிர்ப்பலி இடுவோர், நெய்பால் இடுவோர் என இருவகையினர் எனத் திருமந்திரம் கூறுவதும் இங்கு காணத்தக்கது. இந்தக் கருத்துக்கு அரணாக, அதற்கு உரை எழுதியவர்,

*"ஊனொடு உண்டல் நன்று*
*ஊனொடு உண்டல் தீது எனத்*
*தொண்டர்கள் அன்பினால் பேசுவர்"*

என்னும் சம்பந்தர் தேவாரத்தைச் சான்று காட்டுகிறார். தொடக்க நிலையில் சைவத்தில் உயிர்ப்பலி இருந்திருக்கிறது என்பதற்கு இது எடுத்துக்காட்டாம்.

**திருவள்ளுவர் கொல்லாமை, புலால் மறுத்தல் என இரண்டு அதிகாரங்கள் வகுத்துக் கொலை, புலை இரண்டையும் கடுமையாகச் சாடினார்.**

*"நல்லாறு (சன்மார்க்கம்?) எனப்படுவது ..... கொல்லாமை"*
*"நிலையஞ்சி நீத்தாருள் ........ கொல்லாமை சூழ்வான் தலை"*
*"கொல்லான் புலான் மறுத்தானை ...... எல்லா*
*உயிரும் தொழும்"* .

என்பன குறளின் கருத்துக்கள். வேள்வி செய்வதைக் காட்டிலும் புலாலுண்ணாதிருத்தல் மேலானது என்பது குறள் கண்ட புரட்சி.

இரட்டைக் காப்பியங்களான சிலம்பிலும் மணிமேகலையிலும் இந்த இரண்டு அறங்கள் பற்றிச் சில கருத்துக்கள் உள்ளன. "ஊனூண் துறமின் உயிர்க்கொலை அஞ்சுமின்" என்பது சிலப்பதிகாரம். உயிர்க்கொலையை மயக்கறு மக்கள் கடிந்தனர் என்று கூறும் மணிமேகலை, முதுமையுற்றுச் சாகும் விலங்குகளின் புலாலைத் தின்ன இசைகிறது. தீவினைகள் இன்னின்ன என்று கொலை முதலாகக் குற்றம்பட உணர்தல் வரை பத்தினைக் கூறும் மணிமேகலை அவற்றுள் புலால் மறுத்தலைக் கூறவில்லை (மணிமேகலை 30 : 66-71).

திருமந்திரத்தில் வேள்வி பற்றிய செய்தி வந்தாலும், கொலை புலையை அது ஏற்கவில்லை என்றே தெரிகிறது. மலர்தூவி இறைவனை வழிபடுவது நல்லதே : எனினும் அதைக் காட்டிலும் கொல்லாமையுள்ளிட்ட எட்டு நற்பண்புகளை மாலையாக்கி வழிபடுவது மேலானது : அப்படி வழிபடுவோரே உண்மை அடியார் : கொல்லாமை ஞானபூசையிலும் முதல் மலராகும் சிறப்புடையது : கொலை செய்வோர் விலங்கோடு ஒப்பர். ஐம்பெரும்பாவங்களில் கொலைபுரிதல் மிகவும் கொடியது. புலாலுண்போர் புலையர், பொல்லாத கொடியர், இழிவிலங்கிலும் இழிந்தோர். அவர்களுக்கு இம்மை மறுமை இன்பங்கள் இல்லை. இவை திருமந்திரக் கருத்துக்கள். சற்று கூர்ந்து நோக்கின் அருட்பாவில் இவை எதிரொலிப்பதைக் கேட்க முடியும்.

தேவார, திருவாசகங்களில் இவையிரண்டு பற்றிக் **குறிப்பில்லை. பொதுவாகத் தனிமனித, சமுதாயச் சிக்கல்கள் பற்றி மாணிக்கவாசகர் பாடவில்லை. எனினும் கொலை, புலை அவருக்கு ஏற்புடையன என்று கொள்வது பாவம். தேவாரத்திலும் இந்த அறங்கள் வலியுறுத்தப்படவில்லை. இது வியப்பே.**

"ஊனுண்டல் நன்று ஊனுண்டல் தீது" என்ற இரண்டு அடியாரையும் சம்பந்தர் குறிக்க, "ஆவுரித்துத் தின்கின்ற புலையராயினும்" சிவனை வணங்கினால் சாலும் என அப்பர் இசைகிறார். கொலை, புலை தவிர்த்தல் சமய குரவர்கள் பாடல்களில் அடிப்படை நியதியாக்கப்படவில்லை.

தாயுமானவர் பாடல்களில் ஆன்ம நேய ஒருமையுணர்வுக் கருத்துக்கள் உள்ளன. வழிபாட்டுக்குப் பூப்பறிக்கக் கையை நீட்டி, "பார்க்கின்ற மலரூடும்" இறைவனைக் கண்டு மலரெடுக்காமல் வணங்கியமை : உயிர்த்திரள் அத்தனையும் தம்முயிராகக் குழைந்துருகி அவற்றுக்கு நன்மை செய்ய விழைந்தமை : தமக்குக் காட்டியதுபோல எல்லா உயிருக்கும் கருணை காட்டும்படி இறைவனை வேண்டியமை : "எங்கெங்கு பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்" இறைவன் அருள்பாலிப்பதை உணர்ந்து போற்றியமை : எவ்வுயிரும் தம்முயிர்போல எண்ணும் அருளாளருக்கு ஏவல் புரிய விழைந்தமை : கொல்லாமையுடையரே நல்லவர், கொல்லாமை பல குணக்கேடுகளை நீக்கும் என உணர்த்தியமை : இறையருள் நாடுவோர் கொலைபுரியலாகாது எனத் தெளிந்தமை ஆகிய இத்தனை - இது போன்று இன்னும் பல கருத்துக்கள் தாயுமானவரின் பாடல்களில் உயிரிரக்கக் கருத்துக்களாக மிளிர்கின்றன. ஆயினும் கொல்லாமையை வலியுறுத்தும் தாயுமானவரும் புலால் மறுத்தலைக் கூறவில்லை. வள்ளுவரும் வள்ளலாரும் வலியுறுத்தும் இந்த புலால் மறுத்தலாகிய அறம் சைவ சமயத்தில் பெரிதாகப் போற்றப்படவில்லை என்பது குறிக்கத்தக்கது.

சமண சமயத்தின் தலையாய ஒழுக்கம் கொலை, புலை தவிர்த்தலே. தாயுமானவர் முன்னதைப் போற்றினார். அவரையொட்டி வந்த வள்ளலார் பின்னதையும் உறுதியாகக் கொண்டார். எல்லா உயிரிலும் இறைவனைக் கண்ட அவருடைய சீவகாருணியம் தாயுமானவரின் கொடை. "வாடிய பயிரைக் கண்டு வாடிய" அவருடைய அருளின் வித்து, வழிபாட்டுக்கு மலர்பறிக்கக் கையை நீட்டி, செயல் மறந்து மலருள் இறைவனைக் கண்டு வணங்கிய தாயுமானவரின் பாடலில் உள்ளது. எவ்வுயிரும் தம்முயிர் போல எண்ணும் அருளாளரைத் தாயுமானவர் வணங்கினார் : அந்த வித்தகர்க்கு ஏவல் செய்யவும் வள்ளலார் விரைந்தார். "அருளால் எதையும் பார் : அறிவால் பாராதே" எனக்

குறிப்பாகத் தாயுமானவர் கூறியது "அருளறிவொன்றே அறிவு" எனும் பாடலாக அருட்பாவில் மலர்ந்தது. "கொல்லாமை எத்தனை குணக்கேட்டை நீக்கும்" எனத் தாயுமானவர் பாட, "கொல்லா நெறியது கோடா நிலையது" என வள்ளலார் முடிக்கிறார்.

என்றாலும் வள்ளலார் தாயுமானவருடன் நின்றுவிடவில்லை. கொல்லாமை வேறு, புலால் மறுத்தல் வேறு எனப் பாராமல் இரண்டையும் ஒரு சேர வலியுறுத்தினார். "புலைநெறியும் கொலைநெறியும்" என்று சேர்த்தே அவர் பாடுகிறார். கொல்லாமை பேணல் உயிரிரக்கம் கொண்டோருக்கே முடியும். புலாலுண்போரிடம் உயிரிரக்கம் ஏற்படும் எனச் சொல்வதற்கில்லை. சன்மார்க்க சங்க அன்பர்களுக்கு இந்த இரண்டையும் அவர் அடிப்படை அறங்களாக விதித்ததும் இந்நோக்கில் தான்.

இந்த இரண்டு அறங்களும் இந்து சமயத்தில் ஆங்காங்கே சில நீதி நூல்களில் கூறப்பட்டிருப்பினும் பெரிதும் வலியுறுத்தியது சமண சமயமே. "அன்பே சிவம்" என்னும் திருமந்திரப் பாடலில் அன்பு அறிவாவதின் நுட்பம் தெரிகிறது. எனினும் பின்னால் வந்த சமயப் பெரியார்கள் இவற்றை நியதிகளாக்கத் தவறிவிட்டனர். 19ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சாந்தலிங்க அடிகள் "கொலை மறுத்தல்" என்ற ஒரு நூல் எழுதினார். ஆனால் அவர் பின்வந்தோர் அதைப் பரப்பத் தவறினர். வள்ளலாரோ சன்மார்க்க நெறிக்கு அதைக் கட்டாயமாக்கிச் செயல்வடிவம் கொடுத்தார்.

உயிரிரக்கம் - சீவகாருணியம் - சைவம் பின்னாளில் வலியுறத்திய கோட்பாடே. சைவ சித்தாந்த முடிவுகளில் ஒன்று - "எல்லா உயிர்களிலும் இறைவனைக் காணல் அவற்றுக்குத் தொண்டாற்றல்" எனக் கலைக் களஞ்சியம் கூறுகிறது. "கொலை புலை தவிர்த்தவன்" எச்சமயத்தவன் ஆயினும் அவன் சைவனே என்பார் திரு.வி.க. (சைவத்தின் சமரசம், ப : 52) "அன்பியலில் அருளே அறம் : அருளியலில் அருளே தவம்" என்று இந்த இரக்கம் படர்ந்து நிற்பதைத் திருமந்திரம் சாற்றும். இவற்றின் வழி நின்று உலகத்து உயிர்கள், பசியால் வாடல், பசி தீர்த்தல், கொல்லாமை, புலாலுண்ணாமை என அருளின் படிநிலைகளை வள்ளலார் உணர்ந்ததும் உணர்த்தியதும் சிறப்புக்குரியன.

ஒருமையுலகம் - போரற்ற உலகம் காண - உயிரிரக்கமே சிறந்தவழி எனத் தெ.பொ.மீ. எழுதுகிறார். (History of Tamil Literature, p:165) "வள்ளலாரின் மானிட நேயமும் இரக்கமும் மானிடப் பண்பாட்டின் உயர்ந்த சிந்தனையையும் உணர்வையும் வெளிப்படுத்துவன : மானிட குலத்தின் மனச்சான்றாக, மனித முழுமைக் காட்சியாக அவர் உயிரிரக்க நெறி இருக்கிறது" என அவரைப் பற்றி ஆய்வு செய்த ஏ.சிவசுப்பிரமணிய பிள்ளையும் கூறுவது அழகான மதிப்பீடு ஆகும். ஏனெனில் வள்ளலாரின் உயிர் இரக்கக் கோட்பாடு மானிடத்தின் குரல் : மானிடத்தின் வெற்றி : மானிடத்தின் மணிமுடி என்பதில் ஐயமில்லை.

# இலக்கியப் பணிகள்

## 1. அறிமுகம்

*"அம்மாநான் சொல்மாலை தொடுக்கின்றேன் நீதான்*
*ஆர்க்கணிய என்கின்றாய் அறியாயோ தோழி*
*இம்மாலை அம்பலத்தே எம்மானுக்கு அன்றி*
*யார்க்கணிவேன்" (5792)*

19ஆம் நூற்றாண்டுத் தமிழகம் அரசியல், பொருளியல், சமூகம் என்பவற்றுள் தேக்க நிலையும் சீரழிவும் கொண்டிருந்தது முன்னர்ச் சுட்டப்பட்டது. நாயக்கர், மொகலாயர், மராத்தியர், ஆங்கிலேயர் என்று பிறமொழியினர் தமிழகத்தை வரிசையாக ஆண்டு முடித்தனர். அந்தச் சூழலில் தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு வளர்ச்சி குன்றி இருந்தது இயற்கையே.

எனினும் ஆங்காங்கு புலவர்கள் தமிழ் கற்றும் கற்பித்தும் புராணங்கள் பாடியும், சிற்றிலக்கியங்கள் யாத்தும் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தனர். இவற்றில் புதுமையில்லை. ஒரே வகை யாப்பு : உணர்ச்சி : கருத்தோட்டம் என்பவற்றுள் மாறுபாடின்றி இருந்தன. மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை போன்ற பெரும்புலவர்கள் வாழ்ந்தும் புத்திலக்கியங்கள் படைக்கவில்லை. அளவிறந்த சொல் அடுக்குகள், கற்பனைகள், கூறியது கூறல் இவற்றின் தாக்கத்திலிருந்து புலவர்கள் விடுபடவில்லை. யமகம், திரிபு, அந்தாதி, சிலேடை, கலம்பகம் இத்தகைய வடிவங்களே திரும்பத் திரும்பப் பாடப்பட்டன.

தவிர, பெரும்பாலான நூல்கள் ஏதோ ஒரு சமயம் சார்ந்து அல்லது கொள்கை சார்ந்தே இருந்தன. தம் கருத்தை வலியுறுத்தல் (சுபக்கம்), பிறர்கருத்தை மறுத்தல் (பரபக்கம்) என்ற அமைப்பில் அவை பாடப்பட்டன. "அத்வைத சண்டமாருதங்கள், தர்க்க

குடாரங்கள், ஆபாச நிரசனங்கள்" என வையாபுரிபிள்ளை அவற்றைக் குறிப்பிடுவார். (தமிழின் மறுமலர்ச்சி, ப : 124) மக்களின் சிந்தனையைத் தூண்டுவதாக இவை இல்லாமல் அறிவை மழுங்க வைப்பதாகவே இருந்தன. வள்ளலார் தொடர்பான அருட்பா மருட்பா போரும் இங்கு எண்ணற்குரியது. அது பற்றி எத்தனை சிறு நூல்கள், துண்டு வெளியீடுகள் - எதிர்த்தும் போற்றியும்! "சமய மத ஆசாரம் எனச் சண்டையிட்ட கலக வழக்கு" என்றும் "பலவாம் பொய்ந்நூல்" என்றும் வள்ளற் பெருமானே மனம் நொந்து பாடினார் (5387). குடும்பகோரம் என்ற பகுதியில் சற்று நகைச் சுவையாகவும், கேலியாகவும் அத்தகைய புலவர்களைப் பற்றி அவர் பாடியிருக்கிறார்.

இது ஒருபுறம். வேறுசில புலவர்கள் தங்களை ஆதரித்த வள்ளல்கள், சிற்றரசர்கள் மீது சிற்றிலக்கியங்கள் பாடினர். இவை பெரும்பாலும் இழிசுவையை உடையன. நன்றி யுணர்வுக்காகப் பாடினராயினும், தம்மையும் தமிழையும் அதன் மூலம் அவர்கள் தாழ்த்தினர் என்பது மெய்.

இன்னொரு பக்கத்தில் ஆங்கிலம் கற்ற தமிழர் சிலர் முழுவதுமாகத் தமிழைப் புறக்கணித்தனர். "மெல்லத் தமிழ் இனிச்சாகும்" என்ற சொன்ன பேதைகள் அவர்கள் தாம். தமிழைக் கற்பதும் தமிழைக் கற்பிப்பதும் எள்ளி நகையாடற்குரியவையாக இருந்தன. உ.வே.சா. அவர்கள் கூடத் தம் தந்தையின் விருப்பத்தை மீறியே தமிழ் கற்றார் என்பது இங்கு குறிக்கத்தகும். சமஸ்கிருதம், ஆங்கிலம் இரண்டும் ஏற்றம் பெறத் தமிழ் புறக்கணிக்கப்பட்ட வேளை.

தமிழில் உரைநடை இலக்கியம் ஆங்கிலேயத் தாக்கத்தினால் ஒரு புதிய வீச்சைக் கண்டு கொண்டிருந்தது. மேனாட்டுப் பாதிரியார்கள் பேச்சுத் தமிழில், எளிய தமிழில் விண்ணப்பங்கள், துண்டு அறிக்கைகள் வெளியிட்டுச் சமயப்பணி புரிந்தனர். அவற்றின் வெற்றியைக் கண்ட இந்து சமயப் புலவரும் அறிஞரும் அத்தகைய முயற்சிகளில் ஈடுபட்டனர். ஆறுமுகநாவலரின் நூல்கள் அவ்வகையில் முன்னோடியாவன.

இந்தச் சிறிய அறிமுகத்திலிருந்து சில செய்திகள் புலனாகும். அன்றைய தமிழிலக்கியம் பாமர மக்களை மையமாகக் கொண்டிருக்கவில்லை. எளியோர்க்கு அவர்களின் உரிமைகளைக் காட்ட, நினைவூட்ட, பெற அல்லது காக்க அது

முயலவில்லை. பழம்பெருமையைச் சமுதாய ஆற்றலாக மாற்றுதலும் புதிய இலக்கை நோக்கி மக்களைச் செலுத்துதலும் அதன் நோக்கமாக இல்லை.

இத்தகைய சூழலிலும் தமிழிலக்கியத்தின் உயிர்த்துடிப்பு அழியாமல் இருந்தது. இலக்கியப்புலமை உடையாரால் அது நடக்கவில்லை : மாறாக எளியோர்களின் முயற்சியே காரணமாயிற்று. வாழ்வின் இன்ப துன்பங்களையும் வெற்றி தோல்விகளையும் நாட்டுப் பாடல்களாக, கதைகளாக அவர்கள் உருவாக்கி வளர்த்தனர். இலக்கியப் பண்புகள் அவற்றில் அதிகம் இல்லை : ஆனால் உயிர் - உள்ளத்துணர்வு - இருந்தது. பக்தி, பழைய நம்பிக்கை இரண்டும் இருந்தன. (அ. சீனிவாச ராகவன், ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை, ப : 6)

இந்தப் பின்புலத்தில் வள்ளற்பெருமானின் இலக்கியப் பணியைக் காணல் வேண்டும். அவர் வாழ்ந்த காலச்சூழல், சமூக அமைப்பு இவையே மையப் பொருள்களாகப் புலப்படுவதை இனிவரும் பகுதிகள் காட்டும். உரைநடையும் எழுதினார் : பாடலும் புனைந்தார். ஆனால் அருட்பாவை அறிந்த தமிழகம் அவருடைய உரைநடைப் படைப்பை முழுதும் அறியவில்லை என்பது ஒரு குறையே.

## உ. வள்ளலார் எழுதிய உரைநடை நூல்கள்

வள்ளலாரின் இலக்கியப் பணி பரவலானது. அருட்பாவுக்கு ஈடான சிறப்பை அவருடைய உரைநடை நூல்களும் பெற்றுள்ளன. அவை சிறிது சிறிதாக வெளிவந்தன : தொடக்க காலப் பதிப்புகள் கிடைக்கவில்லை. ஆதலால் மக்கள் முழுமையாக அவற்றை அறிய முடியாமல் போயிற்று. வள்ளலார் என்ற அருளாளரின் ஆன்ம வளர்ச்சியை ஆழமாகக் காணவேண்டுவோர் அருட்பாவையன்றி அவருடைய உரைநடைச் செறிவையும் காண வேண்டும்.

எட்டுத் தலைப்புக்களில் அவற்றைப் பற்றிய செய்திகள் இங்கு தரப்படுகின்றன. 1) மனுமுறை கண்ட வாசகம் 2) ஜீவகாருணிய ஒழுக்கம் 3) வியாக்கியானங்கள் 4) மருத்துவக்

**குறிப்புகள் 5) உபதேசங்கள் 6) திருமுகங்கள் 7) அழைப்புக்கள், அறிவிப்புக்கள், கட்டளைகள் 8) விண்ணப்பங்கள் என்பன அவை.**

**1. மனுமுறை கண்ட வாசகம் :**

மனுச்சோழர் அரசநீதி பற்றிக் கூறும் இந்நூல் பெரியபுராணத்தில் உள்ள மனுநீதி கண்ட புராணத்தை அடியொற்றியது. பெரியபுராணம் கூறுவதை "விரிவுள்ள வாசக நடையாக" அவர் எழுதியதாகத் தொடக்கப் பதிப்பு கூறுகிறது. 1854இல் முதன்முதலாக இந்நூல் அச்சாயிற்று. அப்போது வள்ளற்பெருமானுக்கு வயது 31.

மனுமுறை கண்ட வாசகம் ஆற்றொழுக்கு போல ஒரே சீரான வருணனை நடையில் அமைந்துள்ளது. பல இடங்களில் அவர் கையாளும் உவமைகள், வருணனைகள் படிப்பது பாட்டு தானோ என்ற ஐயத்தை எழுப்புகின்றன. அவருடைய இலக்கியப் பன்முக அறிவை இதனுள் காணலாம். உவமைகள், பழமொழிகள், காரண காரியத் தொடர்புகள், அறிவார்ந்த தருக்கங்கள் விரவி அமைந்து கதைக் கருவின் விளக்கத்துக்கு அரண் செய்கின்றன.

சோழநாடு, திருவாரூர், மனுநீதிச் சோழர் ஆட்சிச் சிறப்பு, மகப்பேற்று நோன்பு, மகப்பேறு, பிள்ளை வளர்ப்பு, இளவரசன், திருவீதியுலா, பெண்கள் காமக்கிளவி, இளங்கன்று தேரில் மாய்தல், இளவரசன் கழிவிரக்கம், தாய்ப்பசுவின் புலம்பல், ஆராய்ச்சி மணி அசைத்தல், அரசர் அமைச்சர் வாதம், அரசன் முறை செய்தல் என்னும் உட்பிரிவுகளாக அவர் கதையை வகுத்துக் கொண்டார். அந்தந்தப் பிரிவுக்கேற்பப் பேச்சு மொழியாகவும் இலக்கிய வருணனையாகவும் மொழியைத் திறம்படக் கையாண்டுள்ளார். மக்களுக்கு ஆர்வமூட்டக் கூடிய வகையில் ஓரங்க நாடகம் போல உரையாடல்கள் அமைந்துள்ளன. ஒருமுறை படிக்கும் போதும் கதை மாந்தரே நேரில் பேசுவது போன்ற உணர்வு எழுகிறது. வருணனைப் பகுதிகளை நீக்கிவிட்டுப் பார்த்தால் ஆசிரியரின் இடையீடின்றிக் கதை மாந்தர் ஒருவர்க்கொருவர் பேசிக்கொள்ளும் தொடர்ச்சி தெரிகிறது. இது புதிய உத்தி. அவர் வெற்றியும் பெறுகிறார். **தமிழ் உரைநடையில் அந்தக் காலத்தில் ஒரு புதிய வகையைக் காட்டிய முதல்வர் அவர்.**

அன்றைய நாடோடி இலக்கியம் இவ்வாறு இருந்தது. இரவு நேரங்களில் மக்கள் முன் கதைகளை இப்படி நாடகங்களாக்கிச் சொல்லியிருக்கின்றனர். அதற்கு இந்த வடிவம் மிகவும் ஏற்றது. தருக்கமுறையில் அரசனும் அமைச்சரும் மாறிமாறிப் பேசும்போது புலப்படுத்தும் நீதி மக்கள் நெஞ்சில் ஆழமாகப் பதியும் வண்ணம் இந்த வடிவம் பயன்பட்டிருக்கும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாசகப்பா என்னும் பெயரொடு ஒருவகை நாடகம் இருந்ததாகத் தெ.பொ.மீ. குறிக்கிறார். பாட்டைப் பொருளுணர்ந்து அறிய முடியாத எளிய மக்களுக்கு உரைநடை கலந்து கருத்தைக் கூறுவது அதன் நோக்கம். "வாசகம் என்பது உரைநடை : பா என்பது பாட்டு. ..... பாட்டும் வாசகமுமாக வருவது வாசகப்பா என்னும் நாடகம்." (நீங்களும் சுவையுங்கள், ப : 155-156) மனுமுறை கண்ட வாசகம் இந்த முறையில் "வாசகப்பா" நாடக வகை என்று சொல்வது முற்றிலும் பொருந்தும்.

நாடு, நகரம் பற்றிய வருணனைகள் "ஈவாரும் இரப்பாருமில்லாத" ஒரு புத்துலகைப் படைக்க விரும்பிய அவர் அருள் நெஞ்சத்தைக் காட்டும். தீமைகளற்ற உலகம் : புலியும் பசுவும் ஒரே துறையில் நீர் குடிக்கும் உலகம் : சிங்கமும் யானையும் சேர்ந்து உலாவும் உலகம் என அவர் கனவு விரிந்து போகிறது. வறட்சி, பஞ்சம், வறுமை, பிணி, சாக்காடு, அறியாமை ஆகியவை மண்டிக்கிடந்த அன்றைய சமுதாயத்தை நினைவில் கொண்டு, அவர் தாம் காணவிரும்பிய தமிழகத்தைக் குறிக்கிறாரோ என்று கருத வேண்டியுள்ளது. பசியும் பகையும் பிணியும் வறுமையும் இல்லாத நாடாகத் தமிழகம் மலர வேண்டும் என்ற துடிப்பு, "பசியும் பிணியும் பகையும் நீக்கி வசியும் வளனும் சுரக்க" என்ற மணிமேகலை வாழ்த்தின் எதிரொலியே தவிர வேறில்லை.

இந்த நூல் ஓர் அரசன் எப்படி இருக்க வேண்டும் என்று மனு நீதிச் சோழனை முன்னிறுத்திப் பல பண்புகளைக் குறிக்கிறது. அரசன் கலைகளில் வல்லவன் : கேள்வியறிவுடையவன் : உயிர்களிடத்து அன்பு பூண்டவன் : வேதம், யாகம் காப்பவன் : இரப்போர்க்கு மனமுவந்து ஈபவன் : படை முதலான ஆறங்கங்களையும் உடையவன் : குற்றத்திலிருந்து நீங்கியவன் : சிற்றினம் சேராதவன் : பெரியாரைச் சூழ்ந்து ஒழுகுபவன் : தன்வலி, துணைவலி, மாற்றான் வலி இவற்றைக் கணித்துக் காலமும் இடமும் கருதிச் செயல்படுபவன் என்று அவர்

பட்டியலிடுகிறார். இவையும் பிறவும் திருக்குறளில் அரசியலில் வருவன. நல்ல அரசனின் தன்மைகளைத் திருக்குறள் கூற, அவற்றைச் சோழ மன்னன் மீது ஏற்றி ஆட்சியாளர் இருக்க வேண்டிய நிலைக்குப் பருப்பொருள் வடிவம் கொடுக்கிறார் வள்ளலார். அவர் நாளில் நாட்டில் அமைதியில்லை. ஆங்கிலேயர்களின் முகவர்களாக இருந்த பாளையக்காரர்கள் செய்த கொடுமைகள் அவர் நெஞ்சை வருத்தியிருக்க வேண்டும். ஆதலால் இப்படி மன்னன் இருக்கக் கூடாதா என்ற அவருடைய ஏக்கம் இந்நூலில் வெளிப்பட்டது.

தம் குடிமக்கள் மீது உயிரிரக்கம் கொண்டதால் மன்னனே தாய் : துன்பங்களைந்து இன்பம் தருவதால் அவனே தந்தை : நல்வழி காட்டுவதால் ஆசிரியர் : மக்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கிப் பிழைசெய்வோரைத் தண்டிப்பதால் அவனே தெய்வம் : துன்பம் வரும்போது விரைந்து வந்து உதவுவதால் நண்பன் : குடிகளைக் காப்பதால் மன்னனே உயிர் என வரும் குறிப்புக்கள் அரசனின் பொறுப்புக்களைச் சுட்டுவதோடு தாய் தந்தை முதலானவரின் கடமைகள் இன்னவென்றும் காட்டுகின்றன. "மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்" என்று புறநானூறும் (186); "உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்" என்று கம்பராமாயணமும் (பால : அரசியல் படலம். 10) கூறுகின்ற கருத்துக்கள் இங்கு புதுவடிவம் பெறுகின்றன. "நண்பனாய் மந்திரியாய் நல்லாசிரியனாய்ப் பண்பிலே தெய்வமாய்ப் பார்வையிலே சேவகனாய்" வந்த கண்ணபெருமானைப் பாரதி பாடுவது இங்கு நினைவுக்கு வருகிறது.

சோழ மன்னன் இளவரசனை வளர்த்த முறை பற்றிக் கூறும் பகுதி எண்ணத்தக்கது. கற்புள்ள மனைவி கணவனை உபசரிப்பது போல உணவு, உடை ஆகியவற்றால் மன்னன் அவனை உபசரித்தான் ; படிப்பில் ஆசை கொண்டவன் பாடத்தைப் பாராட்டுவது போலப் பாராட்டினான் ; "நவில்தொறு நூல் நயம்" என்று குறள் கூறுகிறதே! தன்னைத் தானே உயர்த்த நினைப்பவன் தருமத்தை வளர்ப்பது போல வளர்த்தான் : முன் சிறுமையடைந்து பின் செல்வமடைந்தவன் அதைப் பாதுகாப்பது போலப் பாதுகாத்தான். இந்தக் கருத்துக்கள் ஒரு தந்தையின் பொறுப்புக்கள் என்னென்ன என்பதை வலியுறுத்துகின்றன. இலக்கிய நயமும் உயர்ந்த சிந்தனைகளும் அடங்கியதாக இந்தப் பகுதி உள்ளது.

நீதியறம் கூறும் பகுதிகள் படிப்போர் நெஞ்சை உருக்குவனவாக உள்ளன.

*"நல்லோர் மனத்தை நடுங்கச் செய்தேனோ?*
*வலிய வழக்கிட்டு மானம் கெடுத்தேனோ?*
*தானங் கொடுப்போரைத் தடுத்து நின்றேனோ?*
*கலந்த சினேகிதனைக் கலகம் செய்தேனோ?"*

என்று தொடங்கி,

*"தந்தைதாய் மொழியைத் தள்ளி நடந்தேனோ?*
*தெய்வமிகழ்ந்து செருக்கடைந்தேனோ!"*

என்பது முடிய 43 வரிகளில் நன்னெஞ்சம் உடைய ஒருவன் செய்யக் கூடாத செயல்களைத் தொகுத்துக் கூறியுள்ளார். கல்லும் நெல்லும் கலந்து விற்றேனோ? அன்புடையவர்க்குத் துன்பம் செய்தேனோ என்பது போல வரும் வினாக்கள் ஒவ்வொருவரும் துன்பப்படும்போது கூறித் தன்னாய்வு செய்யத்தக்கன. எல்லா உயிரையும் சமமாக எண்ணி நடக்க வேண்டும். தவறு செய்வோனின் பிறப்பு, குணம், சாதி, தொழில் பாராது தண்டிக்க வேண்டும் என்ற கருத்து "ஓர்ந்து கண்ணோடாது இறைபுரிந்து யார் மாட்டும்" முறை செய்ய வேண்டும் என்னும் குறளின் கட்டளையைத் திருப்பி எழுதியது போல உள்ளது.

மனுமுறை கண்ட வாசகம் உயிர்க்கொலையின் கொடுமையைக் கூறுகிறது. பசியினால் ஏற்படும் உடலியல் குறிகள் கொலையினால் ஏற்படுபவற்றை ஒத்தவை. கொலை தவிர்ப்பதை இந்நூலில் வலியுறுத்தி அடுத்த பகுதியாகிய - பசி நீக்கலை இங்கு அடிகோலுகிறார். அரசியல் அமைதியிழந்து கிடந்த தமிழகத்துக்கு மனுநீதிச் சோழனின் ஆட்சி முறையை நினைவூட்டுவதன் மூலமாக நல்லாட்சி ஏற்படாதா என்ற அவருடைய ஏக்கம் இதனுள் தெரிகிறது. "இம் மனுச் சோழருடைய செங்கோல் மாறாது நிலைபெற்றிருக்க வேண்டும்" என்று வீதிவிடங்கன் பேசுவது வள்ளலாரின் மன அதிர்வைக் காட்டும்.

இந்த உரைநடை நூலில் பாட்டின் சந்தத்துக்கும் குறைவில்லை. எதுகை மோனைகளும் விரவிவந்து படிப்போர் நெஞ்சத்தை ஈர்க்கின்றன.

*"பாவியாகிய விதிஎன் பாக்கியத்தை அழித்ததே*
*தீமையாகிய வினைப்பயன் என்செல்வத்தை அழித்ததே*
*வஞ்சமாகிய ஊழ்என் வாழ்வை அழித்ததே"*

என வரும் தொடர்கள் ஒன்றன்கீழ் ஒன்றாக எழுதப்பட்டால் பாடல் வரிகளாக அமைகின்றன. இந்த வடிவம் கதைப்பாட்டு போலப் பாடவும் படிக்கவும் துணை செய்யும்.

சுருக்கமாக, 19ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய உலகில் உரைநடையில் ஒரு திருப்புமுனையை மனுமுறை கண்ட வாசகம் தோற்றுவித்தது எனல் வேண்டும்.

2. சீவகாருணிய ஒழுக்கம் :

இந்த உரைநடை நூல் மூன்று பிரிவுகளை உடையதாகப் பதிக்கப்பட்டுள்ளது. மூன்றாவது பிரிவு முற்றுப்பெறவில்லை. மனுமுறை கண்ட வாசகம் வள்ளலார் கைப்பட எழுதியது : சீவகாருணிய ஒழுக்கம் அவர் உபதேசித்தது : அன்பர்களால் குறித்துவைக்கப்பட்டு அச்சிடப்பட்டது. இவற்றின் மெய்ம்மை ஐயத்துக்கிடமானது. முதலிரண்டு பிரிவுகளை ஏற்கலாம். ஆனால் மூன்றாம் பிரிவு மிகச் சிறிய பகுதி. முதற்பிரிவில் வருவதை அப்படியே, சில இடங்களில் சொற்கள் கூட மாறாமல் - கூறுகிறது. ஆதலால் இதை ஏற்பதற்கில்லை. முதலில் அச்சிடப்பட்ட பதிப்புகளில் இதனுடைய முதற்பிரிவு மட்டுமே உள்ளது. வள்ளற்பெருமானுடன் வாழ்ந்தவர்கள் அச்சிட்ட அவற்றுள் இல்லாதவை பின்வந்த பதிப்புக்களில் சேர்க்கப்பட்டுள்ளன.

இந்த நூல் வள்ளலாரின் உயிர்க்கொள்கைகளான பசி நீக்கல், கொலை தவிர்த்தல் ஆகியவற்றைப் பற்றியது. இந்த இரண்டும் ஒன்றுசேர்ந்த அறமே உயிரிரக்கம் - சீவகாருணியம். மனுமுறை கண்ட வாசகத்துக்கும் சீவகாருணிய ஒழுக்கத்துக்கும் அடிப்படையில் வேறுபாடுகள் உள்ளன. சென்னையில் அவர் வாழ்ந்தபோது, இளமைக்காலத்தில் வாசகத்தை எழுதினார் : வடலூரில் முதிர்ச்சி பெற்ற பின் சீவகாருணிய ஒழுக்கத்தை உபதேசித்தார். உவமை, உருவகம், வருணனை, ஓசைநயம் முதலியவற்றுடன் கம்பீரமாக அமைந்தது முன்னது. அவை பெரும்பாலுமின்றி எளியநடையில் பேச்சுமொழியாக மனத்தை உருக்குவது பின்னது.

சீவகாருணிய ஒழுக்கம் உணர்ச்சி மிக்க நடை உடையது. உயிரிரக்கத்துக்குத் தேவையானது பரிவே. வருணனையோ விளக்கமோ அல்ல. பசிக்கொடுமை, அதனால் ஓருயிருக்கு

ஏற்படும் துன்பங்கள், அதை நீக்க வேண்டிய தேவை இவற்றை உருக்கமாக உணர்த்துகிறது. மானிட நேயத்தை வலியுறுத்தும் இந்நூல், ஏற்றத் தாழ்வில்லாத சமுதாயம் காண அவர் விரும்பியமையைக் காட்டும். "இதன் நடை ஆழமானது : உணர்ச்சிவயமானது : எளிமையும் தெளிவும் கொண்டது : வள்ளலாரின் படைப்புக்களில் இதுவே தலையாயது : தன்னிகரற்றது" எனப் புகழாரம் சூட்டுகிறார் தமிழ்ப்பேரறிஞர் தெ.பொ.மீ. (A History of Tamil Literature, p : 175)

மணிமேகலையும் திருக்குறளும் பசியையும் பசியின் கொடுமையையும் விவரிக்கின்றன. ஆயினும் அவற்றை மிக விளக்கமாக அறிவியல், உடலியல், உளவியல் வகையாக எடுத்துக் கூறிய பெருமை இந்தச் சீவகாருணிய ஒழுக்க நூலுக்கு மட்டும் உண்டு.

**3. வியாக்கியானங்கள் :**

வள்ளலார் உரையாசிரியராக விளக்கவுரை எழுதிய நூல்கள் ஆறு ஆகும். அவை (1) ஒழிவிலொடுக்கப்பாயிர விருத்தி (2) தொண்ட மண்டல சதகம் (3) உலகெலாம் எனும் மெய்ம்மொழிப் பொருள் (4) தமிழ் என்னும் சொல்லுக்கு இட்ட உரை (5) பொன் வண்ணத் தந்தாதி (6) வேதாந்த தேசிகர் குறட்பா ஒன்றன் உரை என்பன.

ஒழிவிலொடுக்கப் பாயிர விருத்தி அவருடைய முதற்படைப்பு. 1851இல் அச்சாயிற்று. அப்போது அவர் சென்னையில் இருந்தார் : வயது 28. இந்த நூல் சற்றுக் கடுமையானது. புலமையோர் மட்டுமே படித்து புரிந்து கொள்ள முடியும். கல்லாடம், கந்தரந்தாதி, திருவாசகம், திருக்குறள், தொல்காப்பியம் முதலிய நூல்களிலிருந்து பல மேற்கோள்களைக் காட்டி நூலை எழுதியுள்ளார். அவருடைய பன்னூலறிவுக்கு இது சான்றாகும்.

தொண்ட மண்டல சதகம் அவர் பதிப்பித்த நூல். அதில் நூற்பெயர் இலக்கணம் என்ற தலைப்பில் தொண்ட மண்டலமா தொண்டை மண்டலமா எனப் பலவாறு ஆராய்ந்து ஒரு கட்டுரையை இணைத்துள்ளார். பல நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டப்பட்டுள்ளன. எதிர்க் கருத்து, அதை மறுத்தல் என்னும் வகையில் இரண்டு கூறுகளாகத் தருக்கமுறைப்படி வினாவிடையாகப் படிப்போருக்கு எளிதில்

புரியக் கூடிய அமைப்பில் உள்ளது. இந்தக் கட்டுரை கல்வெட்டுச் சான்றும் கொண்டது. வள்ளலார் கல்வெட்டாய்விலும் கவனம் செலுத்தினார் என்பது பலரும் அறியாத செய்தி.

உலகெலாம் எனும் மெய்ம்மொழிப் பொருள் விளக்கம் "உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன்" என்ற பெரிய புராண முதல் பாடலின் முதல் சொல்லுக்கு வள்ளலார் எழுதிய விரிவுரையாகும். "உலகம்" இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவை என ஒவ்வொன்றுக்கும் பெயர் கொடுத்து ஆராய்ந்திருக்கிறார். அவர் தரும் வகைகளும் விளக்கமும் அவருடைய புலமைத் திறத்தையும் தத்துவ ஞானத்தையும் காட்டும் : கற்பனைக் கூர்மையையும் சுட்டும். என்றாலும் எளிய மக்களுக்கு அது புரியும் படியாக இல்லை ; தவிர சமஸ்கிருதச் சொற்கள் நிறையக் கலந்து வந்து மருட்டுகின்றன.

எஞ்சிய மூன்றும் சிறிய பகுதிகள். "தமிழ் என்னும் சொல்லுக்கிட்ட உரை" தமிழின் சிறப்பைக் காட்டுவது ; சமஸ்கிருதச் சொற்கள் கலந்தது. அப்படி எழுதுவது அக்கால வழக்கம். தமிழ் என்னும் சொல்லை த்+அ+ம்+இ+ழ் என்னும் ஐந்து எழுத்துக்களாகப் பிரித்துக் கொண்டு அவர் கூறும் சிறப்பியல்புகள் : "ழ" சிறப்பு ழகரம் தமிழுக்கு மட்டுமே உள்ள தனித்தன்மை ஆகியவை அதனுள் உள்ளன.

வேதாந்த தேசிகர் குறட்பா ஒன்றுக்கு நான்கு வகையாகப் பொருள் கூறியுள்ளார். ஒரு பாட்டில் ஒரு சொல், அல்லது சொற்றொடரை எடுத்துக் கொண்டு பலவகையாகப் பொருள் கூறுவதும் தருக்கம் செய்வதும் அக்காலப் புலவர் தொழில். அப்படிச் செய்வதே புலமை எனக் கருதப்பட்டது. தொடக்கக் காலத்தில் வள்ளலாரும் அப்படி இருந்தார் என்பதற்கு இவை சான்றுகளாகும்.

இந்த வியாக்கியானங்கள் பிறர் வேண்ட வள்ளற்பெருமான் எழுதியவையாகும். "அவருடைய ஆன்ம அனுபவ நிலைகளை இவற்றுள் காணலாம்" எனப் பாலகிருஷ்ணபிள்ளை கூறுகிறார் (பதிப்பு III ப : 17). இதை முழுமையாக அப்படியே ஏற்றுக்கொள்வதற்கில்லை. சென்னையில் இருந்தபோது, பெரும்புலவர்கள் மகாவித்துவான்களுக்கிடையே தம் அறிவுத்திறம் வெளிப்படுமாறு அவர் இவற்றை

**எழுதியிருக்கலாம். ஆன்ம நிலையில் அவர் முழுமை பெற்றது வடலூரிலும் மேட்டுக்குப்பத்திலும், அவருடைய பிறநூல்களுக்கும் இந்த வியாக்கியானங்களுக்கும் வேறுபாடு உண்டு. இவை நூல் வழக்கு கொண்டவை : பழைய உரையாசிரியர் மரபில் எழுதப்பட்டவை. பொருட் செறிவுள்ளவை. நுணுக்கமானவை. உரையாசிரியர் மரபில் "வாழையடி வாழை"யாக வந்த பெருமை அவருக்கு இருந்தது என்பதே இசையும்.**

**4. மருத்துவக் குறிப்புகள்** அன்பர் குறித்து வைத்தவை. மூலிகை அட்டவணை, சஞ்சீவி மூலிகைகள், மருத்துவப் பயன்கள் என்னும் பிரிவுகளை உள்ளடக்கியவை. அவர் ஒரு சித்த மருத்துவராக இருந்து மக்களுக்குப் பல மருந்துகள் தந்து நோய் தீர்த்தவர். வரலாற்றில் இதற்குச் சான்றுகள் உள்ளன. இலக்கியவகையாக இதைப் பற்றிச் சொல்ல ஏதுமில்லை.

**5. உபதேசங்கள்** என்னும் தலைப்பின்கீழ் 1) நித்திய கருமவிதி 2) உபதேசக் குறிப்புக்கள் 3) சுப்பிரமணியம் 4) அருள்நெறி 5) திருவருண் மெய்ம்மொழி 6) பேருபதேசம் என்பன உள்ளன.

நித்திய கருமவிதி, உணவு, உடற்பயிற்சி, இறைவழிபாடு, உறக்கம், உடலுறவு என்பன பற்றி உலகியல் சார்ந்து கூறப்பட்ட கருத்துக்கள் கொண்டது. வேறொரு பதிப்பு "நித்திய ஒழுக்கம் என்னும் உலகியல்" என்றே இந்தப் பகுதிக்குத் தலைப்பிட்டுள்ளது. அவருடைய சமூகம் சார்ந்த சிந்தனைகளை இப்பகுதி காட்டும் : தம்மைச் சுற்றி வாழ்ந்தோர் மீது கொண்ட அவர் அக்கறையும் இதில் தென்படும்.

பல்பொருள் பற்றிய உபதேசக் குறிப்புகளும் அன்பர்கள் எழுதி வைத்தவையே. பெரும்பாலும் தத்துவக் கருத்துக்களை உள்ளடக்கியவை. சன்மார்க்கம் பற்றிய தெளிவு இதில் உண்டு. உலகியல் சார்ந்த அறிவுரைகளும் உள்ளன.

**சுப்பிரமணியம் என்பது முருகப்பெருமான் திருவுருவத்துக்குத் தத்துவநோக்கில் அவர் தந்த கருத்து விளக்கமாகும். முருகனின் தோற்றம், பெருமானை வழிபடும் முறை, பக்தி வகைகள், அருணகிரிநாதர், நக்கீரர், குமரகுருபரர் கருத்துக்கள் - ஆகியவற்றை இதனுள் காணலாம். கந்தகோட்டத்து முருகனும் திருத்தணிகைப் பெருமானும் வள்ளலாரின் வழிபடு தெய்வங்களல்லவா?**

அருள்நெறி உயிரிரக்கம் பற்றிக் கூறுகிறது. சித்தர்களுக்குப் பாவ புண்ணியமில்லை. அவர்கள் "அறிவே வடிவாய் அறிவே மனமாய் அறிவே அழகாய் அறிவே உணர்வாய்" விளங்குபவர்கள் என்பது அரிய குறிப்பாகும்.

திருவருண் மெய்ம்மொழி அன்பர் குறித்து வைத்தது. சித்தி வளாகத்தில் வள்ளலார் செய்த உபதேசங்களில் சிறந்தவையென இதையும் பேருபதேசத்தையும் ஊரன் அடிகள் கருதுகிறார் (வர : 530). பேருபதேசம் பற்றிய மதிப்பீடு சரியாகலாம். ஆனால் திருவருண்மெய்ம்மொழி தனி உபதேசமில்லை. ஊரன் அடிகளும் இதை ஏற்கிறார். குறித்து வைத்த அன்பரும், "மந்திரத் திருவருண் மொழிகளின் சுருக்கம்" என்றே எழுதியுள்ளார். சபை விளம்பரம், பேருபதேசம், சன்மார்க்கப் பெருநெறி ஒழுக்கம் ஆகிய பகுதிகளிலிருந்து சில கருத்துக்கள் இதில் உள்ளன.

பேருபதேசம் வள்ளற்பெருமான் மறைவுக்கு மூன்று திங்களுக்கு முன் ஆற்றியது. மகோபதேசம் எனவும் இதைக் கூறுகிறார்கள். அவருடைய பல முடிவான கொள்கைகளையும் கருத்துக்களையும் இதனுள் காணலாம் என ஊரன் அடிகள் எழுதுகிறார் (உரை : 24). இந்தப் பகுதியில் ஐயத்துக்கிடமான செய்திகள் சில உள்ளன. பதிப்பாசிரியர் பாலகிருஷ்ணபிள்ளை, "பேருபதேசம் போன்றவற்றுள் கூட மிகப்பெரும் தவறுகள் - குற்றங்குறைகள் நுழைந்து இடம் பெற்றிருத்தல் இயல்பு" என எச்சரிக்கிறார் (II:40). வள்ளலார் சொல்லக் கேட்டுப் பிறர் எழுதியதால், தவறுகள் இருக்கலாம் : வள்ளலார் கைப்பட எழுதிய நூல்களுக்கு ஒத்து வருபவற்றை மட்டும் கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்தியுள்ளார். இந்தக் கூற்று மெய்யே. ஏனெனில், வள்ளலார் தாம் இளமையில் போற்றிய சைவ சமயத்தையும் கடந்த நிலையை அடைந்தார் எனத் தம் நூலில் கூறும் சுப. அண்ணாமலை, சில பக்கங்கள் தள்ளி "சிவம் ஒன்றே கடவுள் : அதையே அன்பர்கள் வணங்க வேண்டும்" என வள்ளலார் பணித்ததாகக் கூறுகிறார். (Life and Teachings of St. Ramalingar, p : 126,133) இந்த முரண்பாட்டிற்குப் பேருபதேசத்தில் "சைவம் உள்ளிட்ட சமய மதங்களில் லட்சியம் வைக்க வேண்டாம்" என அவர் கூறியதாக உள்ளதே காரணம். ஆதலால் முடிந்த முடிபுகள் இதில் இருப்பதாக முழுவதும் கொள்வது பிழையாகலாம். ஏனெனில் இந்தச் சைவ எதிர்ப்பு பாடல்களிலோ பிற உரைநடைப் பகுதிகளிலோ இல்லை என்பதும் கருதற்குரியது.

**6. திருமுகங்கள் :**

வள்ளற்பெருமான் வடலூரிலிருந்து வெளியூர் நண்பர்களுக்கு, அதிகமாகச் சென்னையிலிருந்தவர்களுக்கு எழுதிய கடிதங்களே திருமுகங்கள். இவை மொத்தம் 48. இவற்றுள் 38 இறுக்கம் இரத்தின முதலியாருக்கு மட்டும் எழுதப்பட்டவை. இந்தக் கடிதங்கள் தனிமனிதர்கள் மீது வள்ளலார் கொண்டிருந்த அக்கறையைக் காட்டும். அவருடைய நெஞ்சின் உண்மை வடிவத்தையும் உணர்த்தும். எளிய நடையில் சொல்லலங்காரமில்லாமல் நேரடியாகச் செய்திகளைச் சொல்லும் வண்ணம் இவை அமைந்துள்ளன. தம் நண்பர்களின் உடல் நலனில் அவர் கொண்ட கவலை, அவருடைய குடும்பங்கள் நன்றாக வாழ அவர் காட்டிய வழிகள், தம்மிடம் உதவி வேண்டி வந்தவர்க்கு அவர் செய்தவை, தனித்த நிலையில் அவர் தந்த அறிவுரைகள் என்று பல செய்திகளை இந்தக் கடிதங்களில் காணலாம். இரண்டு மட்டும் நல்ல இலக்கணத் தமிழில் உள்ளன.

கவிதை, காவியம் என்ற இலக்கியப் பிரிவுகளில் படைப்பாளனின் நேரடித் தொடர்பு சிலவேளை இல்லாமல் போகக்கூடும். எடுத்துக்கொண்ட பாடுபொருளுக்காக அவற்றின் அமைப்பு மாறவும் செய்யலாம். கற்பனைகளும் உவமைகளும் அங்கு கவியாற்றலைக் காட்ட இடம் பெறவும் செய்யும். ஆனால் "கடிதங்கள் வாழ்க்கைத் தொடர்புடையவை : அகவயமானவை : கற்பனை கலவாதவை" என்ற அழகரடிகள் கூற்று முற்றிலும் பொருந்தும். (ஆ.பா.பதிப்பு V : 39) வள்ளலாரின் தனிவாழ்வு, தன்வாழ்வுக் குறிப்புகளும் இவற்றுள் அடங்கும். தவிர, அவர்காலச் சமுதாயச் சூழலைக் காட்டும் கண்ணாடியாகவும் இவை அமைந்துள்ளன.

வறட்சி, பஞ்சம், பிணி, கடன், வட்டி, இல்லறத் துன்பங்கள், களவு, கல்விநிலை எனப் பல செய்திகளைப் பற்றி அவர் எழுதியுள்ளார். திரு அருட்பா பதிப்பு முயற்சிகள், தருமச்சாலை, சபை நிறுவ மேற்கொண்ட அருவினைகள் ஆகியனவும் தெரியவருகின்றன. இவற்றுள் உள்ள வள்ளலார் அருளாளர் அல்லர் : அற்புதமான ஒரு தனி மனிதர் : நல்ல நண்பர் : சமூக விஞ்ஞானி. கடித இலக்கியம் என்ற புதுப்பிரிவில் இவற்றைச் சேர்க்க வேண்டும். தமிழிலக்கிய வரலாற்றில் இதுவே முதலிடம் பெறுகிறது.

வள்ளலார் பிறருக்கு எழுதிய கடிதங்களே கிடைத்துள்ளன. அவையும் முழுதும் கிடைத்தன என்று சொல்வதற்கில்லை. பல கிடைக்காமல் போயிருக்கலாம். கிடைத்தவற்றுள் சிலவும் சிதைக்கப்பட்டுள்ளன. அரிய பிற செய்திகளைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு இதன் மூலம் பறிபோய்விட்டது. கிடைத்தவற்றுள் சில பகுதிகளைப் பதிப்பாசிரியர் வேண்டாமென்று விலக்கிவிட்டார் என்று அ.லெ. நடராசன் குறைப்படுகிறார். (வள்ளலார் வாழ்வும் வாக்கும், ப : 138) இதை மறுக்கச் சான்றில்லை. இது உண்மையானால் அவர் இப்படிச் சிதைத்தது பெருங்குற்றம். பல நல்ல பணிகளைப் பதிப்பாசிரியர் செய்தும் மொத்தம் ஐந்து கடிதங்களை இப்படி அழித்துள்ளார். வள்ளலார் தொடர்பான உண்மைகள் வெளிப்படுவதை அவர் தடுத்துவிட்டார். அதனால் அந்தப் பதிப்பாசிரியர் பெற்றது ஏதுமில்லை : தமிழகம் இழந்தவை பலவாகலாம்.

**7. அழைப்புக்கள், அறிவிப்புக்கள், கட்டளைகள் :**

இம்மூன்று வகைகளிலும் மொத்தம் 18 கிடைத்துள்ளன. வடலூரிலும், மேட்டுக்குப்பத்திலும் வாழ்ந்தபோது, வள்ளலார் எழுதியவை இவை. மூலங்கள் இல்லை : அன்பர்கள் எழுதிவைத்த படிகளே கிடைத்துள்ளன. அதனால் மூலத்துக்கும் இவற்றுக்கும் சில மாறுபாடுகளும் திரிபுகளும் இருக்கக்கூடும்.

இவற்றுள் வள்ளலார் தம் கைப்பட எழுதிப் பிறரால் படிஎடுக்கப்பட்டவை ஒன்பது. இவற்றுள்ளும் "சன்மார்க்கப் பெரும்பதி வருகையைப் பற்றிய அறிவிப்பு" அவர் வேறு ஒருவருக்கு எழுதிய கடிதம். அது திருமுகங்களில் சேர்க்கப்பட்டிருக்க வேண்டும். பிற, அன்பர்கள் குறிப்புகளிலிருந்து பதிப்பிக்கப்பட்டவை. அவற்றுள் காணப்படும் கருத்துக்கள் முற்றிலும் அவருடையவை எனச் சொல்வதற்கில்லை.

இந்தப் பகுதிகளில் அவருடைய நிர்வாக ஆற்றல் புலப்படுகிறது. சன்மார்க்க நிலையங்களை நிறுவ அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகள், அவற்றைத் திறமையுடன் நடத்தியமை, இடையே வந்த சிக்கல்களுக்கு அவர்கண்ட தீர்வுகள், சாலையையும் சபையையும் அவர் சார்பில், பிறர் நடத்தியது, ஒருவர்க்கொருவர் பழகவேண்டிய முறை, அற்புதங்களை அவர்

மறுத்தமை என்று பல அரிய குறிப்புகள் இவற்றுள் புலப்படுகின்றன.

"சமாதிக் கட்டளை" சில புரட்சிகரமான கருத்துக்களைக் கொண்டது. இறந்தவர்க்காக அழவேண்டாம் ; மனைவி தாலி வாங்குதல் வேண்டாம் ; மனைவி இறந்தால் கணவன் வேறு திருமணம் செய்ய வேண்டாம் ; இறந்தார்க்குச் செய்யும் கருமாதி முதலிய சடங்குகள் தேவையில்லை என்பவை சில. 150 ஆண்டுகளுக்கு முன்னர் சடங்குகளும் போலி நம்பிக்கைகளும் வேரூன்றியிருந்த காலத்தில் அவர் துணிவாக இப்படி எழுதினார்: பேசினார் : பணியாற்றினார். இதுபோன்ற சிறுசிறு அழைப்பிதழ்களையும் கட்டளைகளையும் ஆயிரக்கணக்கில் அச்சிட்டு வழங்கியிருக்கிறார்கள். எளிய நடை, பேச்சுமொழி, சிறுசிறு சொற்றொடர்கள் என்ற அமைப்பில் இவை மக்களை ஈர்த்திருக்கின்றன.

8. விண்ணப்பங்கள் :

நான்கு விண்ணப்பங்கள் : சுத்தசன்மார்க்க சத்தியச் சிறு விண்ணப்பம் சத்தியப் பெருவிண்ணப்பம் அவர் எழுதியவை. ஞானவிண்ணப்பம், சத்திய விண்ணப்பம் அன்பர்கள் எழுதிவைத்தவை. இவை இறைவனை நோக்கிச் செய்யப்பட்ட முறையீடுகள். பேருபதேசத்தில் உள்ளன போன்று அவருடைய சில கொள்கைகளை இவற்றுள்ளும் காணலாம். சன்மார்க்க சிறு விண்ணப்பம் முற்பிறவி வரலாறு, மனிதப்பிறப்பின் அருமை, சமய, மதந் தாண்டிய சன்மார்க்க நெறி - ஆகியவற்றைப் பற்றிக் கூறுகிறது. பெருவிண்ணப்பம் வள்ளலாரின் வாழ்க்கைக் குறிப்புகளை உள்ளடக்கியது. "அவருடைய சன்மார்க்க வாழ்க்கை வரலாற்றை அறியவிரும்பும் எவருக்கும் இது ஒரு குன்றாத தெய்வ நிதியமாகும்" என்று பதிப்பாசிரியர் பாலகிருஷ்ணபிள்ளை கூறுவது இசைவானது (II:26). உயிரிரக்கம், தெய்வபக்தி முதலான பண்புகளை இளமைதொட்டே அவர் பெற்றிருந்தமை : பிறர்துணையில்லாமல் தாமாக முயன்று கல்வி பெற்றது : தமிழ்மொழிமீது பற்றுக் கொண்டமை : சாதிசமய வேறுபாடு தாண்டிய நிலையில் இருந்தமை என்பன இவற்றில் காணப்படும் செய்திகள். ஞானவிண்ணப்பம் ஞானிகளின் சித்தி வல்லபத்தையும், இறைவனின் பெருமையையும் கூறுகிறது. சத்திய விண்ணப்பம் இந்த மானிடப் பிறவித் தேகமே நித்தியமான

அருள்தேகம் என்று குறித்துக் கடவுள் அருளைப் பெறும் வழிபற்றிக் கூறுகிறது.

இந்த விண்ணப்பங்கள் தனியான நடையழகும் சொல்லாட்சியும் கொண்டன. சில இடங்கள் இசைபடக் கவிதையாகவே உள்ளன. எனினும் முன்சொன்ன அழைப்புக்கள், அறிவிப்புக்கள் போல எளிமையாயில்லை. சில இடங்களில் நீண்ட தொடர்களும் கலப்பு வாக்கியங்களுமாக அமைந்து சிக்கலாக்கி விடுகின்றன. ஓரளவு கற்றோரே இவற்றைப் படித்துத் துய்க்க முடியும்.

மேற்சொன்ன இந்தத் துண்டு வெளியீடுகள் தமிழ் இலக்கிய உலகிற்குப் புதிய வரவுகள் ஆகும். முதன் முதலில் கிறித்தவப் பாதிரிமார்கள் இவை போன்றவற்றை அச்சிட்டுச் சிற்றூர்களுக்குச் சென்று மக்களுக்கு விலையின்றித் தந்து சமயப் பரப்பலைச் செய்தனர். அவற்றைக் கண்ணுற்ற இந்துக்களும் தங்கள் பங்காக இவை போல எழுதி மக்களைக் கவர்ந்தனர். தத்தம் சமயங்களில் நிலைநிறுத்தினர் என்பதை நினைவில் கொண்டால், வள்ளலார் வடலூரில் தனிமனிதனாக ஆற்றிய பணியின் அளவு புரியவரும். அரசின் ஆதரவோடு, ஆங்கிலம் கற்ற வெள்ளையர்களின் பணிக்குச் சமமாக வள்ளலாரும் எளிய நண்பர்கள், சன்மார்க்கச் சங்கத்து அன்பர்கள் துணையுடன் மக்களைத் தம்மிடம் இழுத்துள்ளார் என்பது மிகப்பெரிய செயல் என்றே வணங்க வேண்டும்.

## 3. வள்ளலார் உரைநடைப் படைப்புக்கள் : ஒரு கண்ணோட்டம்

தமிழில் உரைநடை இலக்கியம் உரையாசிரியர்கள் காலம் தொட்டு இருந்து வருவதே : எனினும் சிறுகதை, நாவல், கட்டுரைகள் என்பன போன்றோ, மருத்துவம், வரலாறு எனப் பாடங்கள் சார்ந்தோ தனித்த நிலையில் உரைநடை எழுதும் பழக்கம் ஆங்கிலேயர் வந்தபிறகே நடைமுறையாயிற்று. தமிழ் கற்ற புலவர்கள் பாடல்கள், சிற்றிலக்கியங்கள் இயற்றுவதிலேயே காலத்தைக் கழித்தனர். உரைநடையில் எழுத அவர்கள் முன்வரவில்லை. "வசனம் எழுதுவதைக் காட்டிலும் செய்யுள்

இயற்றுவதிலே தான் இவருக்கு விருப்பம் அதிகம்" என்று உ.வே.சா. தம் ஆசிரியர் பற்றி எழுதுவதும் இங்கு எண்ணுதற்குரியது. (மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை சரித்திரம் II : 108)

ஆங்கில வழியில் புதிய கல்வி பெறும் வாய்ப்பு பெற்றவர்கள் தமிழில் உரைநடை வடிவம் வேண்டும். என எண்ணத் தலைப்பட்டனர். குழந்தைகளுக்கும் பாமரர்க்கும் புரியும் வண்ணம் எழுத வேண்டும் : அப்படிச் செய்வதன் மூலமே வளர்ந்து வரும் அறிவுலகத்தை மக்களுக்குக் காட்ட முடியும் என்றும் அவர்கள் எண்ணினர். அவர்களால் அப்படி எழுத முடியாமல் போயிற்று. ஆனால் வள்ளலார், ஆறுமுக நாவலர் போன்றவர்கள் அந்தத் துறையில் முத்திரை பதித்து அதைத் தொடக்கி வைத்தார்கள்.

தமிழ் உரைநடை இலக்கியத்தில் தந்தை எனத் தெ.பொ.மீ. வீரமாமுனிவரைக் குறிப்பிடுகிறார். (History of Tamil Literature, p : 175) அவருடைய பரமார்த்த குரு கதை, 300 ஆண்டுகளுக்கு முன்னர் எழுதப்பட்டதாயினும் இன்றும் படித்து மகிழத்தக்க உரைநடை நூல் என்பதில் ஐயமில்லை. அவருக்குப் பின் வள்ளலாரே அந்த வரிசையில் முதலிடம் பெறுகிறார். "வள்ளலார் உரைநடை உணர்ச்சியும் வலிமையும் பொருந்தியது : தெளிவும் எளிமையும் கொண்டது" எனத் தெ.பொ.மீயும் (History of Tamil Literature, p : 176) "பழகுதமிழில் உரைநடை இல்லை என்ற குறை வள்ளலாரால் தீர்ந்தது" எனச் சுப. அண்ணாமலையும் கணித்திருப்பது முற்றிலும் பொருந்தும். (Life and Teachings of St. Ramalingar, p : 74)

எஸ். வையாபுரிப்பிள்ளை மாணவருக்கு வழிகாட்டும் நோக்கில் - தமிழுணர்வையூட்டும் கருத்தில் - ஒன்றைக் கூறுகிறார்:

"வள்ளுவர், இளங்கோ அடிகள், கம்பன், இராமலிங்க சாமி, பாரதி, தேசிகவிநாயகம்பிள்ளை என்ற அறுவருடைய நூல்களையும் நமது மாணவர் தினசரி படிக்க வேண்டும் (தமிழின் மறுமலர்ச்சி, ப : 22). தமிழ் மறுமலர்ச்சி பெற, ஓர் உயிருடைய மொழியாக நின்று நிலவ, வையாபுரிப்பிள்ளை கூறும் இந்த நெறிமுறை ஆழமாக நோக்கற்குரியது. வள்ளுவர், இளங்கோவடிகள், கம்பர் என்ற மாகவிஞர்கள் தமிழிலக்கிய உலகில் பெறுமிடத்தை வள்ளலாரும் பெறுவது நல்ல மதிப்பீடு.

எளியநடை, மாணவரைப் பண்படுத்தும் செம்மை இரண்டும் வள்ளலாரின் உரைநடையில் உள்ளன என்பது உண்மையே : உயர்வு நவிற்சி அன்று.

வையாபுரிப்பிள்ளை, அதே நூலில் ஒரு மொழி வளர்கிறது என்றால் அதற்கு இரண்டு பண்புகள் அடிப்படை : நிலைபேறு, உயிராற்றல் என்பன அவை எனச்சொல்லி, நிலைபேறு என்பது தொன்றுதொட்டு வரும் மரபுகளைக் காலத்துக்கேற்றவாறு பின்பற்றுவது எனக் கூறுகிறார். கூடவே உயிராற்றலுக்கு வேண்டியன என ஏழு பண்புகளைப் பட்டியலிடுகிறார். ***1) பிறமொழிச் சொற்களைக் கடன்வாங்கல் 2) வழக்கு சொற்றொடர்களைப் பயன்படுத்தல் 3) எளிய சொற்களைக் கையாளல் 4) கருத்து வெளிப்பாட்டுக்கேற்ற சொல்லாட்சி 5) புதுநெறிகளைப் பயன்படுத்தல் 6) கருத்துக்களும் சொற்களும் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து வெளிப்படல் 7) அழகுணர்ச்சி, சொல்லழகு, ஓசையழகு, இன்பச்சுவை ஆகியன பொருந்தியிருத்தல் என்பவை அந்த ஏழாகும் (ப : 103-110).***

இவற்றை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதில்லை. ஆனாலும் ஏதோ ஒரு இலக்கணம் வகுத்தால் தான் வடிவம் கிடைக்கும். அந்த நோக்கில் இந்தப் பண்புகள் ஏற்புடையவையே. வள்ளலாரின் உரைநடைப் பகுதிகளில் இவற்றைத் தெளிவாகக் காணலாம். லாங்கிளாத்து, பீசு, ஜில்லா, ரிஜிஸ்தர் நோட்டு, தபால் ரயிட்டர், ஓட்டல், லீவ் போன்ற சொற்களைக் கடிதங்களில் பயன்படுத்தியுள்ளார். சீவகாருணிய ஒழுக்கமும் மனுமுறை கண்ட வாசகமும் எளிய நடையில் அமைந்தவை : வழக்குச் சொற்களும் தொடர்களும் கொண்டவை. அவருடைய எல்லா உரைநடை நூல்களிலும் அவர் எடுத்துக் கொண்ட கருத்தைத் தெளிவாகவே விளக்கியுள்ளார். புதுநெறிகளைப் பயன்படுத்தல் விண்ணப்பம், அழைப்பு முதலியவற்றில் உள்ளது. சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்ற பண்புகளும் இவற்றுள் உண்டு. சொற்களும் கருத்துக்களும் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து வெளிவரவேண்டும் என்ற பண்பு பற்றி என்ன சொல்ல? உதட்டளவுச் சொல்லடுக்கா சீவகாருணியம்? பசுவின் கன்று இறந்ததற்காக மனுநீதிச் சோழன் உருகிக் கதறுவது வள்ளலாரின் குரலில் அல்லவா? பெற்ற தாயினும் பரிந்து அவர் அழுவது படிப்போர் நெஞ்சில் இன்றும் எதிரொலிக்கும். இந்த அடிப்படை

**நெறிகளை வைத்து நோக்கும்போது அவருடைய உரைநடை பழைய மரபைப் பேணிக் காப்பதோடு, புதிய உயிராற்றலையும் தமிழ்மொழிக்கு ஊட்டியது என்பதில் ஐயமில்லை.**

## 4. அருட்பாக்கள்

வள்ளலார் ஏழு வயது தொடங்கிச் சித்திவளாகத்தில் மறையும் வரை (1830-74) 44 ஆண்டுகள் பாடிய பாடல்களின் தொகுப்பு திருஅருட்பா எனப்படுகிறது. அவற்றை ஆறு திருமுறைகளாக வகுத்து, அருட்பா எனப் பெயரும் இட்டவர் வள்ளலாரின் மாணாக்கர் தொழுவூர் வேலாயுத முதலியார் ஆவார். முதற் பதிப்பின் முகப்பு அட்டையில் "திருவருட்பிரகாச வள்ளலார் என்னும் சிதம்பரம் இராமலிங்கபிள்ளை" என்று அவர் முதலில் வள்ளலார் என்று குறிக்கப்பட்டார். அந்தப் பெயர் பின்னால் என்றும் நிலைக்கும் பேறு பெற்றது.

தெய்வத் தன்மையுடைய அருளால் பாடப்பட்ட பாக்கள் என அருட்பாவுக்கு ஊரன் அடிகள் பொருள் கூறுகிறார் (திருஅருட்பா ; ப : 41).

> "*தெருளாதேன் சிந்தைதனை தெளிவித்துச் சிவம் ஆக்கும்*
>
> *அருளாலே உரைத்ததென அருட்பாவின் உரைகொண்டாம்*"

என்று தொழுவூரார் பாடுகிறார். (திருஅருட்பா வரலாறு : 36) "அளவிலாத அன்பைச் சொரிந்து அருளை விளைத்து உயிரை வாழ்விப்பதால் அருட்பாவாயிற்று. தெளிவில்லாச் சிந்தையைத் தெளிவித்துச் சிவமாக்கும் அருளால் உரைத்தது" என்று இதற்குப் பொருள் கூறலாம். இவை சரியே. அதை விடப் பிற உயிர்கள் மீது கொண்ட அருளால் பாடிய பாடல்கள் என்பது இன்னும் பொருந்தும். மனிதனைப் பிற உயிர்களோடும் இறைவனோடும் தொடர்புபடுத்தி "அருள்" என்னும் ஒளிநெறியைப் பெற வைப்பதால் இது திருவருட்பா ஆயிற்று என்னும் சுப. அண்ணாமலையின் கருத்து இதற்கு ஏற்புடையதாகும் (ப : 12). "தம்மை உணர்ந்தோர் பாட்டு அருட்பாட்டு" என வள்ளலாரே பாடியுள்ளார். தம்மையுணர்தலும் பிற உயிர்களைப்

பேதமில்லாமல் தாமாக உணர்தலும் சன்மார்க்க நெறியின் அடிப்படையாதலால் அருட்பா, இப்படி ஆழமான பொருளுடையதாகிறது.

அருட்பா ஆறு திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளது. திருமுறை என்பதற்கும் பல பொருள்கள் உண்டு. தெய்வத்தை நோக்கிச் செலுத்துவது என்பது ஒன்று. அதைவிட, தெய்வத்தன்மையைவிட, மக்களுக்குப் பயன்படும் தன்மை பெரிது. "உலக மக்களுக்கு எக்காலத்தும் உயர்ந்த நிலைகளை வழங்குதற்குரிய அருள் நூல்கள் திருமுறைகள்" எனக் க. வெள்ளைவாரணர் கூறுவது கருதத்தக்கது. (பன்னிருதிருமுறை வரலாறு, ப : 1) அருளாசிரியரால் பாடப்பட்டு, மக்கள் அறிய வேண்டிய பொருள்களை அறிவுறுத்தி, அவர்கள் மனத்தைச் செம்மையாக்கித் தீமையை விலக்கி, நன்றின்பால் செலுத்துவது நூல் : அதுவே முறை : அதுவே திருமுறை. மாண்புடைய சொற்களால் முறைப்பட இயற்றப்பட்டது. (பன்னிரு திருமுறை வரலாறு, ப : 4). அருட்பாவின் ஆறு திருமுறைகளுமே இந்த வரையறைக்குப் பொருந்தி அமைந்துள்ளதைப் படிப்போர் உணர்வர். சுருங்கிய அளவில் அறிமுகமாக இங்கு அவை தரப்படுகின்றன.

**முதல் திருமுறை :**

"ஒருமையுடன் நினது திருமலரடி" என்ற தொடங்கும் பாடல் உள்ளிட்ட தெய்வமணிமாலை முதல் பதிகமாகும். கந்தகோட்டத்து முருகனைப் பரவும் இந்தப் பதிகமும் கந்தர் சரணப் பத்தும் அருட்பாவின் தலைவாயிலாக நிற்கின்றன. சிறுவயதிலேயே ஆன்மிக நாட்டமும் தெய்வப் பற்றும் கொண்டு உயர்ந்தனவே வேண்டும் என வள்ளலார் ஏங்கிய உள்ளத்துணர்வை இவை காட்டுகின்றன. பின்னாளில் சித்தி வளாகத்தில் பெற்ற பெருங்கருணைத் தனியாட்சியின் கடைகாலை இங்கே காணலாம். பசி தீர்த்தலை இறைவழிபாடாகவே கருதிய அவர்

*"பார்கொண்ட நடையில் வன்பசி கொண்டு*
*வந்திரப்பார் முகம் பார்த்திரங்கும் பண்பு"* (12)

வேண்டும் என இறையருள் வேட்டதைக் காட்டும். புழு அரிக்காத நெருப்பு ; மான் தாவமுடியாத வானம் ; எலி சீறமுடியாத புலி ; ஈ தன் சிறகால் அசைக்க முடியாத மலை ; துரும்பால் துண்டுபடுத்த

முடியாத வச்சிரத்தூண் ; இருளால் சூழப்படாத கதிரோன் : மழை தோயாத காற்று என்றெல்லாம் உண்மை அடியாரை அவர் உயர்த்திப் போற்றுவது அவருடைய உள்ளமுதிர்ச்சியையும் எதிர் பார்ப்பையும் காட்டும் (13). ஒரு வகையில் அவருடைய ஆன்மிக வாழ்வின் தன்விபரக் குறிப்புக்களாகவும் இவை உள்ளன.

*"நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற*
*நிலனுண்டு பலனும் உண்டு*
*நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட*
*நெறியுண்டு நிலையும் உண்டு"*

எனத் தொடங்கும் பாடல், இறைவனருள் ஒருவர்க்குக் கிடைத்தால் என்னென்ன செல்வங்கள் உறுதியாக வாய்க்கும் என்று பட்டியலிடுகிறது (28).

*"ஒருமையுடன் நினது திருமலரடி நினைக்கின்ற*
*உத்தமர்தம் உறவு வேண்டும் (8)"*

என்னும் பாடல் தமிழகம் அறிந்த, புகழ் பெற்ற பாடல். தமக்கு வேண்டியது இன்னின்ன என்ற அவருடைய விருப்பங்கள் மானிடப் பிறப்பெடுத்த எல்லாருக்காகவும் அவர் வேண்டியன என்பது சாலும்.

*"அருளார் அமுதே சரணம் சரணம்*
*அழகா அமலா சரணம் சரணம்"*

என வரும் கந்தர் சரணப் பத்து :

*"தணிகை மலையைச் சாரேனோ*
*சாமி அழகைப் பாரேனோ"*

எனும் ஆற்றா விரகம் :

*"குறவர் குடிசை நுழைந்தாண்டி - அந்தக்*
*கோமாட்டி எச்சில் விழைந்தாண்டி"*

எனும் சண்முகர் கொம்மி :

*"வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே*
*வள்ளி மணாளரே வாரும்*
*உண்மை விநோதரே வாரும்"*

எனும் சண்முகர் வருகை ஆகிய பதிகங்கள் இசைப்பாடல்கள் வகை சார்ந்தன. பின்னால் அவை பற்றி விரிவாகப் பார்க்கலாம். ஏறக்குறைய 20 வயதுக்குள்ளாக அவர் இருந்தபோது எழுதப்பட்ட இந்தப் பாடல்கள் எளிமை, இனிமை, தெளிவு, இசை இவை கலந்து மக்கள் மனத்தை ஈர்த்தன. அவர் வாழ்ந்த நாளில், அவர் கண் முன்னால் மற்றவரால் இவை பாடப்பட்டன என்பது அவர் பெற்ற செல்வாக்கைக் காட்டும்.

**இரண்டாம் திருமுறை :**

திருவொற்றியூர் இறைவனைப் பாடிய பதிகங்களை மிகுதியாகக் கொண்ட இப்பகுதியில், உலகியல் கருத்துக்களையும் அவர் பாடியுள்ளார்.

"*புதுமையன் அல்லேன் தொன்றுதொட்டு உனது*
*பூங்கழற்கு அன்பு பூண்டவன்*"

என்று அடக்கமாகத் தாம் வழிவழிவந்த மரபைச் சுட்டும் அவர் பெருமை : மனமுருகி இரந்தும் திருவருள் புரியாத ஒற்றியூர் ஈசற்குத் தியாகேசர் என்ற பெயர் எவ்வாறு பொருந்தும் என்னும் வியப்பு :

"*வள்ளல் என்றுமை வந்தடைந் தேற்றால்*
*வாய்திறந் தொரு வார்த்தையும் சொல்லீர்*
*எள்ளரும் புகழ்த் தியாகர் என்றொருபேர்*
*ஏன் கொண்டீர்?*" (675)

இரந்துண்டு வாழ்வோர் கூடத் தம்மினும் மெலிந்தோர்க்கு ஈந்துண்பர் என்னும் உலகியல் : இரப்போருக்கு ஈயாத புல்லர் பற்றிய குறிப்பு : வெள்ளாடை, பணம், பார்க்க நல்லுடல் இல்லாதவரை உலகம் மதியாது என்ற உலக வழக்கு : சென்னையிலிருக்கவா சிதம்பரம் போகவா என அவருள் ஏற்பட்ட தடுமாற்றம் ஆகிய பல செய்திகள் இரண்டாம் திருமுறையிலுள்ளன.

"*பெற்றதாய் தனைமகன் மறந்தாலும்*
*பிள்ளையைப் பெறு தாய் மறந்தாலும்*" (820)

என்று துவங்கும் பாடல் - எந்நிலை வரினும் "நமச்சிவாயத்தை நான் மறவேனே" என்ற அவர் உறுதியைக் காட்டும். இதுவும் பரவலாக எல்லாரும் பாடும்பாடல். சுந்தரர்க்குக் காட்டியது போல,

"*ஓலை ஒன்று நீர் காட்டுதல் வேண்டாம்*
*உவந்து தொண்டனென்று உரைப்பிரேல்*" (1182)

எப்பணி இடினும் வெறுப்பிலாது செய்ய உறுதி பூண்ட அவருடைய அடிமைத் திறத்தையும் இங்கு காணலாம்.

"பழமொழிமேல் வைத்துப் பரிவு கூர்தல்" என்னும் பதிகம், பழகு தமிழில் மக்கள் வாய்மொழியாக இருந்த பழமொழிகளுக்கு இலக்கிய ஏற்றம் கொடுத்த அவருடைய புதுமை நாடலைக் காட்டும். (1233-42)

திருவொற்றியூர் அம்மன் மீது பாடப்பட்ட “வடிவுடை மாணிக்கமாலை” 101 பாடல்களில் அமைந்தது. ஒவ்வொரு பாடலின் ஈற்றடி “வடிவுடை மாணிக்கமே” என முடிந்து, பெற்றதாயிடம் அருள் வேண்டும் பிள்ளையின் மன உருக்கத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது (1385-1486). அபிராமி அந்தாதி போன்ற யாப்பும் வேட்கையும் இப்பதிகத்தில் உள்ளன. இறைவியைப் பற்பல வடிவங்களில் அவர் புனைந்துரைப்பது பிள்ளைத்தமிழ் பாடுவது போலுள்ளது. இனிமையும் சீர்மையும் அமைந்து பல இடங்கள் மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழை நினைவூட்டுகின்றன.

அகத்துறைப் பாடல்களும் இரண்டாம் திருமுறையில் நிறைய உள்ளன. “இங்கிதமாலை” என்ற பதிகம் அவற்றுள் தலையாயது. 165 பாடல்கள் கொண்ட இது, தலைவி, தோழியுடன் பேசுவது போல அமைந்தது. 100 ஆண்டுகளுக்கு முன்னாலேயே (1904) இதற்கு இரண்டு உரைகள் எழுதப்பட்டு, உயிர்த்தலைவி இறைத்தலைவனுடன் சேர்ந்து பெறும் உயர்வு விளக்கம் பெற்றது என்றால் இதன் பெருமை புலப்படும். “கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்” என்றே இது தலைப்பு பெற்றுள்ளது. இரண்டாம் திருமுறையுள் திருமால் மீது அவர் பாடிய 16 பாடல்களும் உள்ளன. இராமநாம சங்கீர்த்தனம், இராமநாமப் பதிகம், வீரராகவர் போற்றிப் பஞ்சகம் என்னும் பிரிவுகளில் வரும் இவை, அவருக்குச் சமயக் காழ்ப்பில்லை என்பதற்குச் சான்றுகளாகும்.

**மூன்றாம் திருமுறை :**

சிவபெருமானை வணங்கும் “திருவடிப் புகழ்ச்சியில்” இத்திருமுறை தொடங்குகிறது. தேவாரம், திருவாசகம், பெரியபுராணம் போன்ற முன்னூல்களின் கருத்துக்கள் இதனுள் பொதிந்துள்ளன.

*“எம்பந்தம் அறஎமது சம்பந்த வள்ளல்மொழி*
*இயல்மணம் மணக்கும் பதம்*
*ஈவரசர் எம்முடைய நாவரசர் சொற்பதிகம்*
*இசை பரிமளிக்கும் பதம்”*

என்பன போல நால்வரையும் புகழ்கிறார்.

விண்ணப்பக் கலிவெண்பா, தேவாரப் பாடல்பெற்ற தலங்களை வரிசையாகச் சிறப்பித்து அங்கங்கு எழுந்தருளிய ஈசன்

பெருமையைப் பரவுகிறது. தலப்பாகுபாடும் தேவாரத்தில் உள்ளதுபோல காவிரி வடகரைத் தலங்கள், தென்கரைத் தலங்கள் என்று உள்ளன. சமுதாயம் பற்றிய செய்திகளும் இதனுள் உள்ளன. பொய்வேடம் பூண்டவர்கள், புறங்கூறி வாழ்பவர்கள், சொல்லொன்று செயலொன்றாய் இருப்பவர்கள், பொய்ந்நூல் கற்றவர்கள் என்று தம் கண் முன்னால் இருந்த சிலரை இந்த வெண்பாவில் குறித்துள்ளார்.

*"சூழ்ந்திடுக என்னையும் நின் தொண்டருடன்*
*சேர்த்தருள்க*
*வாழ்ந்திடுக நின்தாள் மலர்"*

என்று நிறையும் இந்தப் பதிகம் அவருடைய சமய நூலறிவுப் பரப்பைக் காட்டும்.

நெஞ்சறிவுறுத்தல் என்னும் பதிகம், இறைவனுடைய பரத்துவம், வல்லமைகள், வள்ளலாருக்கு இறைவன் அளித்த பேறுகள் ஆகியவற்றைக் கூறுகிறது. இறைவனை மானிட உறவுடைய ஒருவனாக்கி அவர் அழைக்கும் சொல்படிமங்கள் அழகு வாய்ந்தவை.

*தேடக் கிடைக்காத நம் தெய்வம் காண் ....*
*ஆசையுடன் ஈன்ற அப்பன் காண்*
*நன்மை தரப்பெற்ற நற்றாய் காண்*
*கானமணம் செய்விக்கும் அம்மான் காண்*
*துன்பம் துடைக்கும் துணைவன் காண்*

என்று விரிந்து போகிறது இந்த உறவு. அம்மையாய், அப்பனாய் இறைவனைக் காணும்போக்கு ஆழ்வார், நாயன்மார் பாடல்களில் நிறையவே உண்டு. ஆயினும் அதையும் தாண்டி ஆசிரியன், அம்மான், சுற்றம், தோழன், குற்றம் பொறுக்கும் கோமான் என்று இறையனுபவம் விரிந்து செல்வதைப் பாரதிக்கு முன்பே பாடிக் கண்ணன் பாட்டுக்குத் தோற்றுவாய் எழுதியவர் வள்ளலார். இறைவனின் எல்லையற்ற ஒவ்வொரு இயல்புக்கும் ஒவ்வொரு உறவுநிலை ஏற்றிய புதுமை அருட்பாவில் - மூன்றாம் திருமுறையில் அமைந்துள்ளது.

மகாதேவமாலை அருட்பாவின் விழுமிய கவிதைகளைக் கொண்ட கனிந்த பகுதி.

*"இதன் பொருட்சிறப்பு முழுவதையும் மொழிதல் எளிதன்று. இதில் ஈடுபட்டு நெஞ்சம் கரைந்துருகிச்*

*சிறுமையுற்ற தன் தன்மையை மறக்காத தமிழ்மகன்*
*இருத்தலரிது"*

என்று பதிப்பாசிரியர் பாலகிருஷ்ணபிள்ளை குறிக்கும் வண்ணம் (VII:13) உருக்கம் நிறைந்தது. நூறுபாடல்களைக் கொண்ட இந்த மாலை ஒருவகையில் சைவசித்தாந்தப் பிழிவு என்று சொல்லத்தக்கவாறு பல கருத்துக்கள் பொதிந்துள்ளன. "பொன்னாகி மணியாகிப் போகமாகி", "வன்புகலந்தறியாத மனத்தோர் தங்கள்", "தண்ணமுத மதிகுளிர்ந்த கிரணம் வீச" என்ற தொடக்கமுடைய பாடல்கள் சிறந்தவற்றுள் சிறந்தவை. அன்பர் திருஉளத்தை இறைவன் கோயிலாகக் கொண்டவன் (2168) என்னும் குறிப்பு "நெஞ்சமே கோயில்" என்னும் தாயுமானவர் சொற்றொடரை நினைவுபடுத்தும்.

102 பாடல்கள் கொண்ட சிவநேசவெண்பா சமயகுரவர் வாழ்வு நிகழ்ச்சிகளில் அவர் ஈடுபட்டதைக் காட்டும். "சிவபெருமானாகிய உன் புகழைச் சம்பந்தர் சொன்னதால் எலும்பு பெண்ணாயிற்று என்று சொல்கிறார்கள். உன்னை வழிபட்டுப் பேறுபெற்ற அந்த ஞானசம்பந்தன் பெயரைச் சொன்னால் சாம்பல் கூடத் தெய்வ வடிவு பெறுமே" என்று பொருள்படும் அழகுமிக்க பாடல்கள் இதில் உள்ளன.

"திருவருள் முறையீட்டி"ல் மொத்தம் 232 பாடல்கள் எல்லாமே இறையருள் வேண்டி உருக்கத்துடன் அவர் செய்த முறையீடுகள் ஆகும். வைத்திய நாதப் பதிகத்தில் உலோகாயதவாதிகளுக்கும் பக்தர்களுக்கும் இடையே இருக்கும் வேறுபாடுகளைக் கூறியுள்ளார். "நல்லமருந்து" என்னும் பாடல் இசைப்பாடல் வகை சார்ந்தது. கூட்டு வழிபாட்டுக்கேற்ற நாமாவளி போன்றது. "மூவர்க்கு அரிய மருந்து செல்வமுத்துக் குமரனை ஈன்ற மருந்து" எனக்கூறி அதை ஓதி வழிபடின் நோய்கள் நீங்கும் என அவர் உறுதி கூறுகிறார். விநாயகர் மீது ஐந்து பதிகங்கள், திருமகளுக்கு ஒரு பாடல், கலைமகளுக்கு மூன்று பாடல்கள், நிறைவாக "மங்களம்" என்னும் பாடல் வருகின்றன. விநாயகர், முருகன், ஈசன், அம்மை, திருமகள், கலைமகள் ஆகிய தெய்வங்களுக்கு மங்களம் கூறி,

*"புண்ணியராகிய கண்ணியராய்த் தவம்*
*பண்ணிய பத்தர்க்கு முத்தர்க்கு மங்களம்"*

என்று அடியாரையும் வாழ்த்தி மூன்றாம் திருமுறை நிறைவு பெறுகிறது.

**நான்காம் திருமுறை :**

சிதம்பரம் பற்றிய பாடல்களே இதனுள் பெரும்பகுதியாய் அமைந்து அகத்துறைப் பாடல்களும் இசைப்பாடல்களும் விரவியுள்ளன. அன்பு முறுகிய நிலையில் இசையால் பாடிப்பரவும் மனமுதிர்ச்சி அவருள் வளர்ந்த நிலைக்குச் சான்று இந்தப் பாடல்கள்.

*"நீறணிந்து ஒளிர் அக்கமணி தரித்து உயர்சைவ*
*நெறி நின்று"*

வாழ்கின்ற மெய்யன்பர் பற்றிக் கூறி, அப்படித் தாமும் ஐந்தெழுத்தை ஓதி வாழ விரும்பிய அவர் உட்கிடக்கையை இங்கு காணலாம். தனித்திரு விருத்தம் சமூகச் சிந்தனைகளை உள்ளடக்கியது. "வைவம் என்று எழுவோர்க்கும் நல்வாழ்வு தருவது சைவமே" என்ற தெளிவை ஒரு பாடல் காட்டுகிறது (2763). "உடுக்கவோ ஒரு கந்தைக்கு மேலிலை உண்ணவோ உணவுக்கும் வழியிலை" என்று படிப்போர் நெஞ்சையும் வேறொரு பாட்டு உருக்குகிறது (2779). அறிவாலறியும் இறையனுபவத்தை அருளாலும் பெறலாம் என்ற நுட்பத்தை இன்னொரு பாட்டு காட்டும் (2995). என்னை அடியனாக ஏற்றுக் கலந்த பின்னர் கைவிட்டால் "பிழை ஏற்ற நினைத்திடிலோ பெருவழக்கிட்டிடுவேன்" என்று இறைவனையே அச்சுறுத்தும் பக்தித் துணிச்சல் ஆகியவற்றையும் இங்கு துய்க்கலாம்.

இவை தவிர, தாயுமானவரைப் பின்பற்றிக் கண்ணி என்று குறிக்கப்படும் இரண்டடிப் பாடல்களை இசைவடிவத்தில் வழங்கிய சில பகுதிகளும் நான்காம் திருமுறையுள் உள்ளன. பாங்கிமார் கண்ணி, வெண்ணிலாக் கண்ணி, முறையீட்டுக் கண்ணி, திருவடிக் கண்ணி, பேரன்புக் கண்ணி ஆகியன இத்தகையன.

*"தன்னை யறிந்தின்பமுற வெண்ணிலாவே .. ஒரு*
*தந்திரம் நீசொல்ல வேண்டும் வெண்ணிலாவே"*

என்ற பாடல் பரவலாக அறியப்பட்ட ஒன்று.

ஓயாத திருக்கூத்தைப் பொன்னம்பலத்துள் நிகழ்த்திக் கொண்டிருக்கும் பெருமானின் ஆடும் திருவடியும் அசையும் பொன்மேனியும் நோகாதா நோகாதா என்று கண்ணி தோறும் கேட்கும் அவர் அன்பு படிப்போரை உருக்கும்.

*"அன்பர் இன்பம் கொள்ள நடம் அம்பலத்தே ஆடுகின்றாய்*
*இன்புருவாம் உன்றன் இணையடிதான் நோவாதா?"*

இது ஒரு சான்று.

**ஐந்தாம் திருமுறை :**

இதனுள் 12 பதிகங்கள் 12 மாலைகளாக உள்ளன. முதல் எட்டும் சிதம்பரம் பற்றியன : எஞ்சியன சமய குரவர் நால்வர் மீது பாடப்பட்டவை. சன்மார்க்கம் என்பது சுத்த சிவநெறி. திருவருளையும் தெளிவையும் தருவது பொதுநெறி : அன்பளிக்கும் தெய்வம் இன்பமும் அளிக்கும் : மதத்திலும் அவரவர்க்கு இயைந்த அனுபவமாய்த் தெய்வம் இருக்கும் என்பன போன்ற உயர்ந்த கருத்தோட்டங்கள் இந்த மாலைகளில் உள்ளன. அன்புமாலை, அருட்பிரகாச மாலை, பிரசாத மாலை, ஆனந்த மாலை, பக்தி மாலை, சௌந்தர மாலை, அதிசய மாலை, அபராத மன்னிப்பு மாலை என அவற்றின் பெயர்களே படிக்கத் தூண்டுவது போல உள்ளன. இவற்றுள் அருட்பிரகாச மாலை பெரியது : 100 பாடல்களால் ஆனது. வள்ளலார் பெற்ற இறையின்பத்தைக் கூறுகிறது.

நால்வரைப் பற்றிய மாலைகள் ஒரு வகையில் இலக்கியத் திறனாய்வு போல அமைந்துள்ளன. "திலக நற்காழி ஞானசம்பந்தத் தெள்ளமுதாம் குருவே" என அவர் அழைப்பதிலிருந்து, தாம் ஓதாதுணர்ந்தவராய் இருந்தாலும் உள்ளத்திருந்து குருவாய்த் தம்மை இயக்கியவர் சம்பந்தப் பெருமான் என்பதைச் சுட்டும் நுட்பம் தெரிகிறது. உயிரனுபவம், அருளனுபவம், சிவ அனுபவம் என்னும் மூன்று நிலைகளில் சம்பந்தரின் வாழ்வை இணைத்துப் பேசுவது அழகாய்ப் பொலிகிறது. இந்தக் கூர்த்த நோக்கே பின்னாளில்

*"ஜோதி ஜோதிஜோதி சுயம்*
*ஜோதி ஜோதிஜோதி பரம்*
*ஜோதி ஜோதிஜோதி அருள்*
*ஜோதி ஜோதிஜோதி சிவம்"*

என்று பாட வித்தாகிறது.

ஆளுடைய நம்பிகளாகிய சுந்தரரைப் பாடும்போது முதலைவாய்ப் பிள்ளையை அழைத்த அற்புதச் செயலை விதந்தோதி, இதை வடமொழியிலுள்ள புராண நிகழ்ச்சிகளுடன் ஒப்பிடுவது மலையை அணுவோடு ஒப்பிடுவதற்குச் சமம் என்று குறிப்பது அழகான பாட்டாகும்.

ஆளுடைய அடிகளாகிய மாணிக்கவாசகர் பற்றிய பத்துப் பாடல்களுமே தனித்தனியான ஒப்பிலா உயர்செம்மொழிப் பாடல்கள்.

*"வான்கலந்த மாணிக்கவாசக நின்வாசகத்தை*
*நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே*
*தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித் தீஞ்சுவை கலந்துஎன்*
*ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே"*

என்னும் பாட்டு திருவாசகம் ஓதப்பெறும் இடங்களில் எல்லாம் தவறாமல் சொல்லப்படும் பெருமையுடையது. மணிவாசகப் பெருமான் "அன்புருவம் பெற்று அருளுருவம் பெற்று பின் இன்புருவம்" பெற்ற அந்த ஆன்மப் படிநிலையைப் பாடி முழுவதுமாகத் துய்க்கிறார் : படிப்போரையும் துய்க்க வைக்கிறார்.

**ஆறாம் திருமுறை :**

கருங்குழி, வடலூர் சித்திவளாகம் ஆகிய இடங்களில் வள்ளலார் இருந்தபோது பாடிய பாடல்களின் தொகுப்பு இது. இவற்றுள் ஏறக்குறைய சரிபாதி அகத்துறையிலும் இசை வடிவமாகவும் அமைந்துள்ளன. அனுபூதி நிலையின் முதிர்ச்சியை இவற்றுள் காணலாம். முதல் ஐந்து திருமுறைகளும் சேர்ந்து 3266 பாடல்கள் : ஆறாம் திருமுறை மட்டும் 3552 பாடல்களாகப் பெருந்தொகுதியாக அமைந்துள்ளது.

ஆற்றாமைப் பதிகம் அக்காலத்தில் இருந்த சமுதாயச் சிறுமைகளைச் சுட்டுகிறது. முறையீடு, பிள்ளைச் சிறு விண்ணப்பம், பிள்ளைப் பெருவிண்ணப்பம் ஆகிய பதிகங்களில் வள்ளலாரின் தன் வரலாற்றுக் குறிப்புக்களை உணரலாம்.

*"புண்படா உடம்பும் புரைபடா மனமும்*
*பொய்படா ஒழுக்கமும் பொருந்திக்*
*கண்படாது இரவும் பகலும் நின்தனையே*
*கருத்தில் வைத்து ஏத்துதற்கு இசைந்தேன்"* (3556)

என்ற பாடல் அபயத்திறனில் வருகிறது. பெருமான் போற்றிய மும்மணிகளை முதலிரண்டடிகளில் குறித்திருக்கிறார். உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவோரை இங்கும் சுட்டிக்காட்டி எச்சரிக்கிறார். எளியவர் நிலத்தைக் கவர்ந்தவர்கள்: சமயவாதங்களில் ஈடுபட்டு வீண்பொழுது போக்கியவர்கள் : வட்டிக்குப் பணம் கொடுத்து ஏழைகள் வீட்டைக் கவர்ந்தவர்கள் என்று அன்றைய "கொடியர்கள்" பற்றிய செய்திகள் உள்ளன.

அவர் துறவியாக இருந்தும், தம்முன் சமூகத்தில் நடக்கும் கொடுமைகளைப் பார்த்து வாளா இருக்க முடியவில்லை. அவருடைய நெஞ்சக்கொதிப்பு இப்படிப் பாடலாக வெளிப்பட்டது. பக்தி இலக்கியத்தில் மக்கள் துன்பத்தைப் பாடும் முதல் கவிஞனாக அவர் இப்படி மலர்ந்தது ஆழமாக நோக்குதற்குரியதாகும்.

சமயமதக் காழ்ப்புகளும் கற்பனைகளும் தாண்டிய அவர் மனநிலை (3637), எந்தச் சமய மதமாயினும் அவை கூறும் அனுபவ நிலைகள் சிவபெருமானின் அருள்நிலையில் உள்ளவையே என்ற தெளிவு (3639), போன்றவை விளக்கம் பெறுகின்றன. அவருடைய ஆன்மிக வரலாறு எனப் பதிப்பாளர் பாலகிருஷ்ணபிள்ளை போற்றும் நடராசபதிமாலை (XI : 4) பின்னால் அவர் பாட இருக்கும் அருட்பெருஞ்சோதி அகவலுக்குக் கடைகாலாய் இங்கு அமைகிறது. பன்னிரண்டு சீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தில் சொற்கள் ஞான அனுபவத்திலிருந்து வீறிட்டெழுந்து வந்து அழகு வடிவம் கொண்ட அரிய பதிகம் இது.

"சுத்த சன்மார்க்க வேண்டுகோள்" தமிழகம் நன்கு அறிந்த பாடல்கள் பல கொண்டது. இறைவனை அழைத்து

"அப்பா நான்வேண்டுதல் கேட்டருள் புரிதல் வேண்டும்
ஆருயிர் கட்கெல்லாம் நான் அன்பு செயல்வேண்டும்"

என்பது போலத் தன் வேண்டுதல்களைப் பட்டியலிட்ட பதிகம் இது. எளிமை, அன்பு, இரக்கம், துன்புறும் பிற உயிர்களுக்குத் தொண்டாற்றல் எனச் சன்மார்க்கப் பண்புகளை முன்வைக்கும் அற்புதப் பகுதியுமாகும். இதேபோல "அருட்சோதித் தெய்வம் எனையாண்டு கொண்ட தெய்வம்" என்று தொடங்கும் பரசிவநிலைப் பதிகமும் நாடறிந்த ஒன்றே. முதல்பாட்டு எல்லா நிகழ்ச்சிகளிலும் ஓதப்படும் பெருமையுடையது.

100 பாடல்கள் கொண்ட "அருள்விளக்கமாலை" அருட்பாவின் உயிர்நாடிகளுள் ஒன்று எனலாம். "கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த குளிர்தருவே தருநிழலே நிழல் கனிந்த கனியே" என்றும் "அருள்விளக்கே அருட்சுடரே அருட்சோதிச் சிவமே" என்றும் இவை போலப் பிறவாறும் அழைத்துத் தமக்கு இறைவன் காட்டிய அருளுக்கு நன்றி சொல்வது போல இது அமைந்துள்ளது. "தனித்தனி

முக்கனி பிழிந்து" என்று தொடங்கும் பாடல் தமிழிலக்கியத்தின் சொல்லோவியங்களில் ஒன்று என்பதில் ஐயமில்லை.

*"கரையா எனதுமனக் கல்லும் கரைந்தது*
*கலந்து கொளற்கு என் கருத்தும் விரைந்தது*
*புரையா நிலையில் என்புந்தியும் தங்கிற்று*
*பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று"* (4506)

என்னும் பாடலுள் அவர் அடைந்த ஆன்ம வெற்றிக் களிப்பை - அதன் எதிரொலியைக் கேட்கலாம்.

அருட்பெருஞ்சோதி அகவல் மிகச் சிறந்த பகுதி : 1596 அடிகளில் அமைந்த நெடும்பாடல். அவருடைய அருட்காட்சியில் பெற்ற எல்லா ஞானநிலைகளையும் இதனுள் வடித்துள்ளார். "அளவாலும் பொருளாலும் பெருமையுடையது" என ஊரன் அடிகள் கூறுவது (வர : 501). முற்றும் பொருந்தும். எளிமையும் இனிமையும் சேரச் சொற்கள் முற்றோதலுக்கு ஏற்ற வண்ணம் தத்துவக் கருத்துக்களைத் தாங்கிக் கொண்டு நீரூற்று போலத் தாமாக வெளிவருகின்றன. ஐம்பூத நிலைகள், உயிர்த் தோற்றம், அறிவு வளர்ச்சி, அறிவு அருளாதல், அருளறிவே சிவம், இறைவனே தந்தை தாய், குரு நட்பு என்று அகவல் ஒரு ஞானவிரிவாகப் போகிறது.

இவையன்றி அறிவியல் கருத்துக்களும் அகவலுள் பொதிந்து கிடக்கின்றன. மண்ணினில் திண்மை, நீரினில் தண்மை, தீயினில் சூட்டியல், காற்றிடை அசையியல், வெளியிடை விரிவியல் என்று அவர் கையாளும் சொற்கள் அறிவியல் செறிவுடையவை. இன்று வழக்கில், ஆங்கிலத்தில் உள்ள அறிவியற் கலைச் சொற்களின் தமிழ் வடிவங்களை 150 ஆண்டுகளுக்கு முன்பே வள்ளற்பெருமான் வகுத்திருப்பது வியக்கவைக்கும். Mass - திண்மை, Heat - சூட்டியல், Dynamics - அசையியல் என்று இப்படிப் பலவற்றைக் காணலாம். அறிவியலை எளிய தமிழில் கூறமுடியும் என்று வள்ளலார் அன்றே மெய்ப்பித்தார். "புனல் மேல் புவி", "புவி மேல் புடைப்பு" என்னும் சொற்களும் ஆழமாக ஆய்வுக்குரியன. கடலிலும், மலையிலும் பலவுயிரும் பலவளமும் இறைவன் படைத்தான் : அவற்றுள் "சித்திர விசித்திர சிருட்டிகள்" உள்ளன என்று கூறுவதை இன்றைய ஒளிப்படங்கள், ஆய்வுகள் மெய்ப்பித்து வருகின்றன.

**தத்துவக் கருத்துக்களும் இறையனுபூதி நிலையும் விரவிய "ஆணிப் பொன்னம்பலக் காட்சி"ப் பதிகம் : சித்தரின் குறிப்புமொழி கொண்ட**

*"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்*
*மயில் குயிலாச்சுதடி - அக்கச்சி*
*மயில் குயிலாச்சுதடி"* (494)

என்னும் பாடல் : அடியனாய், மகனாய், அன்பனாய், அடிகளாய் அவர் பெற்ற சன்மார்க்க நிறைவைக் காட்டும் பாடல். ஆகியவற்றையும் ஆறாம் திருமுறையுள் காணலாம். "எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரும் தம்முயிர் போல் எண்ணி" வாழும் வித்தகர் பற்றிய உயிர்நிலைப்பாட்டு : ஏற்றத் தாழ்வுகள் அற்ற சமுதாயம் உருவாக அவர் காட்டும் புதிய புனிதகுலம் : "கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக" என அவர் சாபமிட்ட பாட்டு போன்றவை இதனுள் விரவிக்கிடக்கின்றன. "நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து" என்று தொடங்கும் "மரணமிலாப் பெருவாழ்வு"ப் பதிகம் வாழ்நாள் முழுதும் அவர் கூறிவந்த உயர்ந்த கோட்பாட்டை விரித்துரைக்கிறது.

முதல் திருமுறையில் "தெய்வமணிமாலை" என்னும் பதிகத்தில் தொடங்கிய அருட்பாவின் ஆன்மிகப் பயணம் "அனுபவ மாலை"ப் பதிகத்தில் நிறைவடைகிறது. பெயரே அழகானது. அவர் பெற்ற பேரின்ப வெள்ளத்தின் நிறைவாக அது அமைந்துள்ளது. 100 பாடல்கள் கொண்ட இந்தப் பதிகம் அருட்பா என்னும் ஆணிப்பொன்னம்பலத்தின் தூண்களாக, விளக்காக உயிராகக் கனிந்துள்ளதைக் கற்போர் உணர்வர். அகத்துறையிலமைந்து, திட்பமும் செறிவும் வாய்ந்து மனித அன்பு இறையன்பாகவும், மனித இன்பம் இறையின்பமாகவும் ஆகும் எனக் கட்டியம் கூறி அனுபவமாலை அருட்பாவை முழுமையாக்குகிறது.

வேகமாய் இங்கு தரப்பட்ட கண்ணோட்டம் 5818 பாடல்களையும் கூறிவிடவில்லை : ஆறு திருமுறைகளைக் கூட, அவற்றின் பதிகங்களை முழுமையாகக் கூறிவிடவுமில்லை. அது சிறிய அளவில் செய்ய முடியாதது. அருட்பா என்னும் அழகுக் கோயிலைத் தொலைவிலிருந்து ஒருவர்க்குக் காட்டுவது போன்ற செயல் இது. அவரவரே கோயிலுக்குள் சென்று அதன் அற்புதத்தை, தோற்றப் பொலிவை, அமைந்துள்ள வனப்பைக்கண்டு, நிறைவாகத் தெய்வக் காட்சியைப் பெற

வேண்டும். அதற்கான ஒரு சிறு வழிகாட்டுதல் இந்த அறிமுகம் : அவ்வளவே.

## 5. வள்ளலார் நோக்கில் திருஅருட்பா

தம் பாடல்களைத் தாமே திறனாய்வு செய்வது போல வள்ளலார் சில இடங்களில் குறிப்புக்கள் கொடுத்துள்ளார். "என் தமிழ்ப்பாட்டு", "நல்தமிழ்ப்பூமாலை", "பைஞ்சீர்த் தமிழ்மாலை", "மதன இன்தமிழ்மாலை" என்பன போலப் பல இடங்களில் அவை வருகின்றன. ஞான சம்பந்தப் பெருமான் தெய்வத் தமிழின் சீர்த்தி எல்லாம் திரட்டி ஒவ்வொரு பதிகத்தின் ஈற்றிலும் இப்படித் தமிழுக்கு முன்னடையும் பின்னடையும் கொடுப்பது வழக்கம். அவருடைய வாழ்விலும் பாவிலும் தோய்ந்த வள்ளலாருக்கு அவற்றின் தாக்கம் இருந்ததில் வியப்பில்லை.

மொழிப்புலமையும், கவிதை வளமும் ஒருங்கே கைவரப்பெற்ற வள்ளலார் தக்க சொல்லைத்தக்க இடத்தில் கையாளும் திறமை வாய்ந்தவர். "சொல் நிறைந்த பொருளும் அதன் இலக்கியமுமாகி" என்று அவர் இறைவனைப் பாடுகிறார். சொல், பொருள் அவையிரண்டும் சேர்ந்த இலக்கியம் என்ற வரிசை திறனாய்வுக் கூற்றாகும். ஒரு நல்ல இலக்கியத்தில் தக்க சொல்லாட்சி இருக்க வேண்டும் : சொல்லால் விளங்கும் பொருள் உயர்ந்ததாக இருக்க வேண்டும். அவையிரண்டும் சேர்ந்து ஒரு செம்மையுணர்வு அரும்ப வேண்டும். அப்பொழுது தான் அது இன்பம் தரமுடியும். அந்த இன்பமே இறையின்பத்துக்குச் சமம் என்பது இதன் விளக்கம்.

*"எண்ணும் நீ எழுத்தும் நீ இயைந்த பண்ணோடு*
*எழுத்தும் நீ"*

*"கண்ணும் நீ கருத்தும் நீ காவியங்கள் ஆன நீ"*

என்றெல்லாம் சிவவாக்கியர் பாடுகிறார். அந்தச் சித்த மரபிலே வந்த வள்ளலாருக்கு இப்படிப் பாடுவது புதிதன்று.

*"மொழித்திறம் செய்து அடிக்கடி நான் முடுகி முயன்றாலும்*
*முன்னவநின் பெருங்கருணை முன்னிடல் இன்று"*

என்பது (3816) திறனாய்வாளனின் ஒரு அடிப்படைப் பண்பைக் குறிக்கும். நிறைவாக எல்லாவற்றையும் தன் ஆய்வில் கண்டுவிடலாம் என்று யாரும் நினைக்கக்கூடாது.

இறைவனுடைய பெருமையை, பேரழகை, பேராற்றலைப் பாடி முடிபுகாண முடியுமா? என்னதான் மொழித்திறம் கைவரப் பெற்றாலும் அது இயலாத செயல் என்பது அவர் துணிபு. இராமபிரானின் அழகைப் பாட முற்பட்டு

*"மையோ மரகதமோ மறிகடலோ மழைமுகிலோ"*

எனப்பாடி அடுக்கி இயலாமல் போய்,

*"ஐயோ இவன் வடிவென்பது ஓர் அழியா*
*அழகுடையோன்"*

என்று கம்பர் தன் இயலாமையைப் பெருமகிழ்ச்சியுடன் தெரிவித்ததும் எண்ணத்தகும்.

ஆனாலும் இறைவன் கருணை இருந்தால் ஒரு சிறு துரும்பு கூட ஐந்தொழில் செய்யும் : அப்படித் தாமும் ஓர் ஆற்றல் பெற்றுப் பாடியதாக வள்ளலார் கூறுகிறார். பிறரெல்லாம் கலைகள் மொழிந்த பொருள் திறங்கள் தெளிந்து இனிய பாட்டால் தெய்வம் பராவுகின்றனர் : தாம் பாடுவது புன்மொழிப்பாட்டு : ஆனால் இறைவன் அதையும் ஏற்றுக் கொண்டான் என்று மகிழ்ச்சியடைகிறார்.

*"செப்பார் கலைகள் மொழிந்த பொருள்திறங்கள்*
*அனைத்தும் தெரிந்து தெளிந்து*
*இப்பாரிடை நின்புகழ் பாடுகின்ற பெரியரின்*
*மொழிப்பாட்டு*
*ஒப்பாச் சிறியேன் புன்மொழிப்பாட்டு எல்லாம்*
*உவந்த உடையானே"* (3587)

இந்தச் சொற்கள் தன்னடக்கமாய், அவருடைய பாடலைத் தாழ்த்திக் கூறுவது போலத் தோன்றினும், முதலிரண்டு வரிகள் "அருட்பா கலைகள் மொழிந்த பொருள் திறங்களை உடையது: அவற்றைத் தெரிந்து தெளிந்த பின்னரே பாடப்பட்டது" என்று குறிப்பதை உணரலாம். அதே போலப் பழம்பிழி மதுரப் பாட்டல எனினும் பத்தரும் பித்தரும் பிதற்றும் பாட்டை இறைவன் வெறுக்காமல் கேட்பான் (3749) என்றும் கூறுகிறார். "பழம்பிழி மதுரப் பாட்டு" அருட்பாவே என்பதைக் காலம் மெய்ப்பித்துள்ளது.

"பாமாலை ஏற்றல்" என்னும் பதிகத்துள் தன் பாமாலை "நான்புனைந்த சொல்மாலை", "என் சிறுவாய்ச் சொல்மாலை", "முன்பின் அறியாது மொழிந்த மொழிமாலை", என்பன போல புனைந்துரைக்கிறார். பூமாலை அணிந்த பெருமான் அவர்

புனைந்த பாமாலையை ஏற்றுக் கொண்டான். சிறுவாயால் சொல்லியவற்றை அவன் ஏற்பானோ மாட்டானோ என்ற ஐயம் அவருக்கிருந்தது. ஆனால் அதை வேதாகமம் என ஏற்றான். "பொன் ஒப்பதாம் ஒரு நீ போற்றிய சொல்மாலை" என இறைவனே நற்சான்றிதழையும் தந்துவிட்டான். அருட்பா அருட்பாவா என இனிக் கேட்போர் யார்? "என்னுரையும் பொன்னுரை என்றே அணிந்தான்" "அன்பின் இசைந்து அந்தோ அணிந்து கொண்டான்" என்று வருவன அருட்பா இறைவனிடம் மட்டுமன்றி மக்களிடமும் பெற்ற ஏற்பளிப்பைக் காட்டும். பிறரால், மக்களால் ஏற்கப்படுவதே இலக்கியம் : அப்பொழுதே அது நிலைபேறு பெறும் என்ற அடிப்படை நுட்பத்தை இது புலப்படுத்துகிறது. இறைவனைப் பற்றியதாயினும் மக்கள் மன்றத்தில் மக்கள் இலக்கியமாக அருட்பா மலரும் என்ற நம்பிக்கை அவருக்கிருந்தது என்பது தெளிவாகும்.

தமக்கு முன்பிருந்த அருளாளர் பாடல்களை ஆழ்ந்து கற்றவர். என்றாலும் தாம்பாட முற்பட்டபோது ஒருவகை அச்சம் அவருள் எழுந்தது.

> "*யாதறிவேன் பாடுக என்று எனக்கு ஏவலிட்டாய்*
> *பண்புடைநின் மெய்யன்பர் பாடிய பேரன்பில்*
> *பழுத்த பழம்பாட்டில் ஒருபாட்டும் அறியேனே*
> *தண்புடைநன் மொழித்திரளும் சுவைப் பொருளும்*
> *அவைக்கே*
> *தக்கஇயல் இலக்கியமும் தந்தருள்வாய்*" (5471)

என்று இறைவனையே வேண்டி ஆற்றல் பெற்றார். பழுத்த பழம்பாட்டு, பண்புடை அன்பர், நல்மொழித்திரள், சுவைப் பொருள், தக்க இயல், தக்க இலக்கியம் என்ற தொடர்கள் அவருடைய ஆழ்ந்த புலமையைத் தெரிவிப்பன. நல்மொழி (சொல்லாட்சி), சுவை, இலக்கியம் என்னும் மூன்றும் இன்றைய திறனாய்வில் இடம்பெறும் சொற்கள். அவர் வகுத்த இலக்கணத்துக்கேற்ப அருட்பா அமையப் பெற்றுப் பழுத்த பழம்பாட்டாக, தண்புடை நன்மொழித்திரள் உடையதாக, சுவைப்பொருளை எல்லார்க்கும் ஊட்டி, தக்க இயல் இலக்கியம் எனப் பேறுபெற்றது.

படைப்பாளன் உள்ளத்தில் உண்மையான ஒரு நோக்கம், இயற்கையாகப் பீறிடும் ஓர் இயல்பான உணர்ச்சியிருந்தால்

படைப்பு வெற்றியும் ஏற்பளிப்பும் பெறும். இது உலக மொழிகளில் காணப்படும் எல்லா விழுமிய இலக்கியங்களுக்கும் பொருந்தும். உள்ளன்போடு பாடுகின்ற உள்ளத்தில் நல்லாசிரியராக இறைவன் வந்து கூடுவான் என்பது வள்ளலார் வகுத்த உறுதி. "பாடுகின்ற உள்ளகத்தே கூடுகின்ற குருவே" என்பன அவர் சொற்கள். பாடுவோர் கொள்ளும் பொருள் உயர்ந்ததாக இருக்க வேண்டும். உள்ளன்போடு அதைப் பாடவும் வேண்டும். ஒருவருடைய நோக்கம் உயர்ந்ததாக இருந்து முயற்சியும் வலுவுடையதாயின் இறையருள் தானே கூடும். அருட்பா உயர்நோக்கமுடையது : மக்களுக்கு உயர்கதி காட்டும் பெருமையுடையது. ஆதலால் அது விழுமிய இலக்கியம் என்பது சாலும்.

ஒற்றியூரில் நந்தியாச்சிரமம் என்னும் ஓடை ஒன்று இருந்தது. சென்னையில் இருந்தபோது வள்ளற்பெருமான் ஒற்றியூர் சென்று வழிபட்ட போதெல்லாம் இந்த ஓடையருகில் விரும்பி அமர்ந்து அதன் குளிர்ச்சியில் திளைப்பார். அதைக் குறிக்கும் போது "கண்டவர் உளமெலாம் கட்டுகின்றது தண்டமிழ்க் கவிதை போலச் சாந்தம் மிக்கது" என்று பாடுகிறார். "அவியகத்துறைகள் தாங்கி ஐந்திணை நெறியளாவி ..... சான்றோர் கவியெனக் கிடந்தது" எனக் கோதாவரியைக் கம்பர் முன்பு பாடினார். கவிதையைத் தண்ணிய நீரோடையுடன் ஒப்பிடுவது இலக்கிய மரபாக இருக்கிறது. கவிதை படித்தவர் உள்ளத்தையெல்லாம் கட்டுகிறது. இது இறுக்கம் இன்றிய மென்மைப் பிணைப்பாகும். "என்றுமுள் தென்தமிழுக்கு" அத்தகைய ஆற்றலுண்டு. "வாழையடி வாழையென வந்த மரபில் தானும் வந்ததாக வள்ளலார் பாடுகிறார். அது சமய மரபு மட்டுமல்ல : இலக்கிய மரபும் ஆகும். சாந்தம் மிக்கதாய், கற்பவர் உளத்தைக் கட்டும் தமிழ்மரபில் அருட்பாவும் முன்னணியிடம் பெற்றது. சாந்தம் மிக்க, படிப்போர் நெஞ்சை ஈர்க்கும் வல்லமை அருட்பாவுக்கு உண்டு. அவர் வகுத்த நெறிக்கு அருட்பாவே இலக்கியம். ஏனெனில் அவரே சொல்வதுபோல அது தண்டமிழ்க்கவிதை. தமிழின் இனிமையும் குளிர்ச்சியும் பொதியமலை பிறந்தபோது இயற்கையாகப் பிறந்தவை.

பாரதி பாடல்களில் ஊன்றித் திளைத்த வ.வே.சு. ஐயர் "துள்ளிவருகுதுவேல்" போன்ற பாரதியின் தொடர்கள் அட்சர லட்சம் பெறும் என்கிறார். அதாவது பாரதியின் ஒரு எழுத்து ஒரு

லட்சம் ரூபாய்க்கு சமம் என்பது பொருள். பாரதிக்கு முன்னாலும் முன்னோடியாகவும் வாழ்ந்த வள்ளலார் பாடுகிறார் :

*"சீர்பாட்டில் சிறந்த சிவகுருவேஇக்*
*குடும்பத்தின் திறம்பாடற்கே*
*ஓர்பாட்டிற்கு ஒருகோடிப் பசும்பொன்வரும்"*

(குடும்ப கோஷம் : 4)

ஒரு பாட்டுக்கு ஒரு கோடி என்பது நல்ல பாட்டுக்கான விலை. அது, இலக்கியத்தின் பெருமையைக் காட்டுமே தவிர, பெறுமானத்தின் மதிப்பை அல்ல. பொன்னும் பொருளும் அழிய நல்ல இலக்கியம் காலத்தை வென்று வாழும் என்பது கருத்து. அருட்பாவின் ஒரு பாட்டு அவருடைய மதிப்பீட்டில் அக்காலத்தில் ஒரு கோடி பொன்னுக்குச் சமம் என்றால் மதிப்பிட முடியாத அருட்செல்வம் என்பதே பொருள். இயற்கையூற்றாகப் பொங்கித் ததும்பிய இறையுணர்வு, "பண்களிக்கப் பாடுகின்ற பாட்டாக" வெளிவந்தது.

வேறொரு பாட்டில் தமிழைக் "கருநெறித் தமிழ்" என்று குறிப்பிடுகிறார். "திருநெறிய தமிழ்வல்ல ஞான சம்பந்தர்" மரபில் வந்தவராயிற்றே, ஆகவே அந்தச் செறிவு வள்ளலார் வாக்கிலும் வெளிப்படுகிறது. உயர்ந்த நெறிகளைக் கருவாகக் கொண்ட மொழி என இதற்குப் பொருள்கொள்ள வேண்டும். அருட்பா கருநெறித்தமிழ் தான்.

*"முன்னை நன்றாக முயல்தவம் செய்கிலார்*
*பின்னை நின்று என்னேபிறவி பெறுவது*
*என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ்செய்யுமாறே"*

என்று பாடித்தன் பிறப்புக்காகப் பெருமை கொள்கிறார் திருமூலர். இறைவனை நன்றாகத் தமிழில் பாடவும் தவம் செய்தோர்க்கே முடியும். தமிழ்மண்ணில் பிறந்து, தமிழால் இறைவனைப் பாடும் திருவருள் வள்ளலாருக்கு வாய்த்தது. இறைவன் அவரை நன்றாகவே படைத்தான். அதற்கு நன்றியாகத் திரு அருட்பா பாடி நன்றாகவே வள்ளலார் தம் கடனைச் செலுத்தினார்.

அருட்பா, இறையின்பத்தில் தோய்ந்து வள்ளலார் பெற்ற இன்பங்களை எல்லாரும் பெறுமாறு உயர்நெறிகாட்டிய கருநெறித்தமிழ். இனிமையும் குளிர்ச்சியும் உடைய தண்டமிழ். அன்பு வேறு இன்பம் வேறில்லை. "இன்ப அன்பு" என்கிறார்

சேக்கிழார் பெருமான். அன்பு வேறு அருள் வேறில்லை. அருட்பா இன்பப்பாட்டே. இலக்கியவாயிலாக உயர் இன்பத் துய்ப்புக்கு வழிகாட்டும் அன்புப்பாட்டு.

ஆகவே அருட்பா பற்றிய அவர் கருத்துக்கள், நல்ல பாடலுக்கு அவர் வகுத்த இலக்கணங்கள் முற்றிலும் பொருந்தும் என்பதில் ஐயமில்லை.

## 6. திருஅருட்பா : இலக்கிய மதிப்பீடு

தமிழகத்தில் மட்டுமல்லாது, பாரதத்தின் பல இடங்களிலும் சமயக் குழப்பமும் அரசியல் சீர்கேடும் நிகழ்ந்த போதெல்லாம் மக்களுக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் அருளாளர்கள். "பக்திக் கவிஞர்கள்" என்று வே.ராகவன் அவர்களைக் குறிப்பிடுவார். (The Great Integrators and Saint - Singers of India, p: 43). பழம்பெருமையை மக்களுக்கு எடுத்துக் கூறிப்பாடல்கள் மற்றும் உபதேசங்கள் மூலம் அவர்கள் ஞானத்தை வளர்த்தார்கள். பழைய இலக்கிய மரபில், எளிய மொழியில், மக்கள் நெஞ்சைக் கவரும் வடிவங்களில் அவர்கள் பாடல்கள் அமைந்தன. தாய்மொழியே, மக்கள் பேசும் மொழியே அவர்களுக்குக் கருவியாயிற்று. வள்ளலார் அத்தகைய அருளாளர்களில் ஒருவர். தமிழ் அவரிடம் புதிய மெருகு பெற்றது : வளம் பெற்றது. இந்தப் பின்னணியில் வள்ளலாரின் திரு அருட்பாவை மதிப்பீடு செய்வது அவர் வாழ்ந்த சமூகத்துக்கு அவர் ஈந்த கொடையை முழுவதுமாக அறியத் துணை செய்யும்.

**மூன்று பண்புகள் :**

சமுதாயத்துக்கு ஒரு புதிய விழிப்புணர்வை ஊட்டும் ஆற்றல் இலக்கியத்துக்கு உண்டு. அத்தகைய மறுமலர்ச்சிக்கு மூன்று முதன்மைப் பண்புகள் இருக்கும் என்று வையாபுரிப்பிள்ளை வரையறுக்கிறார். (தமிழின் மறுமலர்ச்சி, ப : 129) அவை அறிவுத்தாகம், விடுதலைத் தாகம், மக்கள் நலநாட்டம் என்பவையாகும்.

அறிவுத்தாகம் அருட்பாவில் மிகுதியும் இருப்பது முன்னர்ச் சமூகம் என்னும் பகுதியில் சுட்டப்பட்டது. பழைய கருத்துக்களில் காலத்துக்கும் அறிவுக்கும் ஒவ்வாதவற்றை அவர் ஏற்க மறுத்தார்.

தனிமனிதனுக்கான ஒழுக்கநெறியிலிருந்து தெய்வ வழிபாடு வரை அறிவுக்கேற்ற வகையில் சில புதிய கருத்துக்களை அவர் கூறினார். சில புரட்சி மிக்கதாகவே இருந்தன. "*சமய உலகில் மட்டுமின்றிக் கவிதையுலகிலும் பண்பாட்டுலகிலும் மாபெரும் புரட்சி செய்து தமிழ் மக்களைத் தட்டி எழுப்பினார்*" என அ.சா. ஞானசம்பந்தம் கூறுவது மெய்தான். (இன்றைய இலக்கியம், ப : 18)

அவருடைய அறிவுத்தாகத்துக்கு அக்காலக் கல்விமுறை, ஈடுகொடுக்க முடியவில்லை. ஆசிரியரின் அறிவை மட்டும் அளவுகோலாய் வைத்து மாணவனுக்குக் கற்பிக்கும் வழக்கம் காலத்துக்கு ஒவ்வாதது. மாணவருடைய அறிவு நிலைக்கேற்ப ஆசிரியர்கள் உயர வேண்டும் என்ற கோட்பாட்டை அவர் வாழ்க்கையில் காண்கிறோம். ஆதலால்தான் ஓர் ஆசிரியரிடம் போய் அவரால் கற்க முடியாது போயிற்று. மாணவனாக வந்து ஆசிரியராக இருந்த பாரதியைப் பாடாய்ப்படுத்திய கண்ணனைப் பற்றிக் கண்ணன் பாட்டு கூறுகிறது. ஏற்கெனவே நீருள்ள கேணியில் மணலைத் தோண்டுவதே ஆசிரியன் பணி எனக் குறள் நுட்பமாகக் குறிப்பிடும்.

"*தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்*
*கற்றனைத் தூறும் அறிவு*"

அறிவு எல்லாரிடமும் உண்டு, நீர் எல்லா இடத்திலும் இருப்பது போல. அந்த அறிவை வெளிப்படுத்தத் தக்க ஆசிரியர் வேண்டும். வள்ளலாருக்கு நீரூற்று பொங்கி எழுவது போல, பிறர் துணையின்றி அது தானாக வெளிப்பட்டது. ஒரு தாகத்தோடு - அறிவுத்தாகத்தோடு - அவர் அருட்பா மலர்ந்தது.

ஆனாலும் தாமாகவே பல நூல்களை அவர் ஆழமாகக் கற்றுள்ளார். வியாக்கியானங்கள், உபதேசங்கள் உரைகள் இவற்றில் அவர் காட்டியுள்ள பல மேற்கோள்கள் அவர் பெற்றிருந்த பன்னூலறிவைக் காட்டுகின்றன. தேவார, திருவாசக, திருக்குறள் தொடர்கள் அருட்பாவில் பல இடங்களில் பயின்று வருகின்றன. "படித்த சமயச் சாத்திரமும் பலரால் செய்த தோத்திரமும் விரவிக் களித்து" என அவரே தம் கல்வியைப் பற்றிக் கூறுகிறார். சில நூல்கள் பயனற்றவையாக இருந்திருக்கும் போலும்! "கற்ற பொய்ந்நூல்கள் கணத்தே மறைந்தன" என்பது அவர் முடிவு. ஆதலால்தான் மெய்ந்நூலாக, அறிவுத் தாகம் மிக்கதாக அருட்பாவை இயற்றினார்.

இரண்டாம் பண்பாகிய விடுதலைத் தாகம் அருட்பாவில் அதிகம் இல்லை. பொதுவாக விடுதலை என்னும் சொல் அரசியல் சார்ந்தது. வள்ளலார் நாளில் அரசியல் எழுச்சி இல்லை : அது சார்ந்த இயக்கமும் இல்லை. 1857இல் வடநாட்டில் நடந்த முதல் விடுதலைப் போராகிய சிப்பாய்க் கலகம் தெற்கில் பெரிய விளைவை ஏற்படுத்தவில்லை. அதற்கு முன்னர் தமிழகத்தில் 1807இல் நடந்த வேலூர்க் கலவரமும் விடுதலை நோக்கம் கொண்டதன்று. ஆதலால் விடுதலைத் தாகம் 19ஆம் நூற்றாண்டில் அதிக இடம்பெறவில்லை. வள்ளலார் அல்லாமல் பிற புலவரும் கூட விடுதலை பற்றிப் பாடவில்லை.

ஆனால் வள்ளலார் பாடலில் அரசியல் கொடுமையால் மக்கள் பட்ட துன்பங்களை உருக்கமாகவே பாடியிருக்கிறார். அவர்களுக்கு விடுதலை வேண்டும் : நல்லவர்கள் ஆள வரவேண்டும் என்ற சிந்தனை அவருக்கு இருந்தது. “கருணையிலா ஆட்சி கடுகி ஒழிக” என்றும் “அருள்நிறைந்த சன்மார்க்கர் ஆள்க” என்றும் வரும் பாடல்வரிகள் மக்கள் விடுதலை பெறவேண்டும் என்ற அவருடைய தாகத்தைக் காட்டும்.

“*நடுநிலை இல்லாக் கூட்டத்தைக்*
*கருணை நண்ணிடா அரையரை நாளும்*
*கெடுநிலை நினைக்கும் சிற்றதிகாரக் கேடரை*”

என்று (3474) சற்றுக் கடுமையாகவே மக்களைத் துன்புறுத்திய அரசு அலுவலர்களைச் சாடியுள்ளார். “கருணையிலா ஆட்சி” என்று அவர் குறிப்பது பாளையக்காரர்கள், பெருநிலக்கிழார்கள் போன்றவர்களுடைய ஆட்சியைத் தான். ஆனாலும் அரசியல் விடுதலை பற்றிய எண்ண ஓட்டங்களை, ஒரு நல்ல ஆட்சியாளன் எப்படியிருக்க வேண்டும் என்ற இலக்கணத்தை மனுமுறை கண்ட வாசகத்தில்விரிவாகவே எழுதியுள்ளார்.

மூன்றாவது பண்பாகிய மக்கள் நல நாட்டம் அருட்பாவின் உயிர்நாடி எனல் தகும். எல்லா உயிர்களின் நலத்தையும் நாடி அவர் உருகிக் கனிந்தார். பிறருக்காக, பிறவுயிர்த் துன்ப நீக்கத்துக்காக மனித வாழ்வு இருக்க வேண்டும் என வலியுறுத்தினார். பிள்ளைச் சிறு விண்ணப்பமும், பிள்ளைப்பெருவிண்ணப்பமும் மக்கள் நலனுக்காக அவர் உருகியதைத் தெளிவாக மெய்ப்பிக்கும்.

"........... *பிறர்க்கு*
*நைபிழை உளதேல் நவின்றிடேன் பிறர்பால்*
*நண்ணிய கருணையால் பலவே*
*கைபிழையாமை கருதுகின்றேன்*" (3389)

என்ற பாட்டில் பிறர் மனம் நோகப் பேசவும் அஞ்சிய மனம் புலப்படுகிறது. மற்றவர் மீது கொண்ட அன்பால் தவறு நிகழக்கூடாது என்ற விழிப்பாக அவர் இருந்தார். இன்னார்க்கும் இனிய செய்யவே அவர் விரும்பினார்.

"....... *என்னோடு பழகியும் எனைத்தான்*
*எண்ணியும் நண்ணியும் பின்னர்*
*விலகிய மாந்தர் அனைவரும்*
*இங்கே மெய்யுறக் கூடி நின்று*" (3404)

ஒன்றாகவே அவர் விரும்பினார். "அகத்தே கறுத்துப் புறத்து வெளுத்திருந்த உலகர் சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்தடைவித்திட அவரும் இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்திட" (5485) வேண்டும் என்பதே அவர் குறிக்கோளாயிருந்தது. இம்மண்ணிலேயே எல்லோரும் விண்ணின் இன்பத்தை அடைய வேண்டும் என்பதே இப்பாட்டின் அடிக்கருத்து. "பாட்டுத் திறத்தாலே இவ்வையத்தைப் பாலித்திட வேண்டும்" என்று வள்ளலார் வழி வந்த பாரதி பின்னால் சூளுரைக்கிறார்.

"*எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல்*
*வேறொன்றறியேன் பராபரமே*"

என்று தாயுமானவர் பாடி மகிழ்ந்தார். அந்த வாழையடி மரபில் தோன்றிய வள்ளலார்

"*எற்றே அடியேன் செய்தவம்*
*யாரே புரிந்தார் இன்னமுது*
*உற்றே உலகீர் நீவிர் எலாம்*
*வாழ்க வாழ்க துனியற்றே*" (5486)

என்று மங்கல வாழ்த்தே மக்களுக்காகப் பாடுகிறார். அவர்கள் மீது அவர் வைத்திருந்த பற்று அத்தகையது. "மலங்கழித்து உலகவர் வானவர் ஆயினர்" என்று அவர் கொண்ட மகிழ்ச்சி நிறைவேற வேண்டும். வள்ளலார் பாடல்கள் தமிழிலக்கிய உலகில் நிலையான இடம் பெற்றதற்கு இந்த உலகளாவும் பேரன்பே காரணம் என அறிஞர்கள் குறிப்பதும் எண்ணத்தகும். (K.R. Srinivasa Iyengar, p : 132)

**இலக்கியக் கூறுகள் :**

இப்படி, அறிவுத் தாகம் விடுதலைத் தாகம், மக்கள் நலநாட்டம் ஆகிய மூன்று பண்புகளைக் கொண்ட மறுமலர்ச்சி அருட்பா பேரிலக்கியமானதற்கு இவை மட்டும் காரணங்கள் அல்ல : வேறுசில இலக்கியப் பண்புகளும் அடிப்படையாகும். வடிவம், யாப்பு, நடை போன்ற அவை புதிய திருப்பத்தைத் தமிழ்மொழிக்கும் இலக்கியத்துக்கும் தந்தன. அவையும் கூர்ந்து காணத் தக்கவை.

19ஆம் நூற்றாண்டில் தமிழிலக்கியம், கற்றவர் சிலராலே காக்கப்பட்டு வந்தது : "குரு குலவாசம்" செய்து அங்கங்கு பெரும் புலவர்களிடம் சிலர் தமிழ் கற்று வந்தனர். சிற்றிலக்கியங்கள், சமயத் தொடர்பான நூல்கள், அவை ஒட்டிய வாதங்கள், மறுப்புரைகள் எனத் தமிழ் ஒரு குழப்பமிக்க நிலையில் இருந்தது. பொதுமக்களிடம் இந்த இலக்கியங்கள் போய்ச் சேரவில்லை. அவர்கள் தங்கள் விருப்பு வெறுப்புக்களை நாட்டுப் பாடல்களாகப் பாடி வைத்தனர். அன்றைய சூழலில் தமிழிலக்கியத்தை அழியாமல் காப்பாற்றியது இந்த நாட்டுப் பாடல்களே என ஒரு கருத்தை முன்வைத்து,

**"கற்ற புலவர்களிடமிருந்து விலகிப் பொதுமக்களிடம் இருந்த இலக்கியத்தில் உயிர்த்துடிப்பைக் கண்டவர்கள் அன்று இருவரே: ஒருவர் கோபால கிருஷ்ண பாரதியார் : மற்றவர் இராமலிங்க அடிகள்"** என்று முடிவு கூறுகிறார் அ.சீனிவாசராகவன். (ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை, ப : 8). தமிழிலக்கியத்தின் உயிர்த்துடிப்பைக் காண வள்ளலார் துணிவாகப் புதிய வடிவங்களைப் பாடலில் கையாண்டார். எல்லாத் திறனாய்வாளர்களும் இந்தப் புதியன படைத்த அவராற்றலைப் பாராட்டியுள்ளனர்.

வடிவத்தில் முதலிடம் பெறுவது யாப்பு. 29 வகை யாப்பு வடிவங்கள் அருட்பாவில் உள்ளதாக ஊரன் அடிகள் குறிக்கிறார். (திருஅருட்பா, ப : 68) விருத்த வகையாக 3366 பாடல்கள் உள்ளன. அறுசீர்விருத்தம் தொடங்கி 192 சீர்க் கழிநெடிலடி விருத்தம் வரை இது நீள்கிறது.

விருத்தம் சங்க காலத்துக்குப் பின் நாயன்மார்களும் ஆழ்வார்களும் பக்தி இயக்கத்துக்குப் பயன்படுத்திய வடிவம்.

ஆங்கிலேய ஆட்சியின்போது தனி ஒருவராக இந்த இயக்கத்தைத் தமிழகத்தில் நடத்திய வள்ளலாருக்கு இது திறன்மிக்க கருவியாகப் பயன்பட்டது. சீர் வரையறையில்லாததால் புதிய பாவினங்கள் தோன்ற இந்த யாப்பு துணை செய்யும் : உணர்ச்சிக்கேற்ற ஓசை பிறக்க வாய்ப்பு நல்கும். (மு.வ, தமிழிலக்கிய வரலாறு, ப : 22) தமிழிலக்கிய வரலாற்றில் செய்யுள் பிரிவில் விருத்தத்துக்குத் தனியிடமே உண்டு.

கும்மி, கண்ணி, சிந்து, கீர்த்தனை எனப் பல புதிய வடிவங்கள் அருட்பாவில் உள்ளன. மொத்தம் 1011 பாடல்கள் இவ்வகையின. மொத்தப் பாடல்களில் இது ஏறக்குறைய ஐந்தில் ஒரு பங்கு ; அக்காலச் சூழலில் - சிற்றிலக்கியங்கள் மலிந்திருந்த நாளில் - அரிய படைப்பாகும். நாட்டுப்புற இலக்கிய வடிவங்களைப் போற்றிக் காத்து அதே மொழியில் பாடிய பெருமை சித்தர்களுக்கு உண்டு. படிப்பதற்காக மட்டுமல்லாமல் பாடுவதற்கும் ஏற்ற இசைவடிவங்கள் இவை. கண்ணி வடிவம் ஈரடியாலானது : உலாப் பாடல்களில் வருவது அதைப் பிரித்து எடுத்துப் பக்தியிலக்கியத்தில் வளர்த்தவர் தாயுமானவர். அதை மறுமலர்ச்சியுடன் நிலைபெறச் செய்தவர் வள்ளலார்.

இசையும் பாட்டும் இணைந்த இந்தக் கண்ணி, கும்மி போன்ற யாப்பு வடிவங்கள் உணர்ச்சிக்கேற்பச் சொல்லாட்சி பெற்றுப் படிப்போரையும் கேட்போரையும் ஈர்க்கும் ஆற்றலைப் பெற்றுள்ளன. அவற்றின் வழியே புதிய கருத்துக்களையும் உணர்ச்சிகளையும் எளிதாக வெளிவிட முடிகிறது. உணர்ச்சி வெளிப்பாட்டுக்குத் தடைநேரின் வள்ளலார் இலக்கண மரபை மீறவும் தயங்கவில்லை.

> "*உலகியல் உணர்வோடு அணுத்துணை யேனும்*
> *உற்றிலாச் சிறியனோ் பருவத்து*" (3226)

என்று தொடங்கும் பாடல் சம்பந்தர் பற்றியது. வள்ளலார் இதில் ஐந்தடிகள் அமைத்துள்ளார் : ஐந்தடிகொண்ட எழுசீர் விருத்தம். அவர் கையெழுத்துப் படியில் ஐந்தடிகளே உள்ளன. ஆனால் பதிப்பாசிரியர்கள் ஓரடியை - நான்காம் அடியை - நீக்கிப் பதிப்பித்துள்ளார்கள். "வள்ளலார் கையெழுத்து மூலங்களில் அடித்தல், திருத்தல் உண்டு என்றும் பாடும் வேகத்தில் இதை அடிக்காதுவிட்டார் போலும்" என ஊரன் அடிகள் கூறுவது ஏற்கத் தக்கதாயில்லை (அருட்பா : 3226). நான்கடிக்கு மேல் வந்த

பாட்டு சம்பந்தர் தேவாரத்திலும் உண்டு. "நாலடிமேல் வைப்பு" என்று உரையாசிரியர்கள் அத்தகைய பாடலைச் சொல்வர். "மாதர் பிறைக் கண்ணியானை" என்று வரும் அப்பர் பாடலும் அது போன்றதே. இலக்கணமும் அடிவரையறையும் பாட்டுக்கு வேண்டும் ; அவற்றைவிடக் கருத்து வெளிப்பாடும் உணர்ச்சியும் முதன்மையானவை. ஆதலால் தம் உள்ளத்துணர்ச்சி முழுதும் வெளிப்பட்ட பாட்டை அப்படியே ஐந்து வரிகளுடன் அவர் எழுதி வைத்தார் என்பதே பொருந்தும்.

"குறவர் குடிசை நுழைந்தாண்டி"; "கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி" என வரும் கும்மிப்பாட்டுக்கள் இலக்கிய வாழ்வு பெற்றவை.

சண்முகர் வருகைச் சிந்து மூன்றடிகளால் ஆகி இரண்டாம் மூன்றாம் அடிகள் பின்னிவந்து பொலிவூட்டுகின்றன.

"*வாரும் வாரும் தெய்வ வடிவேல் முருகரே*
*வள்ளி மணாளரே வாரும்*
*புள்ளி மயிலோரே வாரும்*"

முதலடியில் நான்கு சீர்கள் : பின்னிரண்டடிகளில் மூன்றே சீர்கள். சிந்து வடிவப் பாட்டு இது. கூட்டாகப் பாடுவதற்கு மிகவும் ஏற்றது.

நான்காம் திருமுறையில் உள்ள பாங்கிமார் கண்ணி, வெண்ணிலாக் கண்ணி இரண்டும் அகத்துறையில் அமைந்தன.

"*ஆடுகின்ற சேவடிமேல் பாங்கிமாரே - மிக*
*ஆசை கொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே*"

என்றும்

"*ஆருமறியாமல் இங்கே வெண்ணிலாவே - அரு*
*ளாளர் வருவாரோ சொல்லாய் வெண்ணிலாவே*"

என்றும் வரும் பாடல்களில் பக்திக் காதலியின் ஏக்கப் பெருமூச்சைக் கேட்கலாம். "கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ" எனக் கேட்ட ஆண்டாள் தலைவி நினைவுக்கு வருகிறாள். இந்தக் கண்ணி வடிவம் தாயுமானவர் பாடலில் அகத்துறையில் வருகிறது. அவரைப் பின்பற்றும் வள்ளலாருக்கு அது இயல்பாகவே கைவந்தது.

"*இன்னும் தயவு வரவிலையா - உனக்கென் மீதில்*
*என்ன வர்மம் சொலையா*

*தன்னை அறியாளென்னை இன்னலுறச் செய்தாயே*
*தகுமோ தகுமோ தகுமோ"* (2986)

என்ற பாட்டில் கண்ணிதோறும் இரண்டாம் அடியில் ஒரே சொல் மும்முறை அடுக்கி வந்து உள்ளத்தை உருக்குகிறது.

"அருட்காட்சிப் பதிகம்" சிந்து வகையில் நான்கு பாடல்கள் கொண்டது. ஒவ்வொன்றிலும் மூன்று வரிகள். முதல் அடியில் நான்கு சீர்கள் : இரண்டாம் அடியில் மூன்று சீர்கள் : மூன்றாம் அடியில் இரண்டாம் அடியின் முதல் இரு சீர்களே மீண்டும் வருகின்றன.

*"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்*
*மயில் குயிலாச்சுதடி - அக்கச்சி*
*மயில் குயிலாச்சுதடி"* (494)

என்பது ஒரு சான்று. அவருடைய ஞானநிலை மணிமுடிப்பாட்டு இது. ஆனால் மிக எளிமையான சொற்களில் எல்லாரும் பாடும் வகையில் இந்த வடிவத்தைக் கையாண்டு வெற்றி பெற்றுள்ளார். மனத்துள்ளலை விடு, அருட்சோதியைக் காணலாம் : பொய்யை ஒழித்துப் புறப்படு, மன்றாடும் ஐயரைக் காணலாம் எனத் தாம் கண்ட வழியைக் கூறி மயிலைக் குயிலாக்கும் வித்தையைச் சொல்கிறார். மக்கள் வாயில் இது போன்ற பாடல்கள் நாட்டுப்புற இலக்கியமாக நிலைபேறு பெறும் என்பதில் ஐயமில்லை.

ஆணிப் பொன்னம்பலக் காட்சிப் பாடல்இதே போல வடிவம் கொண்டது. மேற்பாட்டில் அக்கச்சி என்னும் சொல் இரண்டாம், மூன்றாம் அடியை இணைத்தது. இங்கு அம்மா என்ற சொல் வியப்பிடைச் சொல்லாக வருகிறது. தான் கண்ட காட்சி முழுவதையும் சொல்ல முடியாமல் தவிக்கும் தலைவியின் ஆற்றாமைக் குரலை இதனுள் கேட்கலாம் : 32 கண்ணிகள் : ஒரு ஆன்மிக இன்பப் பயணம் : வழியில் இடையிடையே பல தடைகள் : முடிவில் அம்மை அருளால், இறையின்பம் கிடைக்கிறது. அதைச் சொல்ல இயலவில்லை எனத் தலைவி சொல்லோவியம் தீட்டுகிறாள்.

*"ஆணிப்பொன் அம்பலத்தே கண்ட காட்சிகள்*
*அற்புதக் காட்சியடி - அம்மா*
*அற்புதக் காட்சியடி*

*சந்நிதியில் சென்று நான் பெற்ற பேறு*
*சாமி அறிவாரடி - அம்மா*
*சாமி அறிவாரடி"* (4946)

தொடர்ந்து பாடிவந்தால், பாட்டு முடிந்தது கூடத் தெரியாமல் "சாமி அறிவாரடி" என்னும் தொடரைத் திரும்பத் திரும்பப் பாடிக்கொண்டே இருக்கும் வண்ணம் இன்பத்தில் ஆழ்த்துகிறது. ஆன்மத் துய்ப்பை இப்படிக் குறிப்புப் பொருளில் சித்தரும் பாடினர். ஆனால் தொடர்ச்சியாக ஒரு பயணத்தை முடிக்கும் அனுபவம் இதனுள் மட்டுமே ஏற்படுகிறது.

வள்ளலார் இப்படி யாப்பு வடிவத்தில் பலப்பல நுட்பங்களைக் கையாண்டு பழையவற்றை மலரச் செய்ததும் உண்டு : புதியன படைத்ததும் உண்டு : பாமரத் தன்மை ஊட்டியதும் உண்டு. அது ...... அது ..... அருட்பாவின் எளிமைக்கு இலக்கணம்.

**சொல்லாட்சி :**

உணர்ச்சிக்கு ஏற்பப் பாட்டில் சொற்களை அமைப்பது சிறந்த கவிஞனின் சிறந்த படைப்பாற்றலைக் காட்டும். தாமாகவே சொற்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து அமைந்து பாடுவோரின் உள்ளத்து முதிர்ச்சியையும் அறிவுத் திறத்தையும் வெளிப்படுத்தும். அதனால்தான் இத்தகைய ஆற்றலுடையோரைத் திருவள்ளுவர் "சொல்லேர் உழவர்" எனக் குறிக்கிறார்.

அருட்பாவில் இந்தச் சொல்லாட்சி நூல்முழுவதிலுமே உள்ளது.

"வாடிய பயிரைக் கண்டு வாடினேன்" என்று தொடங்கும் அருட்பா நாடறிந்த ஒன்று. வாடிய பயிர், நீடிய பிணி, ஈடில் மானிகள் என அடியின் தொடக்கத்தில் சொற்கள் வந்து படிப்போர் நெஞ்சைக் கரைக்கின்றன. "வாழையடி வாழையென" என்ற பாடலில்

"ஏழைபடும்பாடு உனக்குத் திருவுளச் சம்மதமோ
இது தகுமோ இது முறையோ இது தருமந் தானோ"

என்ற இரண்டாமடியில் இறைவன் தனக்குக் கருணை காட்டாததை எண்ணி முறையீடு செய்யும் அவருடைய கழிவிரக்கத்தை உணரலாம். இது தகாது : இது முறையுமன்று : இது தருமமும் ஆகாது, என்ற அவருடைய கையறுநிலை வெளிப்படுகிறது. இதற்கு நேர்மாறாகத் தாம் அருளின்பம் பெற்றபின், துன்பம் நீங்கியபின் அந்த மனநிலையை மக்களுக்குச் சொல்ல வேண்டும் என்று ஒரு வேகம் பீறிடுகிறது. அதற்கேற்பச் சொற்கள் அமைகின்றன.

*"சனிதொலைந்தது தடைதவிர்ந்தது தயைமிகுந்தது*
*சலமொடே*
*துனிதொலைந்தது சுமைதவிர்ந்தது சுபமிகுந்தது சுகமொடே*
*கனிஎதிர்ந்தது களைதவிர்ந்தது களிமிகுந்தது கனிவொடே*
*புனிதமன்றிறை நடமலிந்தது புகழ்உயர்ந்தது புவியிலே"*
(5434)

துன்பமாகிய சனி நீங்கி இன்ப அருளாட்சி மலர்ந்த செய்தியை உலகோர்க்குச் சொல்ல, "தொலைந்தது தவிர்ந்தது" என்று துன்பத்துக்கும், "மிகுந்தது மலிந்தது" என்று இன்பத்துக்கும் ஆன சொற்கள் அமைந்து பொலிகின்றன.

*"கற்பூரம் மணக்கின்றது என்னுடம்பு முழுதும்*
*கணவர்திரு மேனியிலே கலந்த மணம் அதுதான்*
*இற்பூத மணம்போல மறைவதன்று கண்டாய்*
*இயற்கை மணம் துரியநிலை இறைவடிவத் துளதே"*

என்னும் பாடலில் (5723) அடிதோறும் மணம் என்ற சொல் திரும்பத் திரும்பப் பயின்றுவந்து படிப்போர் மனத்தில் தெய்வ மணம் கமழச் செய்கிறது.

*"பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும்*
*படிக்கப் பக்கநின்று கேட்டாலும்"* (4115)

இனிக்கின்ற பாடலில் ஒவ்வொரு சொல்லின் இறுதியிலும் "உம்" எனும் விழுமிய ஓசை அமைந்து நெஞ்சம் இறையருளில் தோய்ந்து ஐந்து பேரறிவும் ஒன்றாகிச் செயலற்று நிற்கும் நிலையைக் காட்டுகிறது. அதே போலப் பலரும் அறிந்த, "அப்பா நான் வேண்டுதல் கேட்டருளல் வேண்டும்" என்னும் பாட்டில் அடி தோறும் ஈற்றில் "வேண்டும்" என்னும் சொல் நிறைந்து எளிமையில் தோயச் செய்கிறது. குழந்தைகள் கூட, எளிய மக்கள் கூட விரும்பிப் படிக்கும் வண்ணம் சொல்லாட்சி இனிமை, ஒலிநயம், திரும்பக் கூறல் எனும் தன்மைகளுடன் அமைவது கண்கூடு.

"பெற்ற தாய்தனை மகன் மறந்தாலும்" எனும் பாட்டில் இதேபோல "மறந்தாலும்" என்னும் சொல் பயின்று வருகிறது. இத்தனை நடந்தாலும் "நமசிவாயத்தை" நான் மறவேன் என்னும் வள்ளலாரின் குன்றொத்த உறைப்பு இதனுள் பொதிந்துள்ளது.

*"நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து*
*நெகிழ்ந்து"*

என்ற பாடலில் சொற்கள் இரட்டித்து வந்து கருத்தை வலியுறுத்துவதோடு அவருடைய உணர்ச்சியை அழுத்தமாகவும் புரியவைக்கின்றன.

இவை ஒருபுறம். சமுதாயச் சிறுமைகளைக் கண்ட போதும், துன்புறுவோரைப் பார்த்து மற்றவர் இரங்காத போதும் அவருள்ளே சினம் பொங்கி எழுந்திருக்கிறது. அந்த உணர்ச்சி பாடலாகும்போது அதற்கேற்பச் சொற்கள் கடுமையாகவும் வேகமாகவும் வெளிவந்தன.

*"கட்டோடே கனத்தோடே வாழ்கின்றோம் என்பீர்*
*கண்ணோடே கருத்தோடே கருத்தனைக் கருதீர்*
*பட்டோடே பணியோடே திரிகின்றீர் தெருவில்*
*பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்*
*கொட்டோடே முழக்கோடே கோலம் காண்கின்றீர்*
*குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்*
*எட்டோடே இரண்டுசேர்த்து எண்ணவும் அறியீர்*
*எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே"* (5556)

*"வட்டிமேல் வட்டிகொள் மார்க்கத்தில் நின்றீர்*
*வட்டியை வளர்க்கின்ற மார்க்கத்தை அறிவீர்*
*பெட்டிமேல் பெட்டிவைத் தாள்கின்றீர் வயிற்றுப்*
*பெட்டியை நிரப்பிக் கொண்டு ஓட்டியுள் இருந்தீர்"*
(5561)

மேற்கண்ட பாடல்கள் நல்ல சான்றுகள். அமைதியே வடிவான, அன்பின் உருவமாக, அருளின் வெளிப்பாடாக வாழ்ந்த வள்ளற்பெருமானின் உள்ளக்குமுறலை இவற்றுள் கேட்கலாம். ஒவ்வொரு சொல்லும் அவருடைய அறச்சீற்றத்தைக் காட்டுகிறது. "சிறுமை கண்டு பொங்குவாய் வா வா வா" எனப் பாரதி அழைத்தான். பித்துலகத்தவர் சிறுமைகளை வள்ளலார் சொற்களால் சாடினார். இதே போலப் பிறருக்கு ஈந்துண்டு வாழாதாரைக் கடையர், வஞ்சர், உலுத்தர், புலையர், ஈனர் என்பன போல கடுஞ்சொற்களால் குறித்துள்ளார். இறை மறுப்பாளர்களை - "நாத்திகம் பேசி நாத்தழும் பேறி"யவர்களையும் வன்சொற்களால் இரக்கமின்றி ஏசினார். "நல்ல நீறிடா நாய்கள்" "இனிய நீறிடா ஈனநாய்ப் புலையர்" என்பன சில. தனிப்பட்ட கோபமல்ல இது : சமுதாய நலம் கருதியது என்பதை மறந்துவிடக் கூடாது.

வள்ளற்பெருமான் தம் காலத்துச் சூழலை, இலக்கியப் போக்கை மறக்கவில்லை. யமகம், திரிபு, மடக்கு, சித்திரகவி எனத் திறமிக்க, மருட்கையூட்டும் பாடல்களைப் பாடுவோரே தமிழ்ப்புலவர் என மதித்த காலம். அப்படியும் தம்மால் பாட முடியும் என்று மெய்ப்பிப்பதற்காகச் சில பாடல்களை அவர் பாடியுள்ளார்.

> "*ஆவியீ ரைந்தை அபரத்தே வைத்தோதில்*
> *ஆவியீ ரைந்தை அகற்றலாம் - ஆவியீ*
> *ரைந்துறலாம் ஆவியீ ரைந்தறலாம் ஆவியீ*
> *ரைந்திடலாம் ஓரிரண்டோடு ஆய்ந்து*" (2785)

இது ஒரு சான்று. இது போன்ற பாடல்களின் பொருளை உணர்வது கற்றவர்க்குக் கூட எளிதாயில்லை. இவை அவருடைய புலமைத் திறத்தைக் காட்டுகின்றன. ஆனால் கலையழகை இழந்த செயற்கை நிலைப் பாட்டுக்கள், ஒட்டுமொழி விளையாட்டுக்கள், பொருட்செறிவற்ற சொல்சாலங்கள் என்றே இவற்றைச் சொல்ல வேண்டும். பொருள் நலமற்ற, சொல் நலம் மட்டுமே கொண்ட இத்தகைய பாடல்களைப் பரிதிமால் கலைஞர் "உயிரில்லாப் பாட்டுக்கள்" என்று கூறுவார். (மேற்கோள், "இலக்கியத்திறன்", மு.வ, ப : 237). அவர் மேலும் கலை எதுவாயினும், பிறருக்குப் பயன்படுவது, பயன்படுத்துவது என்பதே நோக்கம். அந்த முதன்மைப் பண்பு இல்லாத பாடல்கள் பாடுவோர் படிப்போர்ஆகிய இருவர் காலத்தையும் வீணாக்கும் என்பார். (ப : 218)

இது மெய்யே. அருட்பா பதிப்பாளர்களில் ஒருவர் மணி திருநாவுக்கரசு முதலியார். வள்ளலாருடன் பழகிய பூவை. கலியாண சுந்தரனாரின் மாணவர். வள்ளலார் உலகிற்குத் தெரியக் காரணமான நூல்கள் எழுதியவர். அவரே, தம் பதிப்புரையில்

> "*வள்ளலார் வேடிக்கையாக அப்படிச் சொற்களை அமைப்பதில் வல்லவர். விநோதரசம் இவர் பாடல்களில் உள்ளது. இதனால் சிற்சில இடங்களில் இடக்குச் சொற்களைப் பெய்துரைத்துவிட்டார். பொருட் பொலிவும் இதனால் பொலிவிழந்தது*" *என்று எழுதி வருந்துகிறார்.* (முன்னுரை ப:4)

அவர் வள்ளலாரைக் குறைகூற இதை எழுதவில்லை. உயர்ந்த அருள்ஞான நூலில் இப்படி நிகழ்ந்துவிட்டதே என்ற கழிவிரக்கமே காரணம்.

இன்னொரு ஐயமும் உண்டு. இது போன்ற பாடல்கள் முதல் ஐந்து திருமுறைகளுக்குள் தான் வருகின்றன. ஆறாம் திருமுறையில் இவை இல்லை. தொடக்க காலத்தில் பிறருடைய புலமைச் செருக்கை அறுக்க அவர் இப்படிப் பாடியிருக்கலாம். தவிர, அவை வள்ளலார் கையெழுத்துப் படியில் இல்லை என்றும், அன்பர்கள் எழுதி வைத்த சிலவற்றில் மட்டுமே உள்ளதாகவும் பாலகிருஷ்ணபிள்ளை குறிக்கிறார் (VI : 30,31) வடலூரில் அவருடன் இருந்த சிலர் இதுபோன்று பாடியுள்ளனர். திறமையுடன் அதை இணைத்திருக்கலாம் என்றும் அவர் ஐயப்படுகிறார்.

எப்படியாயினும், அருளே ஊற்றாக, அருளே உயிராக, அருளே உணர்வாக, அருளே மூச்சாக இருந்த வள்ளலார் பாட்டில் - அவர் பாடியிருந்தால் - அது ஒரு குறையே. முன்பு சொன்னதுபோலஅது காலத்தின் கட்டாயம் என்றே முடிவு கொள்ள வேண்டும்.

அருட்பாவின் நடை பற்றி ஒரு கருத்து நோக்கத்தக்கது. ஒரு பாட்டைப் படிக்கும் போது அதை எழுதிய கவிஞனின் குரல் கேட்கும் : கேட்க வேண்டும். அந்தக் குரலே கவிஞனுடைய நடை. (மு.வ, தமிழ் இலக்கிய வரலாறு ப : 237) உணர்ச்சிகள் மாறலாம் : அவற்றுக்கேற்பச் சொற்கள் மாறலாம் : அந்தச் சொற்கள் யாப்பு வடிவங்களை மாற்றலாம். ஆனாலும் கவிஞன் மொழிநடை மாறாது. மற்றவை உடை போன்றவை ; நடை உயிர் போன்றது.

"திரு ஓங்கு புண்ணியர் செயல் ஓங்கி அன்பருள்" என்ற தொடங்கும் தெய்வமணிமாலைப் பாடலிலிருந்து "அறியாத பருவத்தே என்னை வலிந்தழைத்தே ஆடல் செயும் திருவடிக்கே பாடல் செயப் பணித்தார்" என்றுள்ள அனுபவமாலைப் பாடல் முடிய அருட்பா முழுதும் வள்ளலாரின் குரல் உள்ளார்ந்து ஒலித்துக் கொண்டே இருக்கிறது. உணர்ச்சிக்கேற்ற சொற்கள் அவருடைய நடைக்கு ஒரு வீறு தருகின்றன. தத்துவக் கருத்துக்களுக்குச் சமஸ்கிருதம் கலந்த நடை : இங்கித மாலை, அனுபவமாலை பாடும்போது பெண்மைக் குணம் தழுவிய மென்மை நடை ; சமூகக் கேடுகளையும் மூடநம்பிக்கைகளையும் எதிர்க்கும்போது வேகமிக்க ஆற்றல் நடை என அது அமைந்தாலும் வள்ளலாரின் ஒலிக்கும் குரல் அடிநாதமாக இழையோடுகிறது.

பாரதிக்கு உள்ள சிறப்புப் பெயர்கள் பலவற்றுள் மறுமலர்ச்சிக் கவிஞன் என்பதும் ஒன்று. அவர் தமிழுக்கு ஆற்றிய பணிகள் நாடறிந்தன. "பாஞ்சாலி சபதம்" காவியத்துக்கு முன்னுரை எழுதிய போது ***"எளிய பதங்கள், எளிய நடை, எளிதில் அறிந்துகொள்ளக் கூடிய சந்தம், பொது ஜனங்கள் விரும்பும் மெட்டு இவற்றினையுடைய காவியம் ஒன்று தற்காலத்தில் செய்து தருவோன் தாய்மொழிக்கு புதிய உயிர் தருவோன் ஆகின்றான்"*** என்று பாரதி கூறியுள்ளார். தம்முடைய நூலுக்கு இது பொருந்தும் என்ற உள்நோக்கு அதனுள் இருந்தாலும் இந்த இலக்கணம் முழுதும் வள்ளலாரின் அருட்பாவுக்கு அப்படியே பொருந்தும். காவியத்துக்குச் சொன்னது பாட்டுக்கும். இசையும் சொற்களில் எளிமையும் எல்லா அருட்பாக்களிலும் காணக்கிடப்பது. சந்தம் இசைப் பாடல்களில் கேட்பது. மக்கள் விரும்பும் மெட்டு கீர்த்தனைகளில் அமைந்தது. இப்படித் தமிழுக்கு, தமிழ் இலக்கியத்துக்கு ஒரு திருப்பு முனையை ஏற்படுத்தியவர் வள்ளலார். கைலாசபதி பாரதிபற்றி எழுதும்போது, எளிமையைப் படைத்தவர் என்றும், பழகு தமிழின் மரபில் வந்த எளிமை, இனிமை இவற்றைப் பொருளாழத்தோடு கலந்தவர் என்றும் பாராட்டுகிறார். (ஒப்பியல் இலக்கியம், ப : 257). அது மெய்யே. ஆனால் பாரதிக்கு முன்பே அப்படி இலக்கியம் படைத்த பெருமை வள்ளலாருக்கு உண்டு என்பதும் மெய்யே. ஏனென்றால் அவர் அதே நூலின் இன்னொரு இடத்தில்,

> "*ஒளி, தெளிவு, குளிர்ந்த நடை ஆகிய மூன்று பண்புகளைக் கவிதை கொண்டிருக்க வேண்டும். கம்பர் முதல் இராமலிங்கர் வரை அவர் பாடல்களில் இவை உள்ளன என்று பாரதி கருதினார்*"

என எழுதுகிறார் (ப : 238). தமக்கு முன் இந்த மரபில் வள்ளலார் இருந்ததைப் பாரதி ஏற்றுக்கொண்டார் என்பதற்கு இதுவே சான்று. இந்த மூன்று பண்புகள் முன்பு கூறியனவே.

தெளிவு, பொருளை எளிமையாகப் புரிந்து கொள்ள வைக்கும் தன்மை. இனிமை ஒலி நயத்தால் அமைவது. அது தனியாக இல்லை. யாப்புக்கும் நடைக்கும் ஏற்றவாறு அமையும் சீர்மையே ஒலிநயம். இனிமை இந்த இரண்டும் பொருந்தியது. சொற்கள் கருத்துக்களை விளக்கும் : ஆனால் உணர்ச்சியை ஒலிநயமே வெளிப்படுத்தும். கருத்து விளக்கத்துக்குச் சொல்லில்

எளிமை : உணர்ச்சி வெளிப்பாட்டுக்கு ஒலிநயச் சீர்மை எனச் சுருங்கக் கூறலாம். அருட்பாவில் இவை நிறைவாக உள்ளன. திறனாய்வாளர்களின் நோக்கில் பாரதி பாடலுக்கு முந்தைய மறுமலர்ச்சி இலக்கியமாக அருட்பா திகழ்கிறது என்பது கண்கூடு.

ஒரு நல்ல படைப்பாளருக்கு நெறிமுறை, தமக்கு முன்பிருந்த அருளாளர் மரபில் விழுமிய எண்ணங்களை, பண்பாட்டுக் கூறுகளை, இலக்கிய வகைகளை ஏற்றுக்கொண்டு காலத்துக்கேற்ப அவற்றைச் சில இடங்களில் மாற்றியும், சில வகைகளில் புதுமை செய்தும் - ஆனால் அடிப்படைப் பண்புகள் அழியாமல் - பேணிக் காப்பதே ஆகும். அப்படிச் செய்வதால் மரபின் இழை ஒட்டம் அறுபடாமல் ஒரு நாகரிகத்தின் சின்னமாக அது இருக்கும். கபிலரும் பரணரும் போற்றித் தந்த தமிழ், அவ்வையும் கோவூர்க்கிழாரும் பாடி மகிழ்ந்த தமிழ், வள்ளுவரும் இளங்கோவும் வளர்த்த தமிழ், கம்பனும் சேக்கிழாரும் காப்பியம் யாத்த தமிழ் மரபை இன்றுவரை பேசி மகிழ்கிறோம். வள்ளலார் போன்ற அருளாளர்கள் அந்த மரபை இறுகப் பற்றிக் கொண்டு காப்பாற்றினார்கள். அதோடு அவர்கள் நின்றுவிடவில்லை. தம் வழிவரக்கூடிய எதிர்காலக் கவிஞரும் போற்றிக் காக்கும் வண்ணம் வழிகாட்டிப் போனார்கள். அதுவே மரபின் நெறி.

வள்ளலார் பாடல்களில் முன்னோர் கருத்துக்கள் நிறையவே பொதிந்து கிடக்கின்றன. குறிப்பாகச் சைவ சமய குரவர் நால்வர் பாடல்கள் அவருக்குப் பெரிய துணையாக இருந்து செம்மைப் படுத்தின. திருக்குறளும் திருமந்திரமும் இரண்டு கண்கள் என அவர் போற்றினார்.

> *"பண்டு நின்திருப்பாத மலரையே பாடியாடிய*
> *பத்திமையோரைப் போல் தொண்டு கொண்டு எனை*
> *ஆண்டனை"*

என்று அவரே பாடும் வண்ணம் அந்தத் தாக்கம் இருந்தது. ஆனால் அவர் அதோடு நின்றுவிடவில்லை. புதிய வடிவங்கள் படைத்தார்: வழிகள் வகுத்தார். பாரதி, திரு.வி.க. போன்றவர்களுக்கு முன்னோடியாக இருந்தார். தமிழ்ப் பக்தியுலகில், தமிழிலக்கியத்தொன்மரபில் முன்னோர்க்குப் பின்னாலும், பின்னோர்க்கு முன்னாலும் இடைநின்ற வித்தகர் அவர். "அருட்பாவைப் படிக்கும் போது தேவார, திருவாசகங்களையும் தாயுமானவர் பாடல்களையும் அது நினைவூட்டுகிறது" என

அ.சீனிவாசராகவன் கூறுகிறார். (ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை, ப : 26). "அடிகளாரைத் தவிர்த்துத் தேவார திருவாசகங்களை இவ்வாறு இனிக்கச் செய்த வேறு யாரையாவது இதுவரையில் தமிழகத்தில் கண்டதுண்டோ?" என அழகரடிகள் வினவுகிறார் (பாலகிருஷ்ணபிள்ளை பதிப்பு, VIII : 29). இவை முன்னோர் வழி அவர் வந்தமைக்குச் சிறந்த சான்றுகள்.

இது ஒரு புறம். பாரதி வள்ளலாரைப் பாடல்களில் எங்கும் குறிக்கவில்லை. ஆனால் உரைநடையில் "தமிழ்நாட்டின் புதிய விழிப்புக்கு ஆதிகர்த்தர்கள் இராமலிங்க சுவாமியும் சுதேசமித்திரன் சுப்பிரமணிய ஐயரும்" என்று எழுதியபின், "எம்மதமும் சம்மதம் என்றார் இராமலிங்க ஸ்வாமி" எனமுடிக்கிறார் (பாரதி கட்டுரைகள், ப : 291,392). "புதிய விழிப்பு" என்னும் தொடர் கூர்ந்து நோக்கற்குரியது. இலக்கிய உலகிலும் சமூக, சமய நிலைகளிலும் வள்ளலார் தோற்றுவித்த விழிப்புணர்வை அறிந்து பின்பற்றிய பாரதியின் சொற்கள் இவை. வேறு சில பாடல்களில் அருட்பா மெட்டைப் பாரதி கையாண்டுள்ளார். கோக்கலே சாமியார் பாடல் "களக்கமறப் பொதுநடம் நான் கண்டு கொண்ட தருணம்" என்னும் அருட்பாவின் ஓசை நயம் உடையது. "வாழையடி வாழை என வந்த திருக்கூட்ட மரபினில்" எனத் தொடங்கும் அருட்பாவைப் பாரதி அடிக்கடி பாடி மகிழ்ந்துள்ளார். (ரகமி, சின்னச்சின்ன பாரதி செய்திகள்) அந்தத் திருக்கூட்ட மரபினில் தாமும் இடம் பெற்றமை அவருக்கு மகிழ்ச்சி தந்திருக்கும். "எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓரினம்" என்ற பாரதியின் பொதுமை நோக்கின் வித்தை அருட்பாவில் காண முடியும்.

இப்படித் தாம் வாழ்ந்த காலத்தில் அன்றிருந்த புலவர்களிடமிருந்து வேறுபட்டுப் பழகு தமிழில் ஓர் கவிதை அற்புதத்தை நிகழ்த்திக் காட்டியவர் வள்ளலார். உணர்ச்சிப் பெருக்கும் உயிரை உருக்கும் இனிமையும் எளிமையில் நிறைந்தபோது இந்த அற்புதம் விளைந்தது. தம் கவிதை பற்றி வள்ளலார்,

"*தண்புடை நன்மொழித் திரளும் சுவைப்பொருளும்*
*அவைக்கே*
*தக்கஇயல் இலக்கியமும் தந்தருள்வாய் எனக்கே*" (5471)

என்று இறைவனை வேண்டும் போது குறிப்பிட்டார். மொழித்திரள் அருட்பாவில் கைவந்தது : சுவைப்பொருள் தானே

அமைந்தது : தக்க இயல் இலக்கியமாக அதுவே வடிவம் பெற்றது. "அவைக்கே" என அவர் குறிப்பது மக்கள் மன்றம். அந்த மன்றத்துக்கு ஏற்ற இயல்புடைய இலக்கியமாக, அவர் விருப்பப்படியே அருட்பா கனிந்தது. "ஓர் பாட்டிற்கு ஒரு கோடிப் பசும்பொன் வரும்" என்ற அவர் கணக்கு சரிதான். காலத்தை வென்று வாழும் பாட்டுக்கு விலையில்லை என்பதே இதன் பொருள்.

அருட்பாவை இன்று பிற சமயத்தவரும் ஏற்றுக்கொள்கின்றனர். ஒரே மேடையில் இந்துக்களுடன் கிறித்தவ, முஸ்லீம் அன்பர்களும் வள்ளலாரைப் பாராட்டிப் பேசியுள்ளனர். (T. Dayanandan Francis, Ramalingaswami, p:35) கேரளத்து நாராணயகுரு, "வள்ளலார் தெய்வமாகி நின்ற நிலையில் பாடியது அருட்பா" எனச் சொல்லியிருக்கிறார். கடுந்துறவியாகிய அவர் போன்றோரையும் அருட்பா ஈர்த்துள்ளது.

எளிய மனிதராயிருந்து ஆன்மிகப் படிநிலை வளர்ச்சியில் வள்ளலார் அருளாளராகக் கனிந்தார். தமிழ் மண்ணில், எளிய மக்களிடையே, அவர்கள் மொழியில் சமுதாயச் சிந்தனையுடன் பக்தியிலக்கியத்தை அவர் படைத்தது நால்வருக்குப் பின் நடந்த அரிய செயல். மக்கள் நடுவில் தாமும் ஒரு எளிய மனிதனாகவே அவர் வாழ விரும்பினார். "கம்பன் என்றொரு மானுடன் வாழ்ந்ததும்" என்ற பாரதியின் தொடரை ஒட்டி "வள்ளலார் என்றொரு மானுடன் வாழ்ந்ததும்" மெய்யே எனக் கூறுவது முற்றிலும் ஏற்புடையது. அருட்பா என்ற இலக்கியம் பக்தி உலகில் பெற்ற வெற்றி அத்தகையது என்பதில் ஐயமில்லை : ஏனெனில் அந்த உண்மையைக் காலம் மெய்ப்பித்துவிட்டது.

# அனுபூதியியல்

*அருட்சுகம் ஒன்றே அரும்பெறல் பெருஞ்சுகம்*
*மருட்சுகம் பிறஎன வகுத்த மெய்ச்சிவமே*
*அருளே நம்மியல் அருளே நம்உரு*
*அருளே நம்வடிவு ஆம்என்ற சிவமே - (அகவல்)*

இறைவன் அருளைப் பெறப் பின்பற்றப்படும் நெறிகள் பொதுவாக நான்காகும். சற்புத்திர மார்க்கம் (மகன்மை நெறி), சகமார்க்கம் (தோழைமை நெறி), தாசமார்க்கம் (ஆண்டான் அடிமைநெறி), சன்மார்க்கம் (அறிவுநெறி) என்று அவற்றைக் குறிக்கிறார்கள். இவையல்லாமல், ஒரு அடியார் தன்னைத் தலைவியாகவும் இறைவனைத் தலைவனாகவும் எண்ணி அவனருள் பெற ஏங்கும் நிலை ஒன்று உண்டு. அதை நாயக நாயகி பாவம் அல்லது மதுரபாவம் என்பார்கள். நெறி எதுவாயினும் இறைவனருள் பெறும் வேட்கை மீதூர்ந்து எழ, தன்னுள் இறைவனைத் தேடும் தவிப்புதான் அனுபூதியியல் என்று சொல்லப்படுகிறது.

அனுபூதிநிலையை முழுமையாக வரையறுத்துச் சொல்ல முடியாது. அது அவரவர் துய்ப்பு, அனுபவம், முதிர்ச்சி, உணர்வுக் கேற்ப மாறுபடும்.

"அது பழச்சுவை என அமுதென அமரரும் அறியார்" என்று குறிப்பாக மாணிக்கவாசகர் இதைப் பாடுவார். ஏனென்றால் அனுபூதி நிலையில் அறிவுக்கோ ஆராய்ச்சிக்கோ இடமில்லை. அறிவை ஒளி என்று சொல்வது வழக்கம். ஆனால் அந்த ஒளியைக் கொண்டு இறையருளின்பத்தைத் தேட முடியாது. ஏனென்றால் அது, கைவிளக்கு கொண்டு ஞாயிற்றைத் தேடுவதற்குச் சமமாகும். எல்லையற்ற பரம்பொருளை, எல்லைக்குட்பட்ட சிறுமானிடன் முழுமையாக அறிய முடியும்

என்று எண்ணுவது ஒரு குழந்தை தன் பிஞ்சுக்கரத்தால் வானவெளியைப் பிடித்து அகப்படுத்த முயல்வதற்குச் சமம்.

ஆனாலும் மனித முயற்சிகள் தொடர்ந்து கொண்டுதான் உள்ளன. அறிவு கொண்டு தேடுவோர் ஒரு புறம் : அன்பெனும் பக்திவலை வீசுவோர் ஒருபுறம் : தவத்திலும் யோகத்திலும் இருந்து உள்ளொளி காண முயல்வோர் ஒருபுறம். இப்படி நெறிகள் பலவாயினும், தேடும் பொருள் ஒன்றே. எங்கு அறிவு முடிந்து அன்பு தொடங்குகிறதோ அங்கு அனுபூதியும் தொடங்குகிறது என்று உலக அறிஞர் பலரும் மீண்டும் மீண்டும் வலியுறுத்துகின்றனர்.

"*உற்றாரை யான் வேண்டேன் ஊர் வேண்டேன்*
*பேர் வேண்டேன்*
*கற்றாரை யான் வேண்டேன் கற்பனவும் இனி அமையும்*"

என்று மாணிக்கவாசகர் இந்நிலையைப் பாடத் தாயுமானவர்,

"*கல்வியில்லை கேள்வியில்லை கைகாட்டும் காரணம் காண்*
*எல்லையளவற்றதடி எங்கும் நிறைந்ததடி*"

என்று அதை உறுதிப்படுத்துகிறார்.

புறத்தில் உள்ள ஐம்பொறிகளையும் தாண்டி அனுபூதி நிலை பெற்றவர்கள் அகச்செவியும் கேட்கும் : உட்கண்ணும் திறக்கும். கற்றவர்கள், தத்துவவாதிகள் இறையருள் எது என்று ஆராய்ந்து வாதமிட்டுக் கொண்டிருக்கும்போது, அனுபூதியாளர்கள் அந்த இறையருளில் மூழ்கித் திளைத்து இன்புற்றுக் கொண்டிருப்பார்கள். அறிவின் சூட்டிலிருந்து விடுதலை பெற்று அருளின் தண்மையில் குளிர்ச்சி பெறுவார்கள். அது அன்பின் கனிவில் கசிந்து பெறுவது. தன்னை இழந்து அன்பு நிலையில் தலைவனைப் பெறும் காதல் வேட்கையின் முற்றிய வடிவமும் ஆகும்.

ஆதலால் அனுபூதியியல் என்பது ஆன்மா என்ற ஒன்றும் பரம்பொருளும் ஈடுபடும் அனுபவம் ஆகும். உலகிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் மேலாக, அவற்றிலும் சிறந்ததாய் ஒன்று உள்ளது என்பதை உணர்வதே அனுபூதியின் அடிப்படைப் பண்பு. மனித அறிவுக்கும் அப்பாற்பட்ட பேரறிவு ; மண்ணின் அழகுக்கும் மேல் பொலியும் பேரழகு ; காணும் சிற்றுலகுக்கும் பெரிதாய் விரிந்த பேரண்டம் இருக்க வேண்டும் என அழுத்தமாக நம்பும் உறுதி இவை அனுபூதியின் வளர்ச்சி ஆகும். இல்லாத

ஒன்றிலிருந்து வேறொன்று வராது. நமக்கு அறிவு தரும் ஒன்று நம்மை விட முழுமையான ஞானம் பெற்ற ஒன்றாகவே இருக்க வேண்டும். இப்படி ஒவ்வொன்றிலும் நம்முடைய சிறுமையையும் இறைவனின் பெருமையையும் உணர்ந்து அவனருள் பெறத் துடிப்பதே அனுபூதியின் முற்றியநிலை எனல் வேண்டும்.

முன்னர் சொன்னது போல அனுபவத்துக்கு ஏற்ப அனுபூதியின்பம் மாறும். "அளந்தன போகம் அவரவர் ஆற்றான்" என்பது மெய்ம்மை அல்லவா? இருப்பினும் மூன்று சிறப்பு வகைகள் கூர்ந்து நோக்கத்தக்கன. இசை மூலம் அனுபூதி பெறுவது முதலாவது. தமிழகம் இதற்குக் கருவூலம். திருநீலகண்ட யாழ்ப்பாணரும், ஆனாய நாயனாரும் வாழ்வுச் சான்றுகள். நாயக நாயகி பாவம் மூலம் இறையருள் பெறுவது இரண்டாவது. தமிழ்ப் பக்தி இலக்கியத்தில் பெரும்பகுதி இந்த வகை சார்ந்ததே. நால்வரும், பராங்குச நாயகியும் வளர்த்த அருள்நிலையாகும். மூன்றாவது சித்தமரபில் அனுபூதி பெறுவது. திருமூலர் அதில் மூத்தவர் ; பதினெண் சித்தர்கள் வழி வந்தவர்கள். தமிழ் நிலம் சித்த மரபு வாழையடி வாழையெனச் செழித்த நிலம்.

வள்ளற் பெருமான் இந்த மூன்று வகைகளிலுமே அனுபூதி பெற்ற அருளாளர். அருட்பாவில் இவற்றுக்குச் சான்றுகள் பல உள்ளன. இனி வரும் பகுதிகள் அவற்றைக் காட்டும்.

## 1. இசைப் பாடல்கள்

*தான்பாடக் கேட்டுத் தமியேன் களிக்கும் முன்னம்*
*நான்பாடக் கேட்டு உவக்கும் நற்றாய் காண் - 1965 / 186*

இறைவனை நாடும் அனுபூதி நிலைகளில் இசை ஒரு முதன்மை இடத்தைப் பெறுகிறது. இறையருள் வேட்டுத் துய்த்துப் பாடும்போது ஐம்பொறிகள் செயல் மறந்து, புலன்கள் ஒன்றி இன்பத்தில் தோய்கின்றன.

"*ஏழிசையாய் இசைப்பயனாய் என்னுடைய*
*தோழனுமாய்*"

என்று சுந்தரர் இறைவனை அழைத்தது அறிந்த ஒன்று. கடவுளைப் பாடும்போது, பாட்டின்பத்தில் துன்பங்கள் மறைந்து போகின்றன.

*"துன்பம் நேர்கையில் யாழெடுத்து நீ*
*இன்பம் சேர்க்க மாட்டாயா?"*

என்று பாரதிதாசன் கேட்பதும் எண்ணற்குரியது. பாட்டு உணர்ச்சியின் வடிகால் : இறைத் தேட்டத்தின் வாய்க்கால் : புலன்கள் ஒன்றும் நிலைக்களம் : அண்டம் முழுதும் விரிந்து அமைதியில் ஒலிக்கும் அடிநாதத்தைக் கேட்கச் செய்யும் சிறந்த ஊடகம் ; இப்படிப் பல சிறப்புக்கள் இசைக்கு உண்டு.

இசை கவிதையுடன் நெருங்கிய தொடர்பு உடையது. முன்னாளில், தொல்காப்பியர் காலம் தொட்டுக் கவிதையைப் பாட்டு என்றே குறித்தனர். எழுதப்பட்ட கவிதைகள் எல்லாம் பாடப்பட்டன என்பது இதன் மூலம் தெளிவாகும். ஒலி, ஓசை என்னும் இரண்டு பண்புகள் கவிதைக்கும் பாட்டுக்கும் பொதுவாகும். எனினும் வேறுபாடும் உண்டு. கவிதை பொருள், யாப்பு, வடிவம் இவற்றால் முழுமைபெறும் : இசையோ ஓசை நயத்தையே உயிராக உடையது : கருத்து, வடிவம் இருப்பினும் சரி: இல்லாதிருப்பினும் சரியே. எனினும் உணர்ச்சி வேண்டும். உணர்ச்சியை எழுப்பும் ஆற்றல் வேண்டும். பாடுவோன் உள்ளத்து நெகிழ்ச்சி கேட்போன் நெஞ்சில் புனலாகப் பாய வேண்டும். இசை உணர்ச்சியின் ஊடகம். ஆதலால் அதை இன்னதென்று மொழியால் விளக்க முடியாது. (K.C. Pandey, Indian Aesthetics, p : 511)

இசையை அனுபவித்தே உணர வேண்டும். ஆதலால் அது ஆன்மாவின் மொழி. இறையருள் வேட்கும் ஓர் உயிரின் துடிப்பை அதனுள்ளே கேட்கலாம். ஆதலால்தான் கவிதையைவிட இசை மானிடரை உருக்குகிறது. மரபுவழி நின்று சொல்லும் பொருளும் கூறுகின்ற கருத்துக்களை உணர்ந்தோரே கவிதையில் தோய முடியும். ஆனால் இசையால் இன்பம் பெற இந்த எல்லைகள் ஏதும் இல்லை. (K.C. Pandey, p : 511)

தமிழரும் இந்த நெறிகண்டவரே. பாட்டு என்பதற்கு இசை என்றே பொருள் கூறினர். "தொலைவிலிருந்து கொண்டு ஒருவன் பாட்டைப் பாடும்போது அவன் இன்ன வகைச் செய்யுளைப் பாடுகிறான் என உணரத்துணை செய்யும் ஓசையே பாட்டு" என்பது பேராசிரியர் உரை. ஒலிநயத்தை அடிப்படையாகக் கொண்ட ஓசை உணர்ச்சியை விளங்கச் செய்கிறது. அதன் மூலம்

உள்ளத்தையும் பண்படுத்துகிறது. இசையால் விளையும் பயன், அறநெறிப் பயன்பாடு இதுவாகும்.

கவிதையாயினும் பாடும்போது சில இலக்கண வரம்புக்குள் வருகிறது. பாட்டின் யாப்பு இசைக்கு உயிர் போன்றது. தொல்காப்பியர் இதன் நுட்பத்தை உணர்ந்து இன்னின்ன பொருள் பற்றி, இன்னின்ன யாப்பில் பாட வேண்டும் என்று கூறினார். யாப்புக்கேற்ற ஓசையைப் பலவாகப் பாகுபாடு செய்து இசைக் கூறுகளுக்கு வண்ணம் எனப் பெயரிட்டு இருபது வண்ணங்களைக் கூறியுள்ளார் (செய்யுளியல் : 105). க.வெள்ளைவாரணம், வண்ணம் என்பது "கேட்போரது உள்ளம் விரும்பி ஏற்றுக்கொள்ளும்படி தாம் சொல்வதற்குரிய பொருளைச் சுவைபெருக வண்ணித்துப் புகழும் நிலையில் இயற்றப்பட்ட இசைப்பாடல்" என்கிறார். (பன்னிருதிருமுறை வரலாறு, ப : 188)

**தமிழிசை :**

பலநூறு ஆண்டுகளாகத் தனக்கென ஒரு தனிப்பண்பைத் தமிழிசை தனக்குள் காப்பாற்றி வந்திருக்கிறது. பன்னிரு திருமுறைகளும் ஆழ்வார் பாடல்களும் கவிதைப்பண்பு செறிந்த சிறந்த இசைத் தமிழ் இலக்கியங்கள். அவர்க்கும் முன் தமிழிசை பற்றிய செய்திகளை விளக்கமாகக் கூறியவர் இளங்கோ அடிகள். அரங்கேற்றுகாதை தமிழிசை அகராதி எனல் வேண்டும். எட்டுத் தொகை பத்துப்பாட்டு நூல்களிலும் இசை பற்றிய குறிப்புகள் உண்டு : இசைக் கருவிகளைப் பற்றிய விரிவான செய்திகளும் உள்ளன.

நாயன்மாரும் ஆழ்வாரும் நாட்டுப்பாடல் வடிவங்களைக் கையாண்டு தாம் பாடியவற்றைப் பொதுமக்கள் பாட்டாக்கினர். கழல், பந்து, அம்மானை போன்ற மகளிர் விளையாட்டுக்கள் பக்தி இலக்கியத்தில் இடம் பெற்றன. சிந்து, கும்மி, கண்ணி போன்றவையும் நாட்டுப்புற வடிவங்களே. இவற்றைப் "பாமர மக்களைத் தழுவி எழுந்த உயிர்த்துடிப்புள்ள ஒலி உருவங்கள்" என்பார் கைலாசபதி. (சமூகவியலும் ஒப்பியலக்கியமும், ப : 141)

தேவார மூவருக்குப்பின் தமிழிசையைப் பரப்பிய பெருமை அருணகிரிநாதரைச் சாரும். நாயக்கர், மராத்தியர்ஆட்சியில் தமிழிசை போற்றப்படவில்லை. சமஸ்கிருதமும் தெலுங்குமே முதலிடம் பெற்றன. அருணகிரிநாதருக்குப்பின் தாயுமானவர்

ஒல்லும் வகையால் தமிழிசை மரபைக் காத்தார். அவருக்குப் பின் பக்தி இலக்கியத்தில் இசையைப் பேணிய பெருமை வள்ளலாருக்கு உண்டு.

**வள்ளலார் காலம் :**

19ஆம் நூற்றாண்டில் ஓரளவு இசைக்கலை போற்றப்பட்டது. சரபோசி மன்னர் இசைக் கலைஞர்களின் புகலிடமாக இருந்தார். சிற்றரசர்களும், ஜமீன்தார்களும் அப்படியே கலைஞர்களை ஆதரித்தனர். வேதநாயக வேதசாஸ்திரி கிறித்தவர் : ஏசுபெருமான் மீது கீர்த்தனைகள் பாடியவர். ஆனாலும் சரபோசி மன்னரவையில் போற்றப்பட்டார். உ.வே. சாவின் "என் சரித்திரம்" இசைக் கலைஞர் பற்றியும் அவர்களைப் போற்றியவர்களைப் பற்றியும் நிறைய செய்திகள் கூறுகிறது. மாயூரம் வேதநாயம் பிள்ளை சர்வசமயக் கீர்த்தனை எழுதிப்புகழ் பெற்றார். இவரே தமிழின் முதல் நாவலாசிரியர் என்பதும் இங்கு குறிக்கத்தக்கது.

எனினும் அன்று தமிழிசையைப் பரப்பியதில் இருவருக்கு முதன்மையான பங்கு உண்டு. ஒருவர் வள்ளலார் : மற்றவர் கோபாலகிருஷ்ண பாரதியார். இலக்கியப் பெரும்புலவராக வள்ளலார் பெறும் பெருமை இசைப்பாடலாலும் உண்டு. கோபால கிருஷ்ண பாரதியார் மக்கள் உள்ளங்களை கவர்ந்தவர். அவர் எழுதிய "நந்தனார் சரித்திரக் கீர்த்தனை" அவர் வாழ்நாளிலேயே அவர் கண்முன்னே தமிழகம் முழுதும் பரவியது. வெள்ளையரும் - மொழி தெரியாமல் இருந்தும் கூட - அந்தக் கீர்த்தனைகள் நாடகமாக அரங்கேற்றப்பட்டபோது கேட்டு உருகியிருக்கிறார்கள் என்பது அது பெற்ற வெற்றிக்குச் சான்று.

**வள்ளலார் :**

அருட்பாவில் மொத்தம் 5818 பாடல்கள். அதில் 1011 பாடல்கள் இசை வடிவங்களாக உள்ளன. இது குறைந்த எண்ணிக்கையன்று. இந்த ஆயிரம் பாடல்களையும் அவர் வாய்விட்டுப் பாடிப் பின்னரே எழுதியிருக்கிறார். "நாளது வரையில் பாடிய பாடல்கள் பல : அவைகளை முழுதும் எழுதி வைக்க வேண்டும் என்ற இலட்சியம் இல்லாமையால் அப்படி அப்படிச் சிதறிக் கிடக்கின்றன" என நண்பருக்கு எழுதிய ஒரு கடிதத்தில் அவர் குறிப்பிட்டுள்ளார். பாடிய, எழுதி வைக்கவில்லை என்ற சொற்கள் சான்றாகும். "பாடும் வகை

புரிந்து" என்றும், "நான்பாடக் கேட்டு" என்றும் வரும் அருட்பாத் தொடர்கள் அவர் பாடியதைக் காட்டும்.

வள்ளலாரின் பாடல்களில் கலிப்பாவினம் அதிகம். கலிவெண்பா, கொச்சகம், கட்டளை, தாழிசை துறை, விருத்தம் என அவற்றை எளிதாகக் கையாண்டுள்ளார். "கலிப்பாவும் அதன் இனங்களும் சீர்களும் மிக்கும் குறைந்தும் வந்து ஓசை வேற்றுமைக்கு இடம் தருபவை : இவ்வியல்புகள் இசை பாடுவதற்கு ஏற்றவை" எனக் க. வெள்ளைவாரணார் கூறுவது, வள்ளலார் அதை அதிகமாகக் கையாண்டதன் காரணத்தைக் காட்டுகிறது. (பன்னிரு திருமுறை வரலாறு, ப : 432) கலிப்பாவினம் தவிர, கண்ணி, சிந்து, கீர்த்தனை, கும்மி முதலிய நாட்டுப் புறப் பாடல் வடிவங்களும் அருட்பாவில் உள்ளன. இவை வள்ளலாரின் இலக்கணப் புலமையையும் இசையறிவையும் ஒரு சேரக் காட்டுகின்றன.

**சிந்து :**

இசைப் பாடல்களில் மிக எளிய வடிவம் என்று இதைச் சொல்ல வேண்டும். தமிழிசைக்கு ஒரு புதிய வனப்பை இந்தச் சிந்துப் பாடல்கள் தந்தன. சிந்து ஒரு வகை விருத்தப் பாடலே என்றும், வில்லிப்புத்தூராரின் சந்த விருத்தங்களும் அருணகிரிநாதரின் திருப்புகழும் இத்தன்மை உடையனவே என்று தெ.பொ.மீ. கூறுகிறார். (பிறந்தது எப்படியோ?, ப : 118) அருட்பாவில் மொத்தம் இசைப் பாடல்கள் 1011 என்று முன்னர் குறிக்கப்பட்டது. இவற்றுள் சிந்து வகை சார்ந்தது 748. அதிலும் ஆறாம் திருமுறையில் மட்டும் மொத்தம் 626 உள்ளன. இந்தச் செய்தியிலிருந்து சிந்துவகையின் செல்வாக்கையும், அனுபூதி நிலையை வெளியிடவும் ஆன்ம ஞான முதிர்ச்சியின் வடிகாலாகவும் அவர் அதைப் பயன்படுத்தினார் என்பதும் தெளிவாகும். பல்லவி, பல்லவி எடுப்பு, கண்ணிகள் என்ற வடிவம் கொண்டு பலவாறு அவர் அதைப் பயன்படுத்திப் பாடியுள்ளார். வெறும் கண்ணிகளைக் கொண்ட சிந்துப் பாடல்களும் உள்ளன. இன்று இசையுலகில் மிகவும் புகழ்பெற்ற கீழ்வரும் அருட்பா ஆழ்ந்த பொருளுடையது. இன்று அமைதியின்றித் தவிக்கும் உலகின் கவலைகளுக்கு மருந்தாகவும் அமைவது ஆகும்.

*"வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்*
*மயில் குயிலாச்சுதடி - அக்கச்சி*
*மயில் குயிலாச்சுதடி*
*துள்ளலை விட்டுத் தொடங்கினேன் - மன்றாடும்*
*வள்ளலைக் கண்டேனடி - அக்கச்சி*
*வள்ளலைக் கண்டேனடி*
*சாதிசமயச் சழக்கை விட்டேன் - அருட்*
*சோதியைக் கண்டேனடி - அக்கச்சி*
*சோதியைக் கண்டேனடி."* (4947)

அருட்காட்சிப் பதிகம் எனும் பெயர்கொண்ட இப்பாடல் தெய்வ அருள்பெறும் வழியைக் காட்டுவதாகும்.

**கண்ணி :**

அருட்பாவில் 144 பாடல்கள் "கண்ணி" எனப்படும் இசைப்பாவகை சார்ந்தனவாக உள்ளன. இரண்டடிகள் கொண்டு, இரண்டாமடியின் ஈற்றில் ஒரு சொல்லே மீண்டும் மீண்டும் வருவதுபோல அமைவது கண்ணியாகும். சில பாடல்களில் அடிதோறும் கடைசியில் ஒரே சொல் வருவதுண்டு.

*"தன்னை யறிந்தின்பமுற வெண்ணிலாவே - ஒரு*
*தந்திரம் நீ சொல்ல வேண்டும் வெண்ணிலாவே"* (284)

என்னும் வெண்ணிலாக் கண்ணி ஒரு சான்று.

*"கற்றது என்றும் சாகாத கல்விஎன்று கண்டுகொண்டுஉன்*
*அற்புதச் சிற்றம்பலத்தில் அன்பு வைத்தேன் ஐயாவே*
*ஓர் துணை நின்பொன்னடி என்றுன்னுகின்றேன்*
*உன்னையன்றி*
*ஆர்துணையும் வேண்டேன் என்ற அன்பு வைத்தேன்*
*ஐயாவே"*(2950 ..)

என்றுவரும் பேரன்புக் கண்ணி ஒரு சான்று. தாயுமானவரின் பராபரக் கண்ணி பக்தியுலகில் சிறப்பிடம் பெற்றதை யாவரும் அறிவர்.

*"அன்பர் பணி செயஎனை ஆளாக்கிவிட்டு விட்டால்*
*இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே"*

என்ற வரிகளை அறியாத தமிழன் இல்லை எனலாம். அவருக்குப்பின் வள்ளலார் கண்ணி வகை இசைப் பாடலைப் பாமரரும் பாடும் வண்ணம் பரப்பினார்.

**கீர்த்தனை :**

கீர்த்தனை இசையுருப்படி என்று இசையுலகம் கூறும். சிந்து, கண்ணி முதலிய வடிவங்கள் இறையருள் வேட்டல் அல்லாமல் பிறபொருள் பற்றியும் பாடப்படும். ஆனால் கீர்த்தனைகள் இறை வழிபாட்டுக்காக மட்டுமே பாடப்படுவதாகும். கீர்த்தனைகளை மனம் உருகிப் பாடும்போது ஆன்மா நல்லமைதி பெறுவதாக மக்கள் நம்பினர். பின்னாளில் சமய, தத்துவங்களை விளக்கிப் பாடவும், புராண, இதிகாசக் கதைகளைக் கூறவும் கீர்த்தனை பயன்படுத்தப்பட்டது. இராமநாடகக் கீர்த்தனை, நந்தனார் சரித்திரக் கீர்த்தனை ஆகியன சான்றுகளாகும்.

பல்லவி, அனுபல்லவி, சரணம் என மூவகையுறுப்புக்களைக் கீர்த்தனை கொண்டிருக்கும். தன் உள்ளத்து உணர்ச்சிகளையும், வேட்கையையும் கேட்போர் நெஞ்சுருகும் வண்ணம் வெளியிட இந்த வகை ஏற்றதாய் உள்ளது. "தெண்டனிட்டேன் என்று சொல்லடி" (2977). "வருவார் அழைத்து வாடி வடலூர் வடதிசைக்கே" (4482) போன்ற பல கீர்த்தனைகளைப் பாடக் கூட வேண்டாம் ; வாய்விட்டுப் படிக்கும்போதே இறைவனுக்காக உருகும் வள்ளலாரின் உள்ளத்து ஓசையைக் கேட்க முடியும். இறையனுபவத்தைக் கூர்நோக்குடன் ஒருமுகப்படுத்திக் கூறுவதாக இந்தக் கீர்த்தனைகள் அமைந்துள்ளன. "அனுபூதி பெற்றவர்கள் இந்தக் கீர்த்தனை வடிவத்தைக் கையாண்டனர். வள்ளலாரும் அப்படிப் பல கீர்த்தனைகள் எழுதியுள்ளார்" என்று தெ.பொ.மீ. கூறுவது இங்கு கருதத்தக்கது. (A History of Tamil Literature, p : 172)

*பல்லவி*

*இது நல்ல தருணம் - அருள்செய்ய* (4501)
*இது நல்ல தருணம்*

*பல்லவி எடுப்பு*

*பொதுநல்ல நடம்வல்ல புண்ணியரே கேளும்*
*பொய்யேதும் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன்*
*(இது நல்ல)*

***கண்ணிகள்***

***கரையா எனது மனக் கல்லும் கரைந்தது***
***கலந்து கொளற்கு என் கருத்தும் விரைந்தது***

*புரையா நிலையில் என் புந்தியும் தங்கிற்று*
*பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று.*
*(இது நல்ல)*

என்பதுபோலப் பல கீர்த்தனைகள் அருட்பாவில் பளிங்கில் பவழம் பதித்தது போலச் சுடர்விட்டுத் தெய்வ ஒளி பாய்ச்சுகின்றன.

**கும்மி :**

கும்மி பெண்களின் விளையாட்டு. இறையனுபவத்தைப் பெண்களின் விளையாட்டுக்கள் மூலம் வெளியிடுவதும் ஒரு மரபு. திருத்தெள்ளேணம், திருச்சாழல், பொற்சுண்ணம் இடித்தல் போன்றவை திருவாசகத்தில் இடம் பெற்றவை. "ஞானக்கும்மி" என்று சித்தர்கள் இதைப் போற்றினர். வாழையடி வாழை என வந்த வள்ளற்பெருமானும் இந்த வடிவத்தைக் கையாண்டார் "கும்மி" என்பதைக் "கொம்மி" என்கிறார். பேச்சு வழக்கில் சில சொற்களில் இப்படி மாறுவது உண்டு. குடை - கொடை, குடம் - கொடம் என்பன சான்றுகள். சண்முகர் கொம்மி, நடேசர் கொம்மி என இரண்டு பதிகங்களில் 22 பாடல்கள் இவ்வகை சார்ந்து உள்ளன.

*"குறவர் குடிசை நுழைந்தாண்டி - அந்தக்*
*கோமாட்டி எச்சில் விழைந்தாண்டி*
*துறவர் வணங்கும் புகழாண்டி - அவன்*
*தோற்றத்தைப் பாடி அடியுங்கடி* (523)
*சைவம் தழைக்கத் தழைத்தாண்டி - ஞான*
*சம்பந்தப் பேர் கொண்டு அழைத்தாண்டி*
*பொய்வந்த உள்ளத்தில் போகாண்டி - அந்தப்*
*புண்ணியம் பொன்னடி போற்றுங்கடி"* (534)

என வரும் சண்முகர் கொம்மிப் பாடல்கள் எளிமையாக அமைந்து மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தன.

**பிற :**

ஆறாம் திருமுறையில் வரும் ஞானோபதேசம், ஆரமுதப் பேறு ஆகிய இரண்டு பதிகங்களுக்கும் பண் நட்டராகம் எனக் குறிக்கப்பட்டுள்ளது. இவையிரண்டும் கலிவிருத்தங்களா லாகியவை. நட்டராகம் தேவாரத்தில் மட்டும் பயின்றுவரும் ஒரு பழந்தமிழ்ப் பண். குறிஞ்சிப் பெரும்பண்ணின் உட்பிரிவில் இது வருகிறது. இந்நாளில் இந்தோளம் என்று வழங்கும் ராகத்துக்கு ஒப்பானது என்று கூறி, அது இன்று வழக்கிலில்லை எனவும்,

பிற்காலத்தார் நட்டராகப் பதிகங்களைப் பந்துவராளியில் பாடிவருவதாகவும் க. வெள்ளைவாரணார் எழுதுகிறார். (பன்னிரு திருமுறை வரலாறு, ப : 610). வள்ளலார் இந்த அரிய பண்ணை அறிந்திருந்தது மட்டுமல்லாமல், இரண்டு பதிகங்களையும் பாடியுள்ளார் என்பதிலிருந்து அவர் இசைப் புலமை தெளிவாகிறது.

"அம்பலத்தமுதே", "அம்பலத்தரசே", "ஆடிய பாதம்", "ஜோதி ஜோதி" என்றுள்ள பதிகங்கள் நாமாவளி சார்ந்தவை. கூட்டு வழிபாட்டில், ஒருவர் பாடக் கூடியிருப்போர் தொடர்ந்து பாட ஏற்ற வகை இதுவாகும். அடியார்கள் கூட்டம் திரட்டி வழிபாட்டில் புதுமை புகுத்தியவர் வள்ளலார் என்பதற்கு இது சான்றாகும்.

இசையின் இன்னொரு வகை கருவியிசையாகும். வாயால் பாடுவதோடு கூடக் கருவிகளும் இயங்கினால் இசையின் மெருகு கூடும். இசைக் கருவிகளைத் தலைப்பாகக் கொண்டு வள்ளலார் 27 பாடல்கள் பாடியுள்ளார். "கைவிடமாட்டான் என்று ஊதூது சங்கே" என்னும் சங்குப்பாட்டு புகழ் பெற்றது. "அம்பலவர் வந்தார் என்று சின்னம்பிடி" என்பது சன்மார்க்க வெற்றியைக் கூறும் பாடல் ஆகும். "அருட்சோதி ஆனேன் என்று அறையப்பா முரசு" என்பது அவர் பெற்ற வெற்றியைக் காட்டும் முரசப்பாட்டு.

ஏற்பளிப்பு :

தம்முடைய வாழ்வை எளிமையாக்கும் படியும் அப்போதுதான் ஓர் புல்லாங்குழல் போல இறைவனின் புகழை இசையாகப் பாடித் தாம் நிறைவடைய முடியும் என்றும் தாகூர் கீதாஞ்சலியில் ஏங்குகிறார் (பா : 17). அவருக்கும் முன்னர் தமிழகத்தில் அந்தப் பேறு வள்ளற் பெருமானுக்கு வாய்த்தது. அருட்பா இசை அவர் வாழ்ந்த நாளிலேயே தமிழகம் முழுதும் பரவிற்று. "உளமுற்று இனிய அமுதப் பேரூற்றாய்ப் பெருகிப் பொங்கிடல் போல் அரிய நுண்பொருள்கள் இசைக்கும் தமிழ்ப்பா" என்று வரத. நஞ்சைய பிள்ளை அருட்பாவுக்குப் புகழாரம் சூட்டுகிறார் (ஆ.பா.பி. ப : 5). நுண்ணிய செய்திகளையும் அரிய கருத்துக்களையும் எளிய இசையில் பாடும் பாடல்கள் ஊற்றுப்போல் பெருகி வந்தன என்பது தெளிவு. எளிமையும் தெளிவும் எல்லா அருட்பாக்களிலும் உள்ளவை. இவற்றுடன் இனிமையும் உருக்கமும் சேர்ந்து இசைப்பாடல்களுக்கு ஒரு புதிய வீறு தருகின்றன.

இயலும் இசையும் ஒன்று சேர்ந்தால் தான். செய்யுள் நயம் கனியும். இலக்கியத்தைப் பொதுமக்கள் நுகர இசையின் துணை வேண்டும். அவர்களை மனதுள் கொண்டே அவர் பாடியிருக்க வேண்டும் என்பதில் பிழையில்லை. கற்றவரும் கல்லாதாரும் அந்நாளில் ஒரு சேர அருட்பாக்களைப் பாடினர். கோயில் வழிபாட்டின் போது தேவார, திருவாசகப் பாடல்களுடன் சேர்த்து அருட்பாவையும் ஓதினர். எல்லா மக்களையும் இந்தப் பாடல்கள் ஈர்த்தமையால், வள்ளலாரின் இசைவுகூடப் பெறாமல் சிலர் சிறுசிறு நூல்களாகப் பாடல்களை அச்சிட்டு விற்றிருக்கிறார்கள். மக்களிடையே அவை பெற்ற மதிப்பு அத்தகையது.

மற்ற இசைப் பாடல்களுக்கும் பக்திப் பாடல்களுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. இரண்டும் மனித உணர்வுக்கு விருந்தூட்டுபவை. இதில் ஐயமில்லை. எனினும் அத்துடன் பக்திப் பாடல்கள் மக்கள் நெஞ்சைப் பண்படுத்துபவையுமாகும். மற்ற இசைப் பாடல்களைப் பொழுதுபோக்குக்குக் கூடப் பாடலாம் : துன்பங்களை மறக்க அவை துணை செய்யலாம் : அவ்வளவே. பக்திப் பாடல்களோ உள்ளத்தை முழுமையாக்கி இறையின்பத்தில் திளைக்க வைத்து ஒன்றுவிக்கின்றன. வள்ளலார் பாடல்களை "மாசில் வீணை மாலை மதியம்" என்றிவ்வாறு தேவாரச் சொற்களால் திரு.வி.க. பாராட்டுகிறார். (இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம், ப : 19). "ஈசன் எந்தை இணையடி நீழலை" எய்துவிக்கும் சிறந்த கருவி அருட்பாவின் இசைப்பாட்டு என்பது நல்ல மதிப்பீடு.

தமிழின் முதல் நாவல்களில் ஒன்றான கமலாம்பாள் சரித்திரம் பி.ராஜம் ஐயர் எழுதியது. 1893-95க்கு இடைப்பட்ட ஆண்டுகளில் தொடர்கதையாக வந்தது. அதில் இரண்டு இடங்களில் கதைமாந்தர்கள் அருட்பாக்களைப் பாடுவதாக ஆசிரியர் எழுதியுள்ளார் (ப : 195,262). வள்ளலார் சித்திபெற்று இருபது ஆண்டுகள் ஆகியிருந்த நேரம் அது. அன்றைய சூழலில் கற்ற பிறராலும் மேற்கோளாகக் காட்டப்பெறும் ஏற்பளிப்பு அருட்பாவுக்குக் கிடைத்தது என்பது எளிய செயலன்று ; பெரிய வெற்றியேயாகும். காரணம் அருட்பாவின் அமைப்பு அத்தகையது. தமிழகத்தின் பழைமையான ஆன்மிகப் பண்பாட்டின் தொடர்ச்சி அருட்பா. எளிதில் மனப்பாடம் செய்வதற்கேற்ற எதுகைமோனையும் ஒலிநயமும் அமைந்து

இனிமையில் நிறையும் பாடல்கள் : என்றும் நிலைத்துக் காலத்தை வெல்லும் பாடல்களும் ஆகும். "நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம் என்றோர் மணியாரம் படைத்த தமிழ்நாடு" என்ற பாரதியார் தலை நிமிர்ந்து பாடிச் சிலம்பைப் பாராட்டுவார். "நெஞ்சம் இனிக்கும் எதுகை நலம் நிலவும்" பாடல்கள் என வரத. நஞ்சையபிள்ளை வள்ளலாரின் இசைப் பாடல்களைப் போற்றுவார். நெஞ்சத்தை அள்ளுவதும், இனிக்கச் செய்வதும் ஒன்றே : இசையின் வெற்றியும் அதுவே.

பழைய ஆன்மிக மரபையும் பக்தி நெறியையும் வள்ளலாரின் இசைப்பாடல்கள் தமிழருக்கு நினைவூட்டித் தெய்வநெறி நின்று உலகியல் வாழ்வு நடத்துமாறு கூறின. தமிழ்ச் சுடர்மணிகள் என்ற நூலில் சில சான்றோர்களைப் போற்றும் எஸ்.வையாபுரிப்பிள்ளை, அந்த மணிகளுள் ஒருவராக வள்ளலாரைத் தேர்ந்தெடுத்து, "தமிழர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டவர் : ஒரு பக்த பரம்பரைக்குத் தலைவராகத் திகழ்ந்தவர்" எனக் குறிப்பிடுகிறார் (ப : 223). திட்பமான, செறிவான மதிப்பீடு இது என்பதில் ஐயமில்லை.

வள்ளற் பெருமான் இசை என்னும் ஊடகத்தின் வாயிலாக இறையின்பத்தில் தோய்ந்தவர்.

*"பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்*
*பக்கநின்று கேட்டாலும் பரிந்துள் உணர்ந்தாலும்"* (4115)

என அவர் இறைவனைப் பார்த்து, நினைத்து, படித்து, "கேட்டும்" வாழ்ந்தார். அவருடைய எளிமைமிக்க பாடல்கள் அவர் கூறிய இந்த "அனுபூதி" வழியை மற்றவருக்கும் காட்டின. ஒரு குழந்தைக்கும் கூடப் புரியும் வண்ணம் அமைந்த எளிமை. "கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பு" அருட்பாவில் இயல்பாக அமைந்து கிடக்கிறது. அறிஞர் பி.ஸ்ரீ. நறுக்கென்று, மிகச் சுருக்கமாக அருட்பாவை இப்படிக் குறிக்கிறார்.

> *"தில்லை ஆனந்தக் கூத்தன் எளிமைவாய்ந்தவன் : இராமலிங்கரின் ஒரு பாட்டைப்போல அவ்வளவு எளிமை வாய்ந்தவன்".* (இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும், ப : 32)

அருட்பாவில் தெய்வ நடனத்தின் தாளகதியையும் பண்ணிசையையும் துய்க்கலாம் என்பது நல்ல மதிப்பீடு.

இறையருள் நோக்கி மாந்தரை அருட்பா இட்டுச் செல்லும் ஆற்றல் பெற்றது என்பது தெளிவு.

இசையறிஞர் பி.சாம்பமூர்த்தி, "வாழையடி வாழை என வந்த இசைவாணர்களில் இறுதியானவர் வள்ளலார்" எனப் பாராட்டுகிறார். (ஆ.பா. VI 5). பிற அறிஞர்கள் கூறுவது இசைவதே எனினும், இசைவல்லார் ஒருவரின் இந்தக் கருத்து துல்லியமான நிறைகோலாகிறது. ஏனென்றால் அந்த மரபில் அவர் இறுதியானவர் என்பது தொன்றுதொட்டு வந்த பழைமையை அவர் நிலைநிறுத்தியமைக்குச் சான்றாகிறது. தேவார மூவருக்குப்பின் அருணகிரிநாதருக்குப் பின் தமிழிசைபாடி மக்களைத் தமிழிசையில் நிறுத்திய மாட்சி வள்ளற் பெருமானையே சாரும். பொதுமக்கள் பாட்டாக அருட்பா மலர்ந்ததில் வியப்பில்லை.

கூடவே தாம் பெற்ற - இசைப்பாடல் மூலம் பெற்ற - அனுபூதி இன்பத்தையும் அவர் மக்களுக்குச் சொல்லத் தவறவில்லை.

*"இன்பால் உலகங்கள் யாவும் விளங்கின*
*துன்பால் இறந்தவர் துன்பற்றுத் தோன்றினர்*
*அன்பால் அடியவர் ஆடினர் பாடினர்*
*என்பால் அருட்பெருஞ் சோதியார் எய்தவே"* (5534)

எல்லா உலகமும் இன்பமயமாயின : துன்பத்தால் சோர்வுற்றவர் அது நீங்கி இன்பம் பெற்றனர் : அன்பின் பெருக்கால் அடியவர் ஆடிப்பாடி மகிழ்ந்தார்கள். இத்தனையும் இறையருள் பெற்ற அவர் காட்டிய வழியால் விளைந்தன.

## உ. அகத்துறைப் பாடல்கள்

*"கற்பூரம் மணக்கின்ற தென்னுடம்பு முழுதும்*
*கணவர்திரு மேனியிலே கலந்தமணம் அதுதான்*
*இற்பூத மணம்போல மறைவதன்று கண்டாய்*
*இயற்கைமணம் துரியநிலைஇறைவடிவத் துளதே*
*பொற்பூவும் நறுமணமும் கண்டறியார் உலகர்*
*புண்ணியனார் திருவடிவில் நண்ணியவா றதுவே*
*நற்பூதி அணிந்ததிரு வடிவுமுற்றும் தோழி*
*நான்கண்டேன் நான்புணர்ந்தேன் நான்அது*
*ஆனேனே."* (5723)

*"தொன்றுதொட்டு வந்த முறையில் காதல் வாய்ப்பாட்டைப் பயன்படுத்தி இறைவனை நாயகனாகக் கொண்டு அவர் பாடியுள்ள பாடல்கள் இங்கித மாலையிலும் பிறவற்றிலும் உள்ளன."*

*"பழைய காதல் துறைகள் அமைந்த பக்திப் பாடல்கள் நூற்றுக் கணக்கில் அருட்பாவில் உள்ளன."*

இந்தச் சொற்கள் மு.வ. கூறியவை. (தமிழ் இலக்கிய வரலாறு, ப : 228,230). அனுபூதி நிலையின் தலைமைக் கூறாகிய நாயகநாயகி பாவம் அருட்பாவில் உள்ள வகையை ஆராய மேற்கண்ட சொற்கள் தூண்டலாய் இருந்தன.

காதலும் வீரமும் தொன்றுதொட்டுத் தமிழில் பாடற்பொருளாக இருந்து வந்துள்ளன. அவற்றைப் பாடும் வகை காலச் சூழலுக்கேற்ப மாறியமைந்தமையும் தெரியவருகிறது. வீரத்தைத் தனித்த நிலையில் பாடும் வழக்கம் புறநானூறு - பதிற்றுப்பத்து போன்ற சங்க இலக்கியங்களுடன் நின்றுவிட்டது. பரணி இலக்கியம் வீரம் பாடுவதாயினும் அது பிரபந்த வகை சார்ந்து, வீரத்தை ஒரு கூறாகக் கொண்டுள்ளது.

இது போலச் சங்ககாலக் காதலும் மாற்றம் அடைந்தது. அதன் வளர்ச்சிப் படிநிலைகளைத் தெ.பொ.மீ. கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்.

*"சங்ககாலத்திலிருந்த கருத்தேற்றம் கொண்ட காதல் திருவள்ளுவரால் இன்னும் தூய்மை செய்யப்பட்டது. திருமூலர் அக்காதலை இறைவன் பால் சார்த்தும் வகையைச் சுட்டினார். ஆன்மாவைத் தலைவியாக்கி இறைவனைத் தலைவனாக்கி என்றுமுள அழியாக் காதலைப் பாடியுருகும் வகையை ஆழ்வாரும் நாயன்மாரும் செய்தனர்". (A History of Tamil Literature, p:76)* -

நாயன்மார் மரபில் வந்த வள்ளற் பெருமான் இந்த அகத்துறை நெறியைக் கையாண்டு அதை மேலும் வளப்படுத்தித் தன்னிகரற்ற எல்லைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தார்.

**பழைமை :**

பழந்தமிழ்ப்பாடல்களில் நட்பினைக் காதல் என்றும் காதலை நட்பென்றும் குறிக்கும் வழக்கம் இருந்தது. சங்கப்

பாடல்களில் இதைப் பல இடங்களில் காணலாம். நண்பனுக்காக உயிர்விடும் துணிவும், காதலுக்குரியவர்க்காகத் தன்னை இழக்கும் விருப்பமும் இருவருக்கும் உள்ள பொதுமைப் பண்பு. காதலின் உயர்வு கருதிச் சங்கப் புலவர் உடலுக்கு முதன்மை தராமல், உணர்வுக்கே முதன்மைதந்து பாடல்களைப் பாடினர். "செம்புலப் பெயல் நீர்போல அன்புடை நெஞ்சம்" இரண்டு ஒன்றுபடும் நெகிழ்ச்சியே அன்று இருந்தது (குறுந்தொகை : 40). ஆனால் பின்னாளில் எழுந்த உலா, பரணி, கலம்பகம் போன்ற சிற்றிலக்கியங்களில் காதல் கழிந்து காமம் ஓங்கி நின்றது. ஒட்டக்கூத்தரின் மூவருலாவும் இதற்கு விதிவிலக்கன்று. குறிப்பாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டுச் சிற்றிலக்கியங்களில் இந்தப் போக்கு மிகுதி. சிற்றரசர்கள், பெருநிலக்கிழார்கள் ஆகியோரை அண்டிவாழ வேண்டிய கட்டாயத்துக்கு ஆளான தமிழ்ப் புலவர்கள் அவர்களை நிறைவு செய்ய காமச்சுவை மலிந்த இலக்கியங்களை எழுதினர். நல்ல தேர்ந்த அறிவிருந்தும், படைப்பாற்றல் இருந்தும் வறுமையால் அவை பயன்படாமல் போயின என்பது தமிழுக்கு இழப்பே.

நாயன்மார், ஆழ்வார்களின் பக்தி இயக்கத்தின் போது மானிடக் காதல் தெய்வக் காதலாக மாறியது. பற்று என்பது ஒரு வல்லுணர்ச்சி. மற்ற எல்லாவற்றையும் மறக்கச் செய்யும் அளவு அது வலிமை வாய்ந்தது. காதலும் ஒரு வகைப் பற்றுணர்ச்சியே. காதல் வயப்பட்டோர் தந்நலம் துறக்கவும், தம்மை ஈன்றோரைக் கூடச் சிலவேளை ஒதுக்கவும் இந்தப் பற்றே காரணம். இறைவன் பால் பற்று வைத்தால் மற்ற பற்றுக்கள் தாமே போகும் என்று குறள் வழிகாட்டுகிறது (350). வைணவம் பேசும் சரணாகதித் தத்துவமும் இதுவே. மானிடக் காதலைத் தெய்வக் காதலாக்கும் வித்தகத்தைப் பக்தி இலக்கியம் காட்டுகிறது.

திருக்குறளில் காமம் உயர்நிலையில் வடிக்கப்பட்டுள்ளது. தலைவியின் தோளில் தான் பெறும் இன்பத்தைத் தாமரைக் கண்ணானின் வைகுந்த இன்பத்தைவிட மேலானது என்று தலைவன் கருதுகிறான் (1103). நாயக நாயகி உணர்வுக்கு இப்படி வள்ளுவர் அடிக்கால் இடுகிறார். அன்னை, தந்தை அத்தனை பேரையும் நீத்துத் தன்னை மறந்து தன் நாமம் கெட்டுத் தலைவன் தாளே எல்லாம் என்று அடைக்கலம் ஆகும் தலைவியைத் திருநாவுக்கரசர் பாடுகிறார். "முன்னம் அவனது நாமம் கேட்டாள்" என்ற பாடல் பக்திநெறியில் தலைவி பெற்ற மணி முடியல்லவா?

(தேவாரம், VI : 25:7). நம்மாழ்வார் ஆடவராக இருந்தும் பராங்குச நாயகி என்றே அழைக்கப்பட்டார். ஆண்டாள் "மானிடர்க்கென்று பேச்சுப்படில் வாழ்கில்லேன்" என்று மன்மதனுக்கே கூறிய நாயகி. ஆழ்வாருக்குப் பின்வந்த கம்பர் தெய்வக் காதலை மானிடக் காதலாக்கி உயர்வுக்கான வழியைச் சுட்டினார். "ஒன்றியபோகமும் யோகமும் ஒத்தார்" என அவர் இராமபெருமானையும் சீதாப்பிராட்டியையும் கூறும்போது பக்திநெறிகள் இரண்டைக் குறிப்பாகக் காட்டுவதும் நோக்கத்தக்கது. தாயுமானவர் அவ்வகையில் இறுதியாக வந்தவர். ஆனந்தக் களிப்பு, பைங்கிளிக் கண்ணி ஆகிய பாடல்களில் அகத்துறைச் சார்பைக் காணலாம்.

**வள்ளற்பெருமான் :**

இந்த வரிசையில் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வந்த வள்ளலார், காமப்பிரபந்தங்கள் மலிந்த நாளில் அந்த உணர்வை மடைமாற்றம் செய்து உயர்நெறிக்குத் தம்பாடல்கள் வாயிலாகத் திருப்பிவிட்டார். பெண்ணோடு சேர்ந்து வாழ்வதே காதலின்பம். "மண்ணில் நல்லவண்ணம் வாழும்" வழியும் அதுவே. ஐயமில்லை. ஆனால் பெண்வழிச் சேர்ந்து ஒருவன் தன் தனித்தன்மையை இழந்துவிடக்கூடாது. ஆதலால், அத்தகையோரை எச்சரிக்கும் வகையாகத் தான் அவர் பெண்வெறுப்புப் பாடல்களைப் பாடினார். இந்த வேறுபாட்டை மறக்கக்கூடாது. மென்மையான காதலுணர்வு பற்றாகி வெறியாகக் கூடாது : மாறாக நாட்பட நாட்பட உடலளவில் மறந்து உள்ளத்தளவில் இறையின்பம் தேடும் நாட்டமாக அது மாற வேண்டும்.

**ஓர் ஐயம் :**

துறவியாக வாழ்ந்த வள்ளலார் காதலின்பம் பற்றிப் பாடத் தகுதியுடையவர் தானா என்ற ஓர் ஐயம் எழலாம். கிறித்தவத்தில் ஜான் என்னும் ஆங்கிலக் கவிஞர் துறவியாக வாழ்ந்தவர். அவர் தெய்வம் சார்ந்த காதற் பாட்டுக்களை எழுதினார். "ஒரு துறவி காதலர்க்குப் பாடம் நடத்துவதா?" எனப் பிறர் அவரை எள்ளிநகையாடினர். "பக்தி முற்றிய நிலையில் காதல் கசிந்துருகும் அவர் அவ்வாறு பாடாமல் இருந்தால்தான் வியப்பு : மண்ணுலகின் அளவுக்குட்பட்ட பற்றுக்களை அவர்கள் அனுபூதிநிலையில் அளவின்றித் துய்க்கின்றனர்" என்ற அறிஞர்கள் அப்படி நகைத்தவர்களுக்கு விடை சொன்னார்கள். (Evelyn Under Hill, Mysticism p : 167)

வள்ளற்பெருமான் பற்றிய ஐயத்துக்கு இந்த விடை மிகப் பொருத்தமானது. அனுபூதி நிலை அடைந்தவர்களுக்கு மண்ணகத்து எல்லைகளான, சாதி மதம், ஆண் பெண் வேற்றுமை, உயர்திணை அஃறிணை வேறுபாடு எதுவும் இல்லை. கால, இடம் என்ற எல்லைகளும் இல்லை. ஒரு காலத்து அனுபவம் மற்றொரு காலத்துக்கும், ஓரிடத்து அனுபவத்தைத் தன்னிடத்தும் உற்றுணர்ந்து அவர்கள் துய்ப்பார்கள். இதனால்தான் இளங்கோவடிகள், திருத்தக்கதேவர் போன்ற துறவுக் கவிஞரும் காதலைப் பாட முடிந்தது. (மு.வ., இலக்கியத்திறன் ப : 137) காதல், அன்பு, நட்பு ஆகியன உள்ளத்தை உருக்கும் உணர்ச்சிகள். அங்கு எந்த வேற்றுமையும் இல்லை. அன்பு அருளாகிப் பக்தியாக முறுகிய நிலையில் யாரும் உருகலாம் : அந்த உருக்கம் பாட்டாக யார் வழியிலும் வரலாம். இதில் தடையேதும் இல்லை. இங்குள்ள உணர்வு உடல் பற்றியதன்று : உயிர் பற்றியது.

**இருவகை :**

அகத்துறைப் பாடல்கள் இரண்டு வகைப்படும். புலவர் தனித்து நின்று தலைவன், தலைவி இருவருடைய காதல் வாழ்வைப் புறவயமாகப் பாடுவது ஒருவகை தலைவனுக்காக அல்லது தலைவிக்காகப் புலவர் இரங்கி, ஏங்கி உருகவும் செய்யலாம். எனினும்இது தொலைவில் நின்ற புனைந்துரைப்பது போன்றதே. இப்படி வருவன தன்னுணர்ச்சிப் பாடல்கள் ஆகமாட்டா. தலைவன், தலைவி இருவர் தவிரப் பாடும் புலவர் என மூன்றாவது மாந்தரும் இங்குள்ளார். கூவிக்கூற்றாகவும், தோழி அல்லது செவிலி கூற்றாகவும் புலவர் காதல் வாழ்வைப் பாடலாம். இருந்தாலும், இப்பாடல்களில் நேரடித் தன்னனுபவமும் உள்ளார்ந்த துய்ப்பும் குறைவு என்பதும் நோக்கற்குரியது.

இரண்டாவது வகை “நாயகநாயகி” பாவம் எனப் பொதுவாகக் கூறப்படுவது ஆகும். பாடுகின்றவர் - ஆணோ பெண்ணோ - தன்னை நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் கொண்டு பாடும் பாடல்கள் இப்பிரிவைச் சேரும். இது அகவயமானது : தலைவி, தலைவன் இருவரைத் தவிர மூன்றாவது கதை மாந்தர் இல்லை. புனைந்துரையோ தோழி, செவிலி கூற்றோ இதில் இல்லை. தலைவி தன் இன்பதுன்பங்களைத் தானே வாய்விட்டுச் சொல்லும் இதுவே தன்னுணர்ச்சிப் பாடலாகும். நேரடித் தன்னனுபவமும் ஈடுபாடும் உள்ளத்துய்ப்பும் இதனுள் உள்ளன.

அகத்துறைப் பாடல்கள் எல்லாம் நாயக நாயகி பாவத்தில் அமைந்தவை எனக் கொள்வதற்கில்லை. மேற்கண்டவாறு இரண்டாம் வகையில் அமைவனவே இப்பிரிவைச் சாரும். இன்னும் ஒரு நுட்பமான வேறுபாடு இந்த இரண்டுக்கும் இடையே உண்டு. புறவயமாக நின்ற புலவர் பாடும்போது சிலவேளை புனைந்துரை வரம்பு கடந்து விடுவதும் உண்டு. அதனால் இயல்பாகச் சுவையின் தரம் தாழ்ந்துவிடும் சூழலும் ஏற்படும். "நாயக நாயகி பாவத்தை ஆள்வது கத்தியின் கூர்ப்பக்கத்தின் மீது நடப்பது போன்ற கஷ்டமான காரியம்" என்று வ.வே.சு. ஐயர் கூறுவது எண்ணற்குரியது. (பாரதியார் கவிதைகள், கண்ணன் பாட்டு முன்னுரை). பாரதி கூட இப்படிப் பாடுகையில் பரபக்தியைவிட உடற்காதலை அதிகமாகப் புனைந்திருக்கிறார் என்றும், சுக முனிவரும் பாகவதத்தில் வரம்புகடந்தே பாடினார் என்றும் வ.வே.சு. ஐயர் மேலும் கூறுகிறார். புறவயமாக நின்று பாடும்போது இப்படி வரம்பு கடக்கும் வாய்ப்பு நிகழ்கிறது.

ஆனால் தன்னுணர்ச்சியில் தன்னை நாயகியாக எண்ணிப் புலவர் பாடும்போது இந்த வரம்பு பொதுவாக மீறப்படுவதில்லை. என்னதான் துன்பமிருப்பினும், என்னதான் இன்பத்துய்ப்பிருப்பினும் தான்பெற்ற எல்லா உணர்வுகளையும் வெளிப்படுத்தும் ஆற்றல் சொல்லுக்கு இல்லை. தாம் துய்த்த இன்பம் இன்னவாறிருந்தது என்ற கூற முடியாத உணர்வு "அகம்" என நச்சினார்க்கினியர் கூறும் ஒன்றைப் பாட்டால் முழுதும் எழுத வழியில்லை. ஆதலால் உருக்கமும் கனிவும் இத்தகைய பாடல்களில் மிகுதியும் இருக்க அதுவே காரணம்.

அருட்பா :

அருட்பாவில் மொத்தம் 933 பாடல்கள் அகத்துறையில் அமைந்தவை என ஊரன் அடிகள் குறிக்கிறார் (திருஅருட்பா, ப : 74,75). இவை தவிர, இன்னும் 82 பாடல்கள் இப்பிரிவில் சேர வேண்டும். (பா : 5625-69 ; 2950-63). இவற்றையும் சேர்த்தால் மொத்தம் 1015 பாடல்கள் அகத்துறை சாரும்.

இவற்றுள் தாய் கூற்றாக 49 : தோழி கூற்றாக 16 : எஞ்சிய அனைத்தும் தலைவி கூற்றாக அமைந்துள்ளன. வேறொரு வகையில், மொத்தம் 56 பதிகங்கள் : 46 நாயக நாயகி பாவம் : 9 அகத்துறைப் பதிகங்கள் : தனித்திரு அலங்கல் இரண்டும் கலந்தது

என அமைந்துள்ளன. ஏறக்குறைய ஐந்தில் ஒரு பங்குப் பாடல்கள் அகத்துறையின என்பது பெரிதும் நோக்கற்குரியது.

**தெய்வக்காதல் அனுபூதிநிலை காட்டுவது :**

இந்த அகத்துறைப் பாடல்கள் குறியீட்டுக் கவிதைகளாகப் பெரிதும் அனுபூதி நிலையை உணர்த்துகின்றன. அனுபூதி நிலையிலுள்ள பக்தனும் மானிடக் காதலனும் உணர்ச்சியால் ஒத்த நிலையில் உள்ளார்கள். இறையனாரகப் பொருள் நூல், அன்புடையார் குணங்களாகச் சாவிற் சாதல், நோவில் நோதல், ஒண்பொருள் கொடுத்தல், நன்கினிது மொழிதல், புணர்வு நனிவேட்டல், பிரிவு நனியிரங்கல் என்பவற்றைக் கூறுகிறது (ப : 15). இவற்றுள் பல மேற்சொன்ன இருவகைக் காதலருக்கும் பொதுவானவை. அன்பிற்காக எளிமையில் தோய்வது : அன்பில் திளைப்பது அவர்களிடம் காணக் கூடிய முதன்மைப் பண்புகள். (Evelyn Underhill, Mysticism, p:106) அனுபூதிக் கவிஞரின் ஆன்மிகக் காதலை வெளியிடும் மொழி பொருளற்றதாகி விடுகிறது. எனினும் உடல்பற்று காரணமாகத் தொடங்கும் மானிடக் காதல் முற்றிய நிலையில் உயிர்க்காதலாக ஆவதும் உண்டு : தெய்வம் நோக்கிச் செலுத்துவதும் உண்டு.

*"இகத்துள சுகத்திற்கு அளவுகோலாய்ப்*
*பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்"*

இல்லறத்தைப் பாடும் வாணி இங்கு நினைவுக்கு வருகிறாள். (மனோன்மணீயம், I: 4 : 97-99).

இறைவனைத் தன்னேரிலா ஆண்மைத் தத்துவமாக்கி, மானிட உயிரைப் பெண்மையின் அடையாளமாக்கி, இரண்டின் உறவையும் "அனுபூதிப் பரவசம்" எனப் பெயரிட்டு மானிடத்தைத் தெய்வத்துடன் இணைக்கின்ற வழியாய் மண்ணின் வாழ்க்கைக்குப் பக்திக் கவிஞர்கள் உயிர்ப்பு தருகின்றனர். (C.F.E.Spurgeon, Mysticism in Eng. Lit. p:50) "அன்பு என்பதொன்றின் தன்மை அமரரும் அறிந்த தொன்றால்" எனக் கம்பர் அன்பு, தெய்வ நிலை பெறுவதைப் பாடுகிறார். (யுத்த : மருத்து : 4). வள்ளலார் இந்த அன்பு நிலையை விரித்து இறைவன் அன்புப்பிடியுள் அடங்குவான். அன்பெனும் கரத்துள் அமுதமாக அமர்வான். அன்பெனும் வலைக்குள் பரம்பொருளாய் அகப்படுவான் எனப் பாடி மகிழ்கிறார் (3269). காதல் வலையில் பரம்பொருளும் சிக்குவது புதிதில்லை. "யானுனைத் தொடர்ந்து

சிக்கெனப் பிடித்தேன்" என்று மாணிக்கவாசகர் தாம் அடைந்த பேற்றைக் குறித்ததும் எண்ணற்குரியது.

பரம்பொருள் மீது கொள்ளும் இக்காதல் பொருளற்றதோ வெறும் உணர்ச்சி வயப்பட்டதோ அன்று. ஆழ்ந்து, தன்னலம் மறுக்கும் அளவு வலிமையாகி எதிர்வரும் துன்பங்களைத் தாங்கும் ஆற்றலும் பெற்றதாகும். இறைவன் மீது கொள்ளும் இந்தப் பற்று அவனருள் பெற்றாலன்றி நிறைவடைவதில்லை.

மானிடத் தலைவிக்குத் தன்தலைவனின் ஒவ்வொரு பொருளும் மதிப்புடையது. தலைவனுடைய பொருள்களைக் "கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று, அறியும்" அவள் இன்பம் தலைவனோடு கூடிப்பெறும் இன்பத்துக்கு இணையானது. இருவரிடையே இருக்கும் இந்த அன்பின் இனிமையைக் காதலேயன்றிப் பிறிதோர் உணர்ச்சி புலப்படுத்துவதில்லை. இறைவனோ மேம்பட்ட தலைவன். இவ்வுலகப் பொருளெல்லாம் அவனுடையன. "மண்ணும் நீ விண்ணும் நீ மறிகடல்கள் ஏழும் நீ" என்று பாடும் வண்ணம் தெய்வக் காதலிக்கு எல்லாம் அவன் அன்பின் வடிவங்களாகின்றன. "உண்ணும் உணவும் பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும்" அவனே எனும் முனைப்பு வந்துவிட்டால் பார்க்கும் இடமெல்லாம் பரம்பொருளைக் காணும் முதிர்ச்சி தானாகக் கனிந்துவிடும். உலக உயிர்களும் இறைவன் வடிவங்களாகத் தோன்றும் நிலை பெற்றபின், அவை துன்புறுவதைக் காணில் தான் தொழும் இறைவனே - அருட்தலைவனே - துன்புறுவதாகத் தெய்வக் காதலி எண்ணுகிறாள். "வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்" என்னும் அருட்பாவை இந்தப் பின்னணியில் நோக்க வேண்டும். அது வெறும் உயிரிரக்கம் மட்டுமன்று ; வாடிய பயிருக்குள் வாடிய இறைவனைக் கண்டு வாடிய அருட்பாத் தலைவியின் நெஞ்சுருக்கத்தைக் காண முடியும். தெய்வக் காதலின் விளைவும் : வெற்றியும் அதுவே. இந்தக் காதல் தூய்மையானது : அறம் சார்ந்தது : எளிமையானது : இடையறாது தொடர்வது : தோல்வியால் தளராதது : துன்பம் கண்டு சோர்வடையாத உறுதியுடையது என்று அண்டர்ஹில் கூறுகிறார். (Mysticism, p : 106). தன்னுடைய அன்பையும் ஆசையையும் இறைவன் மீது வைத்த ஓருயிர் இறையருள் பெறும்போது அந்தக் காதல் நிறைவையும் அடைகிறது.

**அருட்பாத் தலைவி :**

அருட்பாத் தலைவியின் காதல் அனுபவங்களை இரண்டு நிலைகளில் காணலாம். தலைவனை - நாயகனாகிய இறைவனை - எண்ணி எண்ணி ஏங்கி அவனோடு கூடுவதற்கு விழையும் மனநிலை முதலாவது : அவனுடன் கூடி இன்பம் பெற்ற பிறகு இருப்பது இரண்டாவது.

முதல் நிலையைக் காட்டும் அகத்துறைப் பாடல்கள் திருத்தணிகைப் பதிகங்களில் தொடங்குகின்றன. தணிகை முருகனைக் காணத்துடிக்கும் தலைவி தன் ஏக்கத்தைப் "பேரன்பு, ஆறாத்தாகம், அழியாக்காமம்" என்றவாறு குறிக்கிறாள். தொழுவார் அழுவாராகி அடியார் எல்லாம் அவருக்கு ஏங்கித்துதித்து நின்றபோது அவளைத் தேடி வந்து அவர் அருள் தந்தார் (407). தன் தலைவனை விமலனார், பித்தப் பெருமான் திருமகனார், என் நாயகனார், என்னுயிர் போல்வார் என்று பலபடக் கூறிப் பெருமைப்படுகிறாள் (402-3). மயிலேறி வரும் பெருமானின் பவனிகண்டு தான் நிறையழிந்ததாகக் கூறுவது பவனிச் செருக்கு என்னும் பதிகமாகும். "எனை யானே மறந்தேன்" "நீரார்விழி இமைநீங்கின நிறை நீங்கியது" என்னும் தொடர்கள் தன்னை இழக்கும் தலைவியின் மகிழ்ச்சியைக் காட்டுகின்றன (441,42). தன்னை மறத்தலும், நிறையழிதலும் எல்லாத் தலைவியரிடமும் காணப்படுவனவே. ஆனால் இங்கு விழிகள் இமைகளை விட்டு நீங்கின என்பது உணர்வின் உயிர்நிலையாகும். அவனோடு அவள் விழிகளும் போயின.

"*மான்கண்டகை உடையார்தரு மகனார்தமை மயில்மேல்*
*நான்கண்டனன் அவர்கண்டனர் நகைகொண்டனம் உடனே*
*மீன்கண்டன விழியார்அது பழியாக விளைத்தார்*
*ஏன்கண்டனை என்கின்றாள் அனை என்என்று*
*உரைக்கேனே*" (445)

என்னும் பாட்டில் - குறிப்பாக இரண்டாம் வரியில் - கண்ணொடு கண்ணிணை நோக்கும் திருக்குறள் தலைவியின் நெஞ்சம் தோய்கிறது.

தன்வேட்கையைத் தீர்க்க வேண்டும் என்று ஒற்றியூர் இறைவனை இறைஞ்சும் அருள்விடை வேட்கைப் பதிகம் ஏசல் போல் அமைந்தது (713-22).

*"பாற்கடலில் பரவிய நஞ்சை உண்டவர்க்குத்*
*தன் துன்பம் தீர்க்க முடியாதா?*
*நிலவைத் தலையில் சூடியவர்க்குத் தன்நிலாமுகம்*
*பிடிக்காதா?*
*அன்பர் மனம் எனும் தூயதிருத்தலங்களில் எழுந்தருளும்*
*இறைவனுக்குத் தன்மனம் மட்டும்கோயிலாகாதா?"*

என்பன போல உள்ளுறைக் கருத்துக்களை வைத்துத் தலைவி தன் ஆற்றாமையை வெளிப்படுத்துகிறாள்.

**திருமணமும் பிரிவும் :**

தலைவியின் காதல் நிறைவேறுகிறது. ஒருநாள் அவள் தலைவனுக்கு மாலையிடுகிறாள். "**அவரும்**" அவளுக்கு மாலையிட்டார். ஊரறிய நடந்த திருமணம் அது. அவ்வளவே. அதற்குப் பின்னர் அவருடைய இன்பம் கிடைக்கவில்லை.

"............ *அவர்க்கு மாலையிட்ட கடனே அன்றி மற்றவரால்*
*பண்டம் அறியேன் பலன் அறியேன் பரிவோடணையப்*
*பார்த்தறியேன்*" (1516)

என்று முறையிடுகிறாள். இந்தப் பாடல் வரும் இரங்கல்மாலை என்னும் பதிகம் (1513-43) தலைவியின் கழிவிரக்கத்தைப் புலப்படுத்துகிறது.

"*வருதி எனவே மாலையிட்டார் வந்தால் ஒன்றும்*
*வாய்திறவார்*"
"*வாவென்றுரையார் போ என்னார் மௌனம் சாதித்து*
*இருந்தனர் காண்*
*ஆ வென்றலறிக் கண்ணீர்விட்டு அழுதால் துயரம் ஆறுமடி*"

என்பன போலத் தன் தோழியிடம் குறை சொல்லித் துடிக்கும் தலைவியின் நெஞ்சத் தவிப்பைப் பதிகம் முழுதும் காணலாம்.

திருமணத்துக்குப் பின் "வருவேன்" என்று போன தலைவன் வரவில்லை. எள்ளா நின்ற பெண்கள் எல்லாம் தலைவியை இகழ்ந்து பேசுகிறார்கள். காமன் கணை தொடுத்தான். "மதியுமிழ்ந்து எரிவிழுங்கி மருள்மாலை" (சிலம்பு) வருகிறது. அந்திப்பொழுதோ வந்தது இனி அந்தோ மதியம் அனல் சொரியும் (1607) என்ற தலைவி அஞ்சுகிறாள். அவளுக்கு ஏற்படும்இந்த விரகதாபத்தைப் "புணரா விரகு பொருந்துறு வேட்கையின் இரங்கல்" என்ற தலைப்பில் ஒரு பதிகத்தில் அவளே கூறுவதாக உள்ளது (1604-33). சுந்தரரையும் பரவையாரையும் சேர்த்து வைக்கத் தூதுபோனவர் தன்னைப் பிரிவுத் துன்பத்தில்

ஆழ்த்தியது சரியா? "அன்பர்களோடு ஊடல் அறியா ஒற்றியினார்" தன்னுடன் மட்டும் வேறுபடுவது ஏன்? என்பனபோல் தலைவி எழுப்பும் கேள்விகள் அவள் தவிப்பைக் காட்டுவன. "மங்கைப் பருவம் மணமில்லா மலர் போல் ஒழிக வாடு"கின்ற தலைவியின் நிலை இதுவாகும்.

**கனவு :**

நேரில் வராத தலைவனை அவள் கனவில் கண்டாள். அந்த அருட்காட்சி கூடச் சிறிது நேரமே கிடைத்தது. தோழியிடம் இந்தக் கனவைப் பற்றிக் "காட்சி அற்புதம்" என்னும் பதிகத்தில் கூறுகிறாள் (1645-54). "என்னடி நான் கனவோ நனவோ கண்டதுவே" என்று ஒவ்வொரு பாடலும் முடிகிறது. எல்லா நினைவும் அவனேயாகச் செயலற்றுள்ள தலைவியை இங்கு காணலாம். கனவில் கண்ட தலைவனின் அழகைப் பலபட புனைந்தும் வியந்து அவள் கூறும் கூற்றுக்கள் அவள் விரகதாபத்தின் கடுமையைக் காட்டும். "ஆதல் ஒழியா எழில் உரு", "கொன்றை மலர் மாலை அழகு", "எழுதிமுடியா அழகு", "எல்லையில்லா அழகு", "யார்க்கும் அடங்கா அழகு" என்று அடுக்கடுக்காக வரும் தொடர்கள்.

*"ஐயோ இவன் வடிவென்பதோர்*
*அழியா அழகுடையான்"*

என்னும் கம்பர் தொடரை நினைவூட்டுகின்றன. மென்மேலும் வளர்ந்து நிறையும் அழகு என்பதை ஆதல் ஒழியா எழில் என்று சுட்டி அந்தப் பேரழகில் திளைக்கும் பேற்றைக் கனவில் தலைவி பெறுகிறாள்.

அழகு மட்டுமல்ல : இறைவனின் பெருமைகளாகச் சில பண்புகளையும் அடையாக்கிச் சொல்லிச் சொல்லி மகிழ்கிறாள். "புல்லர் மனத்துப் போகாதார்", "அன்புடையார் மனத்துள் இனிக்கும் அற்புதனார்", "போதம் மணக்கும் புனிதர்", "மன இரக்கம் மிக உடையார்" என்னும் தெய்வப் பண்புகள் பரம்பொருள் இயல்பைக் காட்டுவன. இவற்றையெல்லாம் விஞ்சுமாறு "அடியார் வருந்த உடன்வருந்தும் ஆண்டை" என்ற புனைவு இறைவன் அடியார்க்காக இரங்கியருளும் எளிமையைக் காட்டுவதோடு, தனக்காகவும் அப்படி வர வேண்டும் என்ற அவள் ஏக்கத்தையும் காட்டும். "ஆண்டை" அழகுச் சொல். "தலைவன் : முதலாளி" என்னும் பொருளுடையது. தொழிலாளிக்காக இரங்குபவனே உண்மை முதலாளி என்பது உயர்ந்த கோட்பாடல்லவா?

**பிறர் பழித்தல் :**

தலைவியைத் துன்பத்தில் ஆழ்த்தியதற்காகத் தலைவனை ஊரார் ஏசுகின்றனர். ஊரை ஒற்றி வைத்தவன் : பிச்சை எடுத்து வாழ்பவன் : கட்டத்துணியின்றிக் கந்தை உடுத்தியவன் : பாம்பை அணிந்தவன் : காபாலி : நஞ்சுண்பவன் : (அவனோடு சேர்ந்து இவளும் நஞ்சுண்பாளோ?) சுடுகாடே அவன் வீடு : "உருக்கும் நெருப்பே அவர் உருவம் உனக்கும் அவர்க்கும் உறவாமோ?" என்றெல்லாம் எள்ளி நகையாடுகின்றனர். இந்த எள்ளலும் ஏசலும் தலைவன் மீது (1686-90) அவள் கொண்ட பற்றைச் சிறிதும் குறைக்கவில்லை. மாறாக இவை அந்தப் பற்றை இன்னும் முனைப்பாக இறுக்கமாக ஆக்கின.

"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்
நீராக நீளும்இந் நோய்" (1147)

என்று குறளின் தலைவி இதே நிலையில் உறுதியாக நின்று வழிகாட்டி இருக்கிறாளே! இறைவனாகிய தலைவன், மலர் போன்ற அவனுடைய திருவடி தவிர வேறொன்றிலும் அவள் மனம் செல்லவில்லை. "ஐந்து பேரறிவும்" அவன் அருள் வேண்டித் தவம் செய்த நேரம் அது. தலைவனின் உடையோ கோலமோ, ஊரோ உறைவிடமோ அவளுக்கு ஒரு பொருட்டில்லை. புறக்கோலம் கண்டா அவள் அன்பு கொண்டாள்? எதற்காக அது தளர வேண்டும்? "அவன் உருவம் உருக்கும் நெருப்பு" தான். அது ஊராரைவிட அவளுக்கு அதிகமாகத் தெரியும். ஆனால் அந்த "உருக்கும் நெருப்பில்" தானும் உருகவே விரும்புகிறாள். காதல் சிறப்புக் கதுவா மாண்பு என ஒரு பதிகம் (1696-1707). புறங்காட்டில் நடித்தார் என்றாலும், பிச்சை எடுத்தார் ஆனாலும், கூலிக்காக மண் சுமந்தார் என்றாலும் ... என்று இவ்வாறு சிவபெருமான் திருவிளையாடல்களையும், கோலங்களையும் ஒவ்வொரு பாட்டிலும் கூறி, அந்தக் காரணங்களுக்காக "நான் அவர்மேல் காதல் ஒழியேன் கனவினுமே" என்று சூளுரைக்கிறாள். அந்தக் குன்றொத்த திட்பமே - உறுதியே - "தன்னை மறந்து தந் நாமம் கெட்டுத் தலைவன் தாளில் தலைப்படும்" காதலின் வெற்றியாகும். புறத்தார் கூறும் பழிச் சொற்கள் அந்தத் திண்மையைச் சிறிதுகூட அசைக்க முடியாது.

இரண்டாம் திருமுறையில் வரும் இங்கிதமாலையும், ஆறாம் திருமுறையில் வரும் அனுபவமாலையும் அகத்துறையின் பல

நுண்பொருள்களைச் சிறக்கக் கூறுகின்றன. மானிடக் காதல் தெய்வக் காதலாக மாறும் படிநிலைகளை இவையிரண்டும் கூறகின்றன.

*"தமிழ் மக்களின் தலைசிறந்த செம்பொருள் துணிவுடையது : முற்றிலும் அக அனுபவம் வாய்ந்தது : நேர்மொழிகளில் சொல்ல முடியாதது : மறைமுகமாகச் சொற்பொருள்களிலும் சொற்களிலும் திளைப்பது"*

என்று பாலகிருஷ்ணபிள்ளை இங்கிதமாலையைப் புகழ்கிறார் (V:14). உலகியலும் அருளியலும் சேர்ந்த இன்பப் பாடல்களைக் கொண்டது இப்பதிகம். 1904இல் வள்ளற்பெருமான் மறைவுக்குப் பின் 30 ஆண்டுகள் கழித்து - ஏறக்குறைய இன்றைக்கு நூறாண்டுகளுக்கு முன் இங்கிதமாலைக்குத் தத்துவ விளக்கம் கூறி இரண்டு நூல்கள் வெளிவந்துள்ளன. அதன் பெருமை இதனால் விளங்கும்.

**தலைவி நிலை :**

ஊராரின் எள்ளல் தலைவியின் உறுதியைக் குலைக்கவில்லை : என்றாலும் தன்னை ஏற்றருள் புரியாத தலைவனை அவள் கடிந்து பேசுகிறாள். இது இயற்கை தான்.

*"நேரமுழுதிலும்அப் பாவிதன்னையே - உள்ளம்*
*நினைத்து மறுகுதடி தங்கமே தங்கம்"*

என்று பாரதியின் கண்ணம்மா பஞ்சையுள்ளத்தோடு உருகியது தெரிந்ததே. என்றாலும், என்ன சினம் இருப்பினும் எங்கிருந்தோ கேட்டாலும் "பண்ணொன்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டால்" கண்ணம்மாவின் வெறுப்பு மறைந்து போகிறது. கண்ணம்மாவுக்கு முன்னால் அருட்பாத் தலைவி இப்படியே துன்புற்றாள்.

*"சினந்துரைத்தேன் பிழைகள் எல்லாம் மனம் பொறுத்தல் வேண்டும்"*

*"முனிந்துரைத்த பிழைபொறுத்துக் கனிந்தருளல் வேண்டும்"*

*"வெறுத்துரைத்தேன் பிழைகளெலாம் பொறுத்தருளல் வேண்டும்"*

என்று அவனைப் பழித்தும், அதற்காக மனம் வருந்தி மன்னிப்பு கேட்டும் காதல் நெஞ்சம் மறுகுகிறது.

தலைவன் இன்னும் ஏற்று அருள் காட்டவில்லை : மனமிரங்கவில்லை.

*"என்பாட்டுக்கு இருந்தேன் இங்கெனை வரிந்து மணம்
குறித்துக் கொண்டாய் நீ கொண்டது தொட்டு எனது
மனம் வேறுபட்டதில்லை"* (3013)

என்று தன்னுடைய ஒன்றிய, நிலைபெற்ற மனஉறுதியைச் சொல்லி முறையிடுகிறாள்.

*"பின்னுளநான் பிதற்றல் எலாம் வேறுகுறித்து எனை
பிழையேற்ற நினைத்திடிலோ பெருவழக்கிட்டுவேன்"*

என்று (3021) தலைவி அச்சுறுத்துகிறாள். ஏற்கெனவே சுந்தரர் வழக்கை எதிர்கொண்ட தலைவனுக்கு இப்படி மீண்டும் ஒரு அறைகூவல்! கண்ணன் மனநிலையை அறிய முயன்று முடியாமல் போனால்

*"ஆற்றங்கரை யதனில் முன்னம் ஒருநாள் எனை
அழைத்துத் தனியிடத்தில் பேசிய தெல்லாம்
தூற்றி நகர் முரசு சாற்றுவேன்"*

என்று கண்ணம்மாவும் கூறுகிறாள். இது அவனைப் பழிவாங்க வேண்டும் என்னும் நோக்காலன்று : தன் வேட்கை தீர வேண்டுமே என்ற விரைவால் வந்தது.

தலைவிக்கு யார் துணையும் இல்லை. "பெற்றவளும் உற்றவரும் சுற்றமும் நீர்" என்றே இறைவன் திருவடியைப் பற்றி வாழ்பவள் : அவன் அருளவில்லை என்றால் களைகண் யார்? எங்கு போவது? அருள் வழங்கினும் மறத்துவிட்டாலும் அவன் திருவடிகள் தவிர வேற சார்பில்லை. "பற்றுநான் மற்றிலேன் கண்டாய்" என்கிறாள் திருவாசகத் தலைவி. காதல் நெஞ்சத்துக்கு இந்த உணர்வு பொதுவானது.

தலைவனோ பரம்பொருள் : "ஊன் மறந்த உயிரகத்தே ஒளிநிறைந்த ஒருவன்" : முடிவற்றவன் : உலகத்துயிர்க்கெலாம் தலைவன் : அண்டங்கள் எல்லாம் அவன் இருப்பிடம் : தலைவியோ ஒற்றைத் தனி உயிர் : சிற்றிடத்தில் வாழ்பவள். ஆதலால் அவனருள் தனக்குக் கிட்டாது போயிடுமோ என்று அஞ்சுகிறாள். ஆனால் தலைவனை முழுதுமாக அறிந்தவள் அவள்.

*"மருளுடையான் அல்லன் ஒரு வஞ்சகனும் அல்லன்
மன இரக்கம் மிக உடையான்"* (3020)

என்பது அவள் பெற்ற அனுபவத்தால் கண்ட முடிவு. அவன் தனக்குக் கருணை காட்டாதிருப்பது தன்மீது கொண்ட வெறுப்பாலன்று என அவளுக்குத் தோன்றியது. "நல்லன் எனப்

பலகால் விழித்தறிந்தும்" தலைவனைச் சினப்பதில் பொருளில்லை.

"*வேண்டத்தக்கது அறிவோய் நீ*
*வேண்ட முழுதும் தருவோய் நீ*'

என்ற திருவாசக மனநிலை அவளுக்கு வந்தவிட்டது.

"*தான் மறந்தான் எனினும் இங்கு நான்மறக்க மாட்டேன்*
*தவத்தேறி அவத்திழியச் சம்மதமும் வருமோ?*" (3025)

என்று தோழியிடம் கேட்டு நிலை கொள்கிறாள். "நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்" என்று பாடிய சிலப்பதிகார மாதவி நினைவுக்கு வருகிறாள்.

**தூது :**

தூதைப் பாடுபொருளாகக் கொண்டு சில பாடல்கள் அருட்பாவில் உள்ளன. தூது சங்க இலக்கியத்திலேயே காணப்படுகிறது. அங்கு தலைவன் பெயர் கூறப்படுவதில்லை. பிற்கால இலக்கியங்களில் தலைவன் பெயர் சூட்டுவதோடு நில்லாமல் அவன் புகழே பெரிதும் பாடப்படுகிறது. அருட்பாவில் இரண்டு பதிகங்கள் இப்படியுள்ளன. "நாரையும் கிளியும் நாட்டுறும் தூது" என்றே ஒன்றுக்குத் தலைப்பு உள்ளது. நாரை, வண்டு, கிளி, எகினப்புள் ஆகியவை தூதுப்பொருளாக வள்ளலார் பாடுகிறார். சோதிடம் நாடல் (1676-85) என்னும் பதிகத்தில் முப்புரிநூல் அணிந்த அந்தணனைப் பார்த்து,

"*ஒற்றியினார் தமக்கும் எனக்கும் மணப்பொருத்தம்*
*உண்டோ இலையோ சோதிடம்பார்த்து உரைப்பீர்*
*புரிநூல் உத்தமரே*"

என்று பாடல் தோறும் வினவுவது ஒரு வகையில் தூது போலவே தெரிகிறது.

**உலா :**

தூதனுப்பியும் வாராத தலைவனை, அவன் திருவீதியுலா வரும்போது தொலைவிலிருந்து தலைவி கண்டு மகிழ்கிறாள். ஐந்து பதிகங்களில் இது பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. பவனிச்செருக்கு, திருஉலாப்பேறு, திருஉலாவியப்பு, திருஉலாத்திறன், திருக்கோலச்சிறப்பு எனப் பெயர்களே உலாவரும் தலைவன் பெருமையைச் சுட்டுகின்றன.

"*நான் கண்டனன் அவர் கண்டனர் நகை*
*கொண்டனம் உடனே*

*மீன்கண்டன விழியார் அதுபழியாக விளைத்தார்*
*ஏன்கண்டனை என்றாள் அனை என்னென்று*
*உரைக்கேனே"* (445)

என்ற பாடல் அழகுக் குவியல் எனல் வேண்டும். "நான் பார்த்தேன்: அவரும் பார்த்தார் : இருவரும் ஒருவர்க்கொருவர் சிரித்தோம். அதைக் கண்ட மீன்விழிப்பெண்கள் அலர் பேசினர்: அதைக் கேட்டுத் தாய் சினந்தாள் : ஏன் அவனைப் பார்த்தாய்? என்கிறாள். அவளுக்கு நான் என்னவென்று சொல்வது?" என்ற தலைவியின் கேள்வி காரணகாரியத் தொடர்பின்றி உயிர் இறைவனை நாடும் நாட்டத்தை எழிலுறக் குறிக்கிறது.

"இனி வாழ்வேன் மனம் மகிழ்ந்தே" என்று அவள் கூறுமாறு, உலா வந்த தலைவன் அவளை இனம் கண்டுகொண்டான்.

*"சேயை அருளும் திருஒற்றித் தியாகப் பெருமான் வீதிதனில்*
*தூயபவனி வரக் கண்டேன் சூழ்ந்தமகளிர் தமைக் காணேன்*
*தாயை மறந்தேன் அன்றியும் என்தனையும் மறந்தேன்*
*தனிப்பட்டேன்"* (498)

திருவீதியுலா வரும்போது இறைவன் தனியாய் வருவதில்லை : ஊரெல்லாம் கூடியிருக்கும் போது தன்பின்னால் அடியார் புடை சூழ வருவதே மரபு. அத்தனை பேர் இருக்கும் போது நாயகனைக் கண்ட தலைவி தாயை மறந்ததும் தன்னை மறந்ததும் சரியாகலாம். ஆனால் "தனிப்பட்டேன்" என்று அவள் மகிழ்வது சரியாகுமா? உலகியலில் இருந்து கொண்டே இறையின்பத்தில் தோயும் வித்தகம் இது என அவள் காட்டுகிறாள்.

அவள் தவம் வெற்றி பெறுகிறது. இறுதியில் தலைவன் வந்து சேர்கிறான். "சிக்கெனப்" பிடித்த மகிழ்ச்சி தலைவிக்கு ஏற்படுகிறது.

*"அன்றிதோ வருகின்றேன் என்று போனவர் அங்கே*
*யார்செய்த தடையாலோ இருந்தார் என்கையில் சங்கை*
*இன்றுதம் கையில் கொண்டே வந்து நிற்கின்றார் இங்கே*
*இந்தக் கதவை மூடு இவர்போவதினி எங்கே"* (4498)

என்று தோழிக்குக் கட்டளையிடுகிறாள். தனக்கும் அவனுக்கும் பெருவழக்கு இருக்கிறது. "வருகிறேன்" என்று நெடுநாளுக்கு முன் சொல்லிப் போனவன் இன்று வந்துள்ளான். இனி அவனை

விடலாகாது. கதவைச் சார்த்தித் தாழிடு என்பது போல வரும் பாடல்கள் அகத்துறையில் புதுமையானவை.

"*கண்கள் உறங்கல் எனும் காரியமுண்டோ*
*கண்ணனைக் கையிரண்டும் கட்டலின்றியே*"

என்று பாரதி பாடுவதற்கான அடித்தளத்தை அருட்பாவில் காண்கிறோம்.

**ஆறாம் திருமுறை :**

தலைவனோடு கூடி இன்பம் பெற்றபின் உள்ள தலைவியின் மனநிலையை ஆறாம் திருமுறையில் பல பாடல்கள் காட்டுகின்றன. இன்பம் காணத் துடித்த தலைவியின் ஏக்கம் தீர்ந்தது. "ஆறாத இன்பம் அருளும் மலையாக"த் தலைவன் வந்து குறை தீர்த்தான். இறைவனுடன் கலந்த பின்னர் அவளுக்கு "இல்லாமை" இல்லை. அவள், "எச்சமயத் தேவரையும் இனி மதிக்கமாட்"டாள். "மற்றவர்போல் இறந்து பிறந்து" உழலமாட்டாள். "எண்கலந்த போகம் எலாம் சிவபோக"த்தில் இருப்பதை உணர்ந்து கொண்டாள். "ஈனம் அறுத்து மெய்ஞ்ஞான விளக்கை" அவள் இதயத்தில் இறைவன் ஏற்றினான் (4213-20). தலைவன் தன்னை ஆட்கொண்டு இன்பம் தந்தமைக்கு "என்ன புண்ணியம் செய்தேனோ?" என்று தாயிடம் சொல்லிச் சொல்லி மகிழ்ச்சிக் கூத்தாடுகிறாள் (4487-95). பல பாடல்கள் இப்படி அவள் நெஞ்சின் மலர்ச்சியைக் காட்டுகின்றன.

**இன்ப நிலை :**

இந்த இன்பம் உடம்பால் வந்தது : ஆனால் மானிட உடம்பாகிய அழியும் கருவியாலன்று. மனமே இங்கு உடம்பு. இறைவனுடன் இரண்டறக் கூடித்திளைக்கும் ஆன்மக் களிப்பு இதுவே. அழியாத, என்று முள பேரின்பம் என இதைக் கூறல் தகும்.

"*ஊன் செய்த மெய்யும் உயிரும் உணர்வும் ஒளிமயமாக்*
*கோன் செய்வே பெற்றுக் கொண்டேன் உண்டேன்*
*அருட்கோன் அமுதே*" (4814)

என்ற தலைவி சொற்கள் உடம்பைத் தாண்டி உயிரும் உணர்வும் ஒளிமயமாய் இன்பக் கடலில் மூழ்கியதைச் சுட்டும். அந்த மகிழ்ச்சியை இன்னதென்று சொல்ல முடியாது. "ஏழ்கடலில் பெரிதன்றோ நான் அடைந்த சுகம்?" என்று அவள் வியப்பது மெய்தான். தினையளவு கூட விகற்பமில்லாத இந்தக் கலப்பால் பெற்ற நிறைவை சொல்லால் விளக்க முடியாது.

"*மகிழ்ந்து நினைத்திடும் தோறும் மனம்கனிவுற்றுருகி*
*............ இனித்தினித்துப் பொங்கி*"

அந்த இன்பம் தளும்புகிறது. "எண்ணும் பொழுதில் எல்லாம் அவன் கை இட்ட இடத்தினிலே தண் என்று இருந்ததடி புதிதோர் சாந்தி பிறந்ததடி" என்று பாரதியின் கண்ணம்மாவும் இப்படி இன்பநிலையில் தத்தளிக்கிறாள். இந்த இன்பத்தின் முன்னால் மண்ணகத் தின்பம் பொருளற்றது. "வையகமும் வானகமும் கொடுத்தாலும் அதற்கு மாற்றாக மாட்டாது."

"புகலரும் பேரானந்த போக வெள்ளம்" எனச் சொல்ல முடியாத அந்த மகிழ்ச்சியைச் சொல்ல முயல்கிறாள். நோயுற்றோர் கூட இந்நிலை பெற்றால், நோய் நீங்கப் பெறுவர் என்றும், இந்தப் புதிய வனப்பாலும் வலிவாலும் முன்னைவிட அவர் உடம்பு பொலியும் என்றும் அண்டர்ஹில் கூறுகிறார். (Mysticism, p:73)

"*மணவாளர் எனைப்புணர்ந்த புறப்புணர்ச்சித் தருணம்*
*தான்பதித்த பொன்வடிவம் தனையடைந்து களித்தேன்*"
(580)

என்பது வள்ளலார் வாய்ச்சொல். பொன்னுடம்பு பெறுவது என்றால் என்ன என்பதற்கு விளக்கம் இது.

இந்தக் கருத்துக்கள் எல்லாம் திருவடிப் பெருமை, அனுபவமாலை ஆகிய பதிகங்களில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. ஆன்ம அனுபவம் ஒரு இன்பம்தேடும் பயணமாகவே தொடர்கிறது. தெய்வத்தருள் பெற்றபின், அவர் அடைந்த பொன்னுடம்பில் ஒரு புதிய நறுமணமும் சேர்ந்து கொண்டது.

"*எம்பரத்தே மணக்கும்அந்த மலர்மனத்தைத் தோழி*
*என்னுரைப்பேன் உரைக்கஎன்றால் என்னளவன்று*"

எனச் சொல்லுக் கடங்காத சுகம் பரவுகிறது. அவள் உடம்பு முழுதும் கற்பூரம் போல மணந்தது கணவர் திருமேனிக் கலப்பால் ஏற்பட்ட விளைவு.

முன்னர் அவளை எள்ளி நகையாடிய - தாய் - தோழி - ஊரார் முதலானோர் பார்த்து மருண்டனர் : வியந்தனர் : போற்றினர்.

"*அஞ்சு முகம் காட்டிய என் தாயர் எலாம் எனக்கே*
*ஆறுமுகம் காட்டி மிக வீறு படைக்கின்றார்*"

*"மண் உறங்கும் மலைஉறங்கும் வளைகடலும் உறங்கும்*
*மற்றுளஎலாம் உறங்கும் மாநிலத்தே நமது*
*பெண்ணுறங்காள் எனத்தாயர் பேசி மகிழ்கின்றார்"*

பக்திப் பெருக்கு தந்த பரிசு இது. வெறுத்தவர்கள், எள்ளியவர்கள் விரும்பி மதிக்கும்படி பெருநிலையைத் தலைவன் தந்தான். அவள் தன்னை அறிந்திலள். உலகம் தன்னையும் அறிந்திலாள். சிவபோகப் பேரின்ப வெள்ளத்தில், "பொங்கித் ததும்பிய பூரணத்தில்" நிறைவு கொள்கிறாள்.

பெண்ணாசை பெரிது என்று உலகோர் பேசுவதும் ஏசுவதும் வழக்கம். அது தவறாம். தலைவி சொல்கிறாள்.

*"பெண்ணாசை பெரிதென்பர் விண்ணாளும் அவர்க்கும்*
*பெண்ணாசை பெரிதல காண் ஆணாசை பெரிதே"*

என்பது தலைவி கண்ட முடிவு. அகத்துறையில் இது ஒரு புதிய எண்ண ஒட்டம். உலக மரபிற்கு மாறாக "ஆணாசை" என்ற சொல்லை வள்ளலார் பயன்படுத்தியுள்ளமை நுட்பமுடையது. ஒப்பற்ற பெருங்குணத்து நாயகனுடன் கூடி அவள் பெற்ற இன்பநிலையின் விளக்கம் "ஆணாசை" என்பது. ஒரு பெண்ணுக்குப் பெற்ற தாய் பெருமையுடையவள் தான் : ஐயமில்லை. ஆனால் தலைவனோ பெற்ற தாயினும் பேரருளுடையான். அவள் செய்த தவத்தால் கிடைத்து அவள் உயிரில் கலந்துவிட்ட தனித்தலைவன் அவன். அகம் புணர்ந்து அவனோடு புறம்புணர்ந்து பெற்றது. அருளால் அறிவாளர் தந்தது. "அருளாம் அறிவாளர் புறப்புணர்ச்சி" என்றே அவள் குறிக்கிறாள். அறிவு - அருள் - இன்பம் என்ற மூன்றின் தொடர்ச்சியை ஆழ்ந்த குறிப்புடன் வள்ளலார் சுட்டுவது அவர் தம் வாழ்நாளில் பெற்ற "தன் வரலாற்றுக்" குறிப்பாகவே உள்ளது.

**பொய்படாக் காதல் :**

அகத்துறை சாராத பாடல் ஒன்றில் வள்ளலார் தம்முள் ஏற்பட்ட மாறுதலைச் சுருக்கமாகக் கூறுகிறார் : அருட்பாக்களில் மிகச் சிறந்த பாடல்களில் இது ஒன்று எனும் பெற்றியுடையது (4506)

*"கரையா எனதுமனக் கல்லும் கரைந்தது*
*கலந்து கொளற்கு என்கருத்தும் விரைந்தது*
*புரையா நிலையில் என்புந்தியும் தங்கிற்று*
*பொய்படாக் காதல் ததும்பிமேல் பொங்கிற்று"*

கருங்கல் மனம் கரைந்தது ; தூய்மையில் அறிவு தங்கிற்று ; பொய்படாக் காதல் ததும்பிப் பொங்கிற்று ; அதுவே இன்ப நிலை கூட்டிற்று. பொய்படும் காதல் மானிடக் காதல் : இறையருள் வேட்பது பொய்படாக் காதல். அங்கு பொய்ம்மை, சூது, வஞ்சகம், தன்னலம் போன்றவை சிறிதும் இல்லை. தன்னை முழுவதுமாய்த் தலைவனுக்குப் படைக்கும் அந்த மனமே உண்மையான துறவு மனம்.

மனம் கரைந்துவிட்டால் உள்ளே திளைத்து, ஒவ்வோர் உயிரிலும் பொருளிலும் இறைவனைக் காணும் ஆன்ம முதிர்ச்சி வந்துவிடுகிறது. ஐம்புலனின்பம் வழியே கண்முன் இல்லாத் தலைவனைக் கண்டுகளிக்கும் நிலை - இன்ப நிலை - ஏற்படுகிறது. எங்கும் எதிலும் இறைவன் திருநடம் உணர்வார்க்கு என்றும் இன்ப ஆடலே.

**துன்பத்தின் வழி இன்பம் :**

இந்த இன்ப அனுபவம் எளிதில் கைவருவதில்லை. துன்புறல் என்பது அன்புகொண்டார் ஏற்கவேண்டிய நியதி. துன்பமில்லாத வெற்றி ஏதுமில்லை. தன்னலம் துறக்காத யாரும் காதலில் வெற்றிபெற முடியாது. மானிடக் காதலுக்கே இது விதியாயின், உயர்ந்த தெய்வ இன்ப அமுதைப் பெற விரும்புவோர் இன்னும் பெருந்துன்பம் பட்டேயாக வேண்டும்.

> "*பிள்ளைப் பேற்றுத் துன்பம் உலகியலில் காணப்படுவது. ஆன்மிக உலகிலும் இத்தகைய துன்பம் நோற்போரே அனுபூதி நிலையை அடைய முடியும்*" (அண்டர்ஹில், ப : 267)

என்ற சொற்கள் இந்நிலையைத் தெளிவாக்கும்.

மானிட உடல் விலங்கு நீர்மையது. அதனுடைய நரம்புகளை அவற்றுக்கு வழக்கமில்லாத ஓர் உயர்நிலைக்குப் பழக்க முயலும் போது அவை ஏற்க மறுக்கின்றன. எதிர்த்துப் போராடுகின்றன. உடலில் பலவகை மாற்றங்கள் நிகழ்கின்றன. இந்த நிலையை "அனுபூதி நலக்கேடு" என்று சொல்வார்கள். பெருந்துன்பங்களை ஏற்கத் தயாராக இருப்போரே அனுபூதி அனுபவச் சோதனையிலும் இறங்க வேண்டும். 'ஊனினை உருக்கினாலன்றி உள்ளொளி பெறுதற்கில்லை : உலப்பிலா ஆனந்தமாய தேன் எலும்புப் பரைதோறும் சொரிவது அதற்குப் பின்பே எனத் திருவாசகமும் இதைக் கூறும்.

**வள்ளலார் அகவலில் இந்த உடலியல் மாற்றங்களைத் தெளிவாக ஓவியமாக்கியுள்ளார்.**

*"தோல் எலாம் குழைந்தது : சூழ்நரம்பனைத்தும்*
*கட்டுவிட்டது*
*எலும்புகள் நெக்குவிட்டு எழுந்தன : தசைகள்*
*வற்றி எலும்புடன் ஒட்டிக் கொண்டன.*
*இரத்தம் சுண்டியது : சுக்கிலம் வற்றி மார்பில்*
*ஒரு பந்தெனத் திரண்டது.*

***இது ஒரு புறம் : துன்பக்கனல்.*** *பிறகு*
*மூளையில் அமுதம் பொங்கி ஊற்றெடுத்து*
*உடல் எலாம் ஓடியது :*
*நெற்றி வியர்த்தது : ஒண்முகம் மலர்ந்தது*
*வெளிவந்த மூச்சு தண்மையாய்ச் சாந்தம் மிக்கது*
*உள்ளத்துள் சிரிப்பு அரும்பியது. உரோமம்*
*பொடியாகிச் சிதறிற்று.*
*கண்ணீர் பெருகிக் கால்வழிந்து ஓடிற்று.*
*வாய் துடித்து அலறிற்று.*
*செவித்துளைகளில் இசைக்கருவிகள் அதிர்ந்து முழங்கின*
*மெய்யெலாம் குளிர்ந்தது : மென்மார்பு அசைந்தது*
*கைகள் குவிந்தன : கால்கள் தளர்ந்தன.*
*மனம் கனிந்துருகி மனம் நிறைந்து ஒளிர்ந்தது*
*அலகிலா அருளின் ஆசை மேல் பொங்கி*
*அமுதமாய் நிறைந்தது."* (1459-75)

***இது மறுபுறம் ; இன்பக்கேணி.***

இச்சொற்கள் தலைவியாக நின்று இறையருள் பெற்ற வள்ளலார் அனுபவங்களைத் தெளிவாக்குகின்றன. உடம்பில் இப்படி மாற்றங்கள் நிகழ்வதால் உலக இயற்கைக்கு மாறுபட்டவளாய்த் தலைவி தென்படுகிறாள். பாங்கியாகிய தோழி பகையாகிறாள் : பெற்று வளர்த்த தாயும் முகம்பார்க்க மறுக்கிறாள். "பிச்சி" "பேதை" என உலகம் பழி சுமத்திற்று. இவற்றைக் கண்டு பிடிப்பு தளராமல் "பெயர்த்தும் அவனுக்கே பிச்சி"யாகும் வல்லமை பெற்றவரே ஆன்மிக இன்பம் பெற முடியும். ஆன்மிகக் கவிதை ஒவ்வொன்றும் உயிர்பட்ட வேதனையில் எழுதப்பட்டது. வள்ளலாரின் அனுபவமாலையைப் படிக்கும் யாவரும் அவருடைய உயிர் தலைவனாகிய பேருயிரோடு சேரப் பட்ட ஆன்ம வேதனையை உணர முடியும்.

வள்ளலாரின் அகத்துறைப் பாடல்கள் வெறும் காதற் கவிதைகள் அல்ல. "கடவுள் மயக்கத்தில் மனமகிழ்ந்து பாடிய ஆன்மிக உணர்வுக் கவிதை" என்று பாரதியின் கண்ணன் பாட்டை மா.செண்பகம் புனைந்துரைப்பார். (கண்ணன் பாட்டு, ப:57). அருட்பாவுக்கும் இது பொருந்தும். கூடவே, "கடவுள் மயக்கம்" அல்ல ; கடவுளாகிய தலைவனைத் தேடும் வேட்கையில் மலர்ந்த ஆன்மிக உணர்வுப் பூக்கள் எனச் சொல்ல வேண்டும். "துன்பத்தில் தலைவியை உருக்கும் காதலின் முடிந்த நிலை இனிமை நிறைந்த பாட்டே" ஆகும். (Mysticism, p:526) "உருக்கும் நெருப்பு" என்று அருட்பாத் தலைவனைத் தாய் முன்னர் சுட்டினாள். அந்த நெருப்பில் உருகுவதும் தலைவிக்கு இன்பமாகிறது. வள்ளலார் வழி வந்த பாரதி, தீக்குள் விரலை வைத்து நந்தலாலாவைத் தீண்டும் இன்பம் பெற்றதும் இம்மரபில் தான். அந்தத் துன்பத்தில் ஓரளவு பங்கு பெற்று, அதன் வழி இன்பத்தை ஓரளவாவது துய்த்தவரே பாட்டினையும் துய்க்க முடியும். (Mysticism, p:526)

"*பண்களிக்கப் பாடுகின்ற பாட்டில் விளை சுகமே*
*பண்ணில் கலந்தான் என் பாட்டில் கலந்தான்*
*உயிரில் கலந்தான் கருணை கலந்து*"

என்றெல்லாம் அவர் பாடுவது இந்த இறையின்பத் தோய்வில் வந்த உணர்வால் தான். அழிவற்ற தெய்வக் காதலின் வெற்றி இதுவே. "மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம்" என அவர் கூறியதை இந்த அடிப்படையிலும் நோக்க வேண்டும்.

வ.வே.சு ஐயர் "கண்ணன் பாட்டு"க்கு முன்னுரை எழுதியபோது

"*திருக்கோவையாரையும் ராமலிங்க சுவாமிகளின்*
*திருவருட்பாவையும் அனுபவித்த தமிழருக்கு*
*இவ்விதம் வழிபடும் துறை புதிதாகப்படாது*"

எனக் கூறியுள்ளார். மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்த தமிழ்மறையின் ஆசகன்ற அனுபவத்தைத் தாமும் அனுபவிக்க அருள வேண்டும் என வள்ளலார் ஆளுடைய அடிகள் மாலையில் இறைஞ்சினார். அந்த அனுபவம் அகத்துறைப் பாடல் மூலமாக அவருக்குக் கிட்டியது. திருக்கோவை யாருக்கு ஈடாக அருட்பாவை அய்யர் போற்றுவது வள்ளலார் பெற்ற வெற்றியைக் காட்டுகிறது.

அகத்துறைப் பாடல்களில் வரும் தொடர்களும் செய்திகளும் சுட்டும் பொருள்களும் அவற்றுக்கு அப்பால் வேறொன்றைச் சுட்டுகின்றன. குறிப்புமொழி ஒன்றைப் புரியவைக்கின்றன. மானிடக் காதலுக்கும் தெய்வக் காதலுக்கும் பொதுமைகள் பல உள்ளன. இரண்டின் அடிப்படைகளும் விளைவுகளும் ஒன்று போன்றதே. எனினும் அறிவுக்கப்பாற்பட்ட பேரறிவை, அழகுக்கு அப்பாற்பட்ட பேரழகை, இன்பத்துக்கு மேம்பட்ட பேரின்பத்தைக் காட்டுவதே அனுபூதியாகும். உடலும் வடிவமும் தரும் அழகையும் தாண்டி, உள்ளத்தின் உயிரின் அழகைக் காணும் முயற்சியே இந்த அனுபூதி. அந்த அழகைக் கவிஞர்கள்,

"*கலைக் குறியீடுகளாக வெளியிடுகிறார்கள் ... இறைவன் நம்மீது கொண்ட அன்பால், அடியார் அவனைச் சேரத்துடிக்கும் காதலைவிடவும் பெருங்காதலுடன் அவர்களை அணைத்துக் கொள்ளத் தானே முன்வருகிறான்*" (A History of Tamil Literature, p:79)

என்று தெ.பொ.மீ. கூறுவது வள்ளலாரின் அகத்துறைப்பாட்டுக்கு நிறைவுரை ஆகிறது.

பெருமானைச் சேரத் துடித்தாள் அருட்பாத் தலைவி : அந்த ஆன்ம உருக்கத்தைக் கண்ட தலைவன் தானே ஓடிவந்து தன்னுள் அவளை இழுத்து ஒன்றாக்கிக் கொண்டான். ஆணிப்பொன் அம்பலத்தே அற்புதக் காட்சிகள் கண்டு மகிழ்ந்து அந்த இன்பம் இவ்வாறிருக்கிறது என்று சொல்லத் தெரியாமல்

"*சந்நிதியில் சென்று நான் பெற்ற பேறது*
*சாமியறிவாரடி - அம்மா*
*சாமியறிவாரடி*"

என்று இன்றும் கூறிக் கொண்டே இருக்கிறாள். சாகாவரம் பெற்ற, மரணமிலாப் பெருவாழ்வு பெற்ற பாட்டு அல்லவா இது!

# வள்ளலார் ஒரு சித்தர்

*அகமறிந்தீர் அனகம்அறிந்து அழியாத ஞான*
*அமுதவடிவம் பெறலாம் அடைந்திடுமின் ஈண்டே*
*முகமறியார் போலிருந்தீர் என்னை அறியீரோ*
*முத்தரெலாம் போற்றும் அருட்சித்தர் மகன்நானே.*
*- 5593.*

இந்தப் பாட்டு உலகத்தவரைப் பார்த்து வள்ளலார் கூறுவது. "உங்கள் உள்ளத்தை அறிந்தீர்கள் பாவமற்ற புண்ணியம் எது என அறிந்து அழியாத ஞான அமுத வடிவம் பெறலாம் வாருங்கள் இங்கே. என் சொல்லை நம்பாமல் முகம் அறியாதவர் போல நடக்க வேண்டா. முத்திநிலை பெற்றவர்கள் போற்றும் அருட்சித்தர் ஆகிய சிவபெருமான் மகன் நான்" என்பது பொருள். தன்னைச் சித்தர் மகன் என்று சொல்லித் தன் சித்தமரபையும் கட்டியம் கூறுகிறார் வள்ளற் பெருமான்.

அருட்பாவைப் பதிப்பித்த முதலாசிரியர்களில் ஒருவராகிய ஆதிமூல முதலியார் வள்ளலாரைத் "திருவருட் பெருஞ்சித்தர்" என்றே எழுதுகிறார் (ப : 1). "சுத்த சன்மார்க்கத்தைச் சேர்ந்த ஞானசித்தர்" இராமலிங்கர் எனச் சித்தர் பாடல்கள் முன்னுரையில் கு. அருணாசலக் கவுண்டர் கூறுகிறார். கற்றாரும் எளியவரும் வடலூரில் கூடியிருந்து வள்ளலாரைச் சித்தர் எனவே நம்பியும் வழிபட்டும் வந்துள்ளனர். அவருடைய சித்த நெறியை இங்கு காணலாம்.

**சித்தர் :**

சித்தர் யார்? பலர் பலவாறு கூறுகிறார்கள். அருணாசலக் கவுண்டர்,

> *"சித்தர் சிவானுபூதிச் செல்வராய்ச் சமயம் கடந்த சமரச மோன நிலையில் நிற்பவர் : அட்டமாசித்தி கைவரப் பெற்றவர் : இரசவாத வித்தையிலும் தோய்ந்தவர்"*

என்று இலக்கணம் கூறுகிறார் (சித்தர் பாடல்கள், முன்னுரை). சாதாரண உலகில் அறிவுக்குப் புலப்படாத வாய்மைகளை ஆன்மிக நெறிநின்று காண முடியும் என நம்புவோரே சித்தர் என்று ஒரு அகராதி பொருள் விளக்கம் தருகிறது. (The Concise Oxford Dictionary, p:798). முதல் கருத்து இசைவானது : அதைவிட இரண்டாவது பொருள் இன்னும் பொருந்துகிறது. ஆன்மிக நிலை நின்று உலகியலுக்குப் புலப்படாத வாய்மைகளைக் காண்பது சித்தர் நோக்கம். அப்படிக் கண்டவர்கள் அருளாளராகிப் பரம்பொருளை எங்கும் காணும் முதிர்ச்சி பெறுகிறார்கள். திரு.வி.க. சிவன்பால் சித்தத்தை வைத்து ஆன்ம சக்தியை எழுப்பிச் சித்தி பெற்றவர் சித்தர் எனப் பொருள் கூறுகிறார் (சித்த மார்க்கம், ப :11). இந்தக் கருத்துக்கள் சித்தர்கள் பெற்ற ஆன்ம வெற்றியைக் கூறகின்றன. அது சரியே. ஆனால் அவர்களுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பு பற்றி ஏதும் இல்லை.

ஸ்பர்ஜியன் என்பார் ஆங்கிலத்தில் அனுபூதிக் கவிஞர்கள் பற்றி எழுதிய நூலில், சித்தர்கள் எளிமையான நெறியில் நின்றவர்கள் : உயிரிரக்கம் பூண்டவர்கள் : ஒரு கடவுள் என்னும் உறுதியைப் பேணியவர்கள் : சாத்திரங்கள் சடங்குகள் ஆகியவற்றை வெறுத்தவர்கள் எனச் சில பண்புகளைக் குறிக்கிறார். (Mysticism in English Literature, p:147) மேனாட்டறிஞர் கூறுவதாயினும் இது மிகவும் ஏற்புடையதாய் உள்ளது. சித்தர்கள் ஆன்மிக வல்லமை பெற்றவர்கள் என்பதோடு மக்கள் நல நாட்டம் உடையவராகவும் இருந்தார்கள் என்பது உணரத்தக்க ஒரு நுட்பமாகும். தூய்மையான பக்தி, எளிமையான இறைநம்பிக்கை, உயிர்களிடத்து அன்பு இவை தாமாகவே சமய அனுபவங்களைத் தரவல்லவை.

காடுமலை போக வேண்டாம் : உலகில் மக்களிடையே வாழலாம் : சாதி சமய வேறுபாடுகள் வேண்டாம் : சடங்குகள் போலியானவை : ஒரு தெய்வம் வேண்டும் : உருவ வழிபாடு தேவையற்றது என்பன போன்ற நோக்குகளைச் சித்தர்கள் கொண்டிருந்தனர். பாமர மக்களிடையே வாழ்ந்து, அவர்கள் பேசிய மொழியிலேயே எளிமையாக சமய, சமூகக் கருத்துக்களைப் பாடினார்கள். மருத்துவம் போன்ற வகையிலும்

உதவி புரிந்தார்கள். ஆகவே சித்தர்களின் ஆன்ம வாழ்வில் இந்தச் சமுதாய உணர்வு சமய நெறியை ஒத்த வீறும் சிறப்பும் உடையதாகும்.

சித்தாடல் புரிபவர்கள், காடுமலையில் கரந்து திரிபவர்கள், கூடுவிட்டுக் கூடுபாய்பவர்கள், ரசவாத வித்தை செய்பவர்கள் எனப் பொதுவாக நம்பப்படும் மனிதநிலைக்கு அப்பாற்பட்ட ஆற்றல்கள் ஒருபுறம் இருக்க, மக்களிடையே வாழ்ந்து மனுக்குலம் உயர்வடைய அவர்கள் பணியாற்றினர் என்பது பெருஞ் சிறப்புடையது. அனுபூதி நிலையில் இறையின்பத்தில் எந்நேரமும் தோய்ந்து நிற்றல் அவர்களுடைய ஆன்ம வாழ்வில் உயிர் போன்றது. இதில் ஐயமில்லை. அதனால் சமுதாயத்தை வெறுக்க வேண்டியதில்லை. இதனுள் இருந்தே உயர்நிலை பெற முடியும் என வாழ்ந்தும் காட்டினர். அவர்கள் பணிகள் பல திறத்தன. என்றாலும் சமயம், சமூகம், இலக்கியம் என்னும் வரையறைகளுக்குள் அவற்றைக் காணல் நல்லது.

**சமயம் :**

சித்தர்களின் சமயம் அன்புநெறியாகும். "உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பு இயல்பாய் இருப்பது. அதைத் தெளிவதே அனுபூதி. அன்பைப் பெருக்கி அனுபூதி பெறலாம்" (திரு.வி.க., சன்மார்க்க போதத்திறவு ப : 60) அன்பும் சிவமும் ஒன்றே என வரையறுத்தவர் திருமூலர். அவரைச் சித்தமரபின் முதல்வராகக் கூறும் மரபு உண்டு.

"*உயிர்களிடத்து அன்பு வேணும் - தெய்வம்*
*உண்மைஎன்று தானறிதல் வேணும்*"

என்று பின்னாளில் பாரதி பாடியதும் இந்த அன்புச் சமய நெறி நின்று தான். "உள்ளொளியே சித்த மார்க்கம். இது ஒன்றே சமயம்" என்பார் திரு.வி.க. சித்தமார்க்கம், ப :3)

அன்பை அடிப்படையாகக் கொண்டது வள்ளற் பெருமானின் உயிரிரக்கக் கோட்பாடு. "அன்பெனும் பிடியுள்" ஆண்டவனாகிய "மலையை" அகப்படுத்திக் காட்டியவர் அவர். "என்னுளே அரும்பி என்னுளே மலர்ந்து என்னுளே விரிந்த என்னுடை அன்பே" என அகவலில் அன்பு மயமான இறைவனைப் பாடுகிறார். ஆனால் அந்த அன்பு நெறியைத் துன்புறும் மக்களை நோக்கித் திருப்பிவிட்டது அவர் செய்த மாபெரும் புரட்சி.

அன்பை அடிப்படையாகக் கொண்டவர்கள் அதற்கு மாறானவற்றை எதிர்க்கவே செய்வர். சமயத்தின் பெயரால் நடத்தப்பட்ட அறிவுக் கொவ்வாத சடங்குகள் போன்றவற்றையும், ஏற்றத் தாழ்வுகள், பிரிவுகள் போன்றவற்றையும் அவர்கள் வன்மையாகச் சாடினார்கள்.

*"சதுர்வேதம் ஆறுவகைச் சாத்திரம் பல*
*தந்திரம் புராணம் கலைசாற்றும் ஆகமம்*
*விதம் விதமான வேறு நூல்களும்*
*வீணான நூல்களே என்றாடு பாம்பே"*

என்பது பாம்பாட்டிச் சித்தர் பாட்டு.

*"சாத்திரத்தைச் சுட்டுச் சதுர்மறையைப் பொய்யாக்கிச்*
*சூத்திரத்தைக் கண்டு துயரறுப்பது எக்காலம்"*

இது பத்திரகிரியார் பாட்டு. இந்த வழியில் வந்த வள்ளலார், அவர்களை ஒட்டி,

*"கலையுரைத்த கற்பனையே நிலையெனக் கொண்டாடும்*
*கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப்போக"* (3768)

என வன்மையாகவே பாடுகிறார்.

**வைதிக எதிர்ப்பு :**

சித்தர்கள் தெய்வம் பரவிய பக்தர்கள். அவர்களின் நோக்கம் புதிய சமயத்தையோ கோட்பாட்டையோ படைப்பதன்று. எனினும் வேத நெறியில் நின்ற வைதிகர்களுடைய போலிச் சடங்குகளும், விதிகளும் அவர்களுக்கு உடன்பாடில்லை. சித்தர் பாடல்களில் வைதிக எதிர்ப்பு அதிகமாகவே உள்ளது. உருவ வழிபாட்டை அவர்கள் கடுமையாக எதிர்த்தார்கள்.

*"நட்ட கல்லைத் தெய்வமென்று*
*நாலுபுட்பம் சாத்தியே*
*சுற்றிவந்து மொணமொணத்துச்*
*சொல்லும் மந்திரம் ஏதடா?"*

என்ற சிவ வாக்கியார் பாடல் சான்றுக்கு ஒன்றே. இது போலப் பல பாடல்களில் இந்த எதிர்ப்பு உணர்வு காணப்படுகிறது.

*"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு*
*.......... பசித்தோர் முகம் பார் ..........."*

என்று பட்டினத்தார் கூறுவதுபோல எளிய வழிகளைக் காட்டினார்கள். இறையருள் பெற இவையே போதும் என உறுதி

செய்தனர். மனத்தில் உண்மையான பக்தி இல்லாமல் கோயிலுக்குச் செல்வது : குளத்தில் நீராடுவது : பூசை முதலியன செய்வது : மந்திரம் பாடல்கள் ஓதுவது : இன்னும் தூபதீபம் காட்டுவது ஆகியன பயனற்றவை மட்டுமல்ல : வெற்றாரவாரங்கள் என்றும் அவர்கள் சற்றுக் கடுமையாகவே தாக்கினர். "வஞ்சமனத்தால் படிற்றொழுக்கம்" பூண்ட வைதிகர்களை அவர்கள் அப்படிக் குறைகூறியதில் வியப்பில்லை. ஆதலால் சமயம், சடங்கு, புறக்கோலம் இவற்றுக்கு முதலிடம் தந்த வைதிகர்கள் சித்தர்களின் தீவிரக் கருத்துக்களை அதே அளவு எதிர்த்தனர். சைவ சித்தாந்திகள் கூட - வேத நெறி வராதவர்களாக இருந்தும் - "அண்மைக் காலம் வரை சித்தர் நூல்களை விலக்கியே வைத்திருந்தனர்." (க.கைலாசபதி, ஒப்பியல் இலக்கியம், ப : 187) மக்கள் மன்றத்தில் - மனத்தில் - அரங்கேறிய பாடல்களை வைதிகரால் தடுத்து நிறுத்த முடியவில்லை.

• வள்ளற்பெருமான் வைதிகச் சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் எவ்வாறு எதிர்த்துப் பாடினார் : பணிபுரிந்தார் என்பது முன்னர் விரிவாகக் கூறப்பட்டது. சாதி சமய எதிர்ப்பு, கண்மூடி வழக்கங்கள் எதிர்ப்பு என்றவாறு அவராற்றியவை சீர்திருத்த நோக்கம் கொண்ட சித்த மரபு சேர்ந்தவையாகும். சைவ சித்தாந்திகள் இன்று வரை வள்ளலாரையோ அருட்பாவையோ ஏற்க முன்வருவதில்லை. இதற்குக் காரணம் வள்ளலார் தம்மை ஒரு சித்தர் எனக் கூறிக்கொண்டதாகும் என்று கைலாசபதி கருதுவது முற்றிலும் பொருந்தும். (ஒப்பியல் இலக்கியம், ப : 209)

சித்தாந்தம் என்ற சொல்லே சித்தர் கண்ட முடிவு என்னும் பொருள் தருவது. சைவமும் சித்தாந்தமும் ஒன்று என்றும் சித்தர் சிவத் தொடர்பு உடையவராகையால் அவர் கண்ட நெறியாகிய சித்தாந்தம் சைவ சித்தாந்தம் எனப்பட்டது என்றும் திரு.வி.க. கருதுகிறார். (சித்த மார்க்கம், ப : 9). இது நன்றாக இருக்கிறது. ஆனால் வைதிகர் ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். சித்தாந்தத்துக்கு வேறு பொருள் கூறி ஆயிரமாக விரித்துப் பேசுவார்கள். இதில் ஒரு இடர்ப்பாடும் உண்டு. சைவ சித்தாந்தத்தைச் சித்த மார்க்கம் என்று முழுமையாகக் கொள்ளவும் முடியாது. சித்தர்களின் தீவிர சீர்திருத்தக் கருத்துக்கள் சைவ சித்தாந்தத்தில் இடம்பெற முடியாது. என்றாலும் சித்தர்கள் சிவனுடன் ஒன்றுபட்டவர் என்பதைத் திருமந்திரம் ஒப்புகிறது. "சித்தர் சிவலோகம் இங்கே

தெரிசித்தோர்", "சித்தர் சிவத்தைக் கண்டவர்", "சிவசித்தர்" என வரும் திருமூலர் சொற்கள் இதை உறுதிப்படுத்தும்.

**ஒரே கடவுள் :**

வைதிகம் கூறும் சடங்குகளையும் கோலங்களையும் எதிர்த்த சித்தர்கள் இறைமறுப்பாளர்கள் அல்லர். "நட்ட கல்லைத் தெய்வமென்று" "கோயிலாவது ஏதடா" போன்ற பாடல்கள் நாத்திகர்களுக்கு மேடையில் பயன்பட்டன. ஆனால் இவற்றை மேற்கோள்களாகக்காட்ட அவர்களுக்குத் தகுதியில்லை. இவற்றின் உட்பொருள் இறை நம்பிக்கை : ஒரு கடவுள் உண்டு என்ற அழுத்தமான பற்று. சித்தர்கள் கடவுளன்பர்கள். "நின்றும் இருந்தும் நடந்தும் கிடந்தும்" இறைவனை எண்ணி உருகியவர்கள். அவர்கள் பாடல்களைப் படிப்போருக்கும் இந்த நம்பிக்கை வேண்டும் : இல்லையென்றால், அதுவும் ஒரு வகைத் தன்னல ஆரவாரமே தவிர வேறில்லை.

சித்தர்கள் "ஒன்றென்றிருந்தவர்கள் : தெய்வம் உண்டென்றிருந்தவர்கள்". அந்த ஒரு கடவுள் எது? என்னும் கேள்வி எழுவது இயல்பு. அது பரம்பொருளே : எல்லாம் கடந்த மூலமுதலே. ஆனால் அவர்கள் அந்தப் பேரிறையைச் "சிவம்" என்ற பெயரால் குறித்தனர். வள்ளலார் தாம் உணர்ந்த அருட்பெருஞ்சோதி ஆண்டவரைச் சித்தன், சித்தி, சித்தாடல் புரிபவர் என்ற சொற்களால் பாடிமகிழ்கிறார். "ஆடல் செய் ஆனந்த சித்தர்", "சிவசித்தி" என்னும் சொற்கள் அந்த ஒரு கடவுள் சிவபெருமானே என்பதைக் காட்டுகின்றன. சித்தர்களின் சமயநெறியே வள்ளலாரின் சமயநெறியும் என்பது தெளிவாகிறது. "ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த சோதி" எனச் சித்தர்கள் பாட, "அருட்பெருஞ்சோதி தனிப்பெருங்கருணை" என வள்ளலார் பாடி மகிழ்கிறார். சன்மார்க்கம், அருட்பெருஞ்சோதி பகுதிகளில் வள்ளலாரின் இந்தக் கோட்பாடுகள் முன்னர் விரிவாகக் கூறப்பட்டன. சித்தர் பாடல்களைப் படித்து அருட்பாவைப் படிப்போர்க்கு அவர் நெறி எது என்பது ஐயத்துக்கிடமில்லாமல் புரியும்.

**சமய குரவர் :**

"சைவ சமய குரவர் நால்வரும் சித்தரே : அவர் அறிவுறுத்தியதும் சித்த மார்க்கமே" என்ற திரு.வி.க. கூறுகிறார் (ப:12). இதை அப்படியே ஏற்பதற்கில்லை. சித்தர் வேறானவர் :

அனுபூதியாளர் வேறானவர். சித்தர்கள் அனைவரும் அனுபூதியாளர்கள் . ஆனால் அனுபூதியாளர்கள் அனைவரும் சித்தர்கள் என்று சொல்லமுடியாது. திருமூலரைச் சித்தர் என்றும் அனுபூதியாளர் என்றும் ஒருசேரக் குறிப்பிடும் தெ.பொ.மீ., அப்பர் சுவாமிகளை அனுபூதியாளர் என்று மட்டும் குறிப்பிடுவார். (A History of Tamil Literature, p : 66-72). சமய குரவர் சித்தராகார் என்பது இதன் உட்பொருள்.

புறத்தில் இறைவனைத் தேடி, மெய்ப்பொருளைப் பாடிய சமய குரவர்கள் சடங்குகளையோ புறக்கோலங்களையோ சித்தர் அளவு வெறுக்கவும் இல்லை : கண்டிக்கவும் இல்லை. மாறாக அவற்றைப் போற்றி வாழ்ந்தனர். சமயப்புறச் சின்னங்களைத் தரித்தும் வாழ்ந்தனர். சமயகுரவர்க்குச் சமயம் முதன்மையானது : அதையொட்டிய சடங்குகளும் முதன்மையானவை. ஆனால் சித்தர்களோ அகத்தில் இறைவனைக் காண முயன்றவர்கள் : புறச் சின்னங்களையும் சடங்குகளையும் தாண்டி வாழ்ந்தவர்கள். அவர்களுக்குத் தெய்வமே - எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளே - முதன்மையானது. சமய குரவர்கள் வேத ஆகம நெறிக்குட்பட்டவர்கள். "வேதநெறி தழைத்தோங்க"ச் சம்பந்தர் தோன்றினார் என்று சேக்கிழார் பாடுகிறார்.

ஆதலால் திரு.வி.க. கூறுவது போலச் சமயகுரவர் சித்தராகார். வள்ளலார் நால்வரையும் பெரிதும் போற்றியவர். தம் அருள்வாழ்வுக்குச் சம்பந்தரும் மணிவாசகருமே காரணம் எனக் குறிக்கும் வண்ணம் பல பாடல்களை இயற்றியவர். தனித்தனி மாலைகள் பாடி நால்வரையும் உருக்கமாக வழிபட்டவர். எனினும் அவர்களைப்போல வேத, ஆகம, சடங்குகள், பழக்கங்களை ஆதரிக்கவில்லை. அவர்களிடமிருந்து அவர் இங்கு வேறுபடுகிறார். தம் அன்புச் சமயத்தைச் சித்தநெறி நின்று பேணினார் என்பதே சிறப்பு. பக்தி மரபு மட்டுமல்லாது சித்தமரபும் "வாழையடி வாழையென" அவர் வழி தொடர்ந்தது.

**மக்கள் நல நாட்டம் :**

பக்திக் கவிஞரைப் பற்றிப் பேராசிரியர் வே. இராகவன்,

*"மக்கள் சமயவகையறியாது, ஆன்மிகநெறி தெரியாமல் வாழ்ந்தபோது, பக்திக் கவிஞர்கள் காலம்தோறும் தோன்றித் தங்கள் வாழ்வாலும் அறிவுரைகளாலும் ஒரு*

*விழிப்புணர்வையும் ஆன்மிக இலக்கையும் மக்களுக்குப் புலப்படுத்தினர்"*

என்று கூறுகிறார். (Devotional Poets and Mystics, p:1) இந்தச் சொற்கள் பெருமளவு சித்தர்களுக்கும் பொருந்தும். தெய்வம் பரவிய அவர்கள் கவிஞர்களாக ஊர் ஊராகப்போய் மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்தினர். அதனால் தெ.பொ.மீ. சித்தர் பாடல்களை மக்கள் நலம் நாடிய பாடல்கள் என்பார். (A History of Tamil Literature, p:16) அந்த அளவு அவற்றுள் சமுதாயக் கூறுகள் பொதிந்துள்ளன.

சித்தர்கள் மக்களிடையே வாழ்ந்தவர்கள். எல்லாப் பொருள்களிலும் எல்லா உயிர்களிலும் இறைவனைக் காண முயல வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். இந்து சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களில் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தது. ஆனால் அதில் மலிந்துகிடந்த மூடநம்பிக்கைகளையும் அறிவுக்கொவ்வா சடங்குகளையும் பழக்க வழக்கங்களையும் கடுமையாகச் சாடினார்கள். பகுத்தறிவு பேசும் நாத்திகர்களை விடவும், அவர்கள் எதிர்த்துத் தாக்குவதற்கு முன்பாகவும் கடவுள் பெயராலும் சமயத்தின் பெயராலும் நடந்த இழிவுகளையும் கேடுகளையும் கடிந்தார்கள். உண்மையான இறையனுபவத்தைத் தராத ஒன்றை, மக்கள் நலம் நாடாத ஒன்றை, மக்களுக்கு உயர்நெறிகாட்டாத ஒன்றை அவர்கள் ஏற்க மறுத்துப் புரட்சி செய்தனர்.

வள்ளலார் ஒரு சித்தர் என்று கூறிவரும் போது இந்த இலக்கணத்தை வைத்துப் பார்க்க வேண்டும்.

சமூகத்துக்கு அவராற்றிய விரிவான பணிகள், சமயநிலையில் அவர் ஏற்படுத்திய புத்தெழுச்சிகள், புதிய எண்ணவோட்டங்கள் சித்தர் மரபை ஒட்டி வந்தவை.

*"சித்தர்களுக்குப் பின்னர் தத்துவராயர், தாயுமானவர், இராமலிங்க சுவாமிகள் முதலியோர் சமரச ஞானவரம்பிற்குள் மனிதாபிமான உணர்வையும் பொதுமைச் சிந்தனைகளையும் ஆங்காங்கே எடுத்துரைத்தனர்"*

என்று கைலாசபதி கூறுவது எண்ணற்குரியது. (சமூகவியலும்ஒப்பிலக்கியமும், ப : 163). "மனிதாபிமான உணர்வு

- பொதுமைச்சிந்தனை" என்ற தொடர்கள் ஆழ்ந்த நோக்குடையவை. சித்தர்களின் உயிர்க்கோட்பாடுகள் இவை. வள்ளற்பெருமான் அந்த வரிசையில் வந்தவர் என்ற இந்த மதிப்பீடு முற்றிலும் பொருந்துவதாகும் சமுதாய ஏற்றத்தாழ்வுகளை அவர் எதிர்த்துப் பாடியதும் எளிய மக்களிடையே ஒரு சமூக விழிப்புணர்வை ஏற்படுத்தியதும் அவராற்றிய பெரும்பணிகள்.

*"பட்டோடே பணியோடே திரிகின்றீர் தெருவில்*
*பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்"*

என்றும்

*"பட்டினி கிடப்பாரைப் பார்க்கவும் நேரீர்*
*பழங்கஞ்சி யாயினும் வழங்கவும் நினையீர்"*

என்றும்

*"கைகட்டி வாய்பொத்தி நிற்பாரைக் கண்டே*
*கைகொட்டிச் சிரிக்கின்றீர் கருணை ஒன்றில்லீர்"*

என்றும் அவர் பாடும்போது ஏழைகளுக்காக அவர் இரங்குவதும், அந்த ஏழைகளுக்கு உதவாத செல்வரைப் பார்த்து அவர் கொண்ட சீற்றமும் புலப்படுகின்றன. இந்த மரபில் வந்த பாரதி, "யானும் வந்தேன் ஒரு சித்தன் இந்த நாட்டில்" எனப் பெருமைப்பட்டுக் கொள்வது இந்தச் சமுதாய உணர்வாலேயே. "தனியொருவனுக்கு உணவில்லை எனில் இந்த ஜகத்தினை அழித்துவிடுவோம்" என்று அவன் பொங்கி எழுந்ததும் மரபு வழிப்பட்ட கோபம் தான். பசித்து வந்தவர்க்குச் சோறிடாத சமயமோ மடமோ பக்தியோ கோயிலோ தேவையில்லை என்ற சித்தநெறி பாரதிவரை வருகிறது.

**மருத்துவப் பணி :**

சித்தருடைய மக்கள் நலத் தொண்டு நெறியில் குறிப்பிடத்தக்கது மருத்துவப் பணியாகும். அவர்கள் தங்கள் ஆதிக்கடவுளைப் "பிரதான வைத்தியரான பரமபுருடன்" என்று குறிக்கும் வழக்கம் உண்டு. (சித்தர் பாடல்கள், ப:IV) ஆதலால் மருத்துவப்பணி அவர்கள் வாழ்வில் முதன்மைப் பங்கு பெறுகிறது. ஆன்மிகக் கட்டுப்பாட்டால் பெற்ற தங்கள் சக்தியைப் பயன்படுத்தி, அவர்கள் மணி, மருந்து, மந்திரம் என்னும் மூன்றால் நோய்தீர்த்தனர். மணி என்பது பாதரசத்தைத் திடப்பொருளாககுவது : இதைச் சோதிடம் என்பார்

சாமி.சிதம்பரனார். (சித்தர்கள் கண்ட விஞ்ஞானம், ப : 23) நோய்நிலை, நோயாளி நிலை, பருவ காலம் என்பவற்றை அறிதல் என இதற்குப் பொருள் கொள்ளலாம். மூலிகையைப் பக்குவம் செய்த மாத்திரைக்கு மணி என்று பெயர் இட்டிருக்கலாம். ஏனெனில் வள்ளலாரின் மருத்துவக் குறிப்பில் "நீலகண்ட மணிமாத்திரை" என்று சொல்லப்பட்டுள்ளது. பிணி தீர்ப்பது. முதுமையை மாற்றுவது. சோர்வு, மெலிவு ஆகியவற்றைப் போக்குவது என்னும் பண்புகள் கொண்டது மருந்தாகும்.

"*நோயற்ற வாழ்வில் நான் வாழ வேண்டும்*"

"*மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்*"

என்றெல்லாம் வள்ளலார் பாடுவது நோக்குதற்குரியது.

மந்திரம் தெய்வ நம்பிக்கையுடன் ஓதப்படும் சொற்கள். நம்பிக்கையே முதன்மையானது. திரும்பத் திரும்ப வரும் ஒலிக்குறிப்புகள் மனதைச் சமப்படுத்தி, எண்ண அலைகளைச் சீராக்கி நரம்பு மண்டலத்தை அமைதியாக்குகிறது. இன்று உலகெங்கும் யோகமுறையும், மந்திர ஒலியும் பரவி வருவது சான்றுகளாகும்.

"*மதிவளர் மருந்தே மந்திர மணியே*"

"*வரைவளர் மருந்தே மவுனமந்திரமே*
*மந்திரத்தால் பெற்ற மணியே*"

"*மருந்தானை, மணியானை வழுத்தா நின்ற*
*மந்திரங்கள் ஆனானை*"

"மதியிலே விளைந்த மருந்தை மாமந்திரம் தன்னை" என்றெல்லாம் வள்ளற்பெருமான் தாம் இந்தச் சித்த மரபில் நின்றமையைத் தெளிவாகவே பாடுகிறார்.

வள்ளலார் மருத்துவப் பணி செய்தவர். மருத்துவம் தொடர்பாக மூலிகை குண அட்டவணை, சஞ்சீவி மூலிகை, மருத்துவக் குறிப்புகள் என்ற மூன்று பிரிவுகளில் உரைநடைப் பகுதிகள் உள்ளன. அட்டவணை அளவால் பெரியது. 485 மூலிகைகளும் அவற்றால் தீரும் நோய்களும் சொல்லப்பட்டுள்ளன (உரை : 219). இன்றைய "மருந்தியல்" போலவே உள்ளது வியப்பு தருகிறது.

தம்மைத் தேடிவந்த நோயாளிகள் பலருக்கும் அவர் மருந்துகள் தந்துள்ளார். தொலைவில் இருந்த நண்பர்களுக்குக்

கடிதம் எழுதியபோது அவர்கள் உண்ண வேண்டிய மருந்துகளையும் குறித்துள்ளார். "உடம்பு தேறவும் வலுப்பெறவும்" ஒரு மருந்து செய்திருக்கிறார் (உரை : 234). மருந்து கொள்ளும் போது கூடவே நல்ல நெய்யும் உடன்கொள்ள வேண்டும் எனக் கூறவதிலிருந்து பின்விளைவுகளைப் பற்றி அவர் தெரிந்துள்ளமை புலனாகிறது. தவிரக் கடினமான மருந்தை உண்ண வேண்டாம் என எச்சரித்திருக்கிறார். வலிமை மிக்க மருந்துகள் ஒரு நோயைப் போக்கிப் பல நோய்களை உண்டாக்குவதை இன்று உலகம் கண்டு வருகிறது. மருந்து செய்முறை, பயன்படுத்தும் வகை, பின்விளைவு களைதல், கடின மருந்து விலக்கல், பத்தியம் என்பன பற்றிய அவர் கருத்துக்கள் "நோய் நாடி, நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி" மருத்துவம் செய்ய வேண்டும் என்ற குறளை மெய்ப்பிக்கிறது. இன்னும் பல செய்திகள் விரிவஞ்சி விடப்படுகின்றன.

திருமூலர் மானிட உடம்பை "ஊனுடம்பு ஆலயம்" எனத் தெய்வக் கோயிலாகச் சுட்டினார். அவர் வழி வந்த வள்ளற்பெருமான் புண்படா உடம்பு, பொன்உடம்பு எனக்கூறி அதை வலியுறுத்தினார். "பிறர்பிணி தீர்க்க அவர் சித்த மருத்துவத்தில் தோய்ந்து துன்புற்ற பலருக்கு இன்பம் தர முற்பட்டார்" எனத் தெ.பொ.மீ. பாராட்டுவது முற்றிலும் இசைவானது. (The Pageant of Tamil Literature, p:70)

**அற்புதங்கள் :**

சித்தர்கள் செய்தனவாக அற்புதங்கள் கூறப்படுகின்றன. இயற்கைக்கு மீறிய, எளிய மனிதனுக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் அற்புதங்கள். இவற்றைச் சித்து, சித்தி என்று கூறுவதும் உண்டு. "சித்தாடல்" என்று வழக்கில் உள்ளது. வள்ளலாரும் குறித்துள்ளார் (4051). "செப்படி வித்தை செய் சித்தர்" என்றம் பாடுவார். எண்வகைச் சித்திகளாக - அட்டமா சித்திகளாக - அனிமா, மகிமா முதலியவை கூறப்படுகின்றன. இவை கர்ம சித்திகள். இவை தவிர யோக சித்தி, ஞானசித்தி என்பவையும் கூறப்படுகின்றன. இவை மூன்றையும் தமக்கு இறைவன் அருளியதாக வள்ளலார் அகவலில் பாடுகிறார் (239-246).

இப்படி வரும் பல குறிப்புகளைக் கொண்டு வள்ளலார் வரலாற்றை எழுதியவர்கள் தண்ணீரில் விளக்கெரித்தது முதல்

அவர் பலவகையான அற்புதங்களை நிகழ்த்தியதாகக் கூறுகின்றனர். தொடக்ககால அருட்பாப்பதிப்புகளில் இல்லாத அற்புதங்கள் பின்வந்த பதிப்புகளில் காணப்படுகின்றன. "மீண்டும் தோன்றுவதாக அவர் கூறியதை வைத்துக்கொண்டு தமக்குத் தெரியப் பலர் தான்தான் வள்ளலார் எனக்கூறித் திரிவதாகத் திரு.வி.க. நொந்துபோகும் அளவு அற்புதங்கள் போற்றப்பட்டன."

ஆனால் வள்ளலாருக்கு அவற்றில் நம்பிக்கை இல்லை.
"*பெரியவர் பெரியவர் எனவே பேசிச்*
*சிறக்கவும் ஆசையிலை விசித்திரங்கள் செய்யவும்*
*ஆசை ஒன்றில்லை.*" (3400)

என்றே அவர் பாடுகிறார். சித்திகள் மீது பற்றுவைத்தால் இறைவன் மீதுள்ள பற்று போய்விடும் என்று எச்சரித்தும் உள்ளார் (உரை : 354). இந்த எச்சரிக்கை பேருபதேசத்தில் காணப்படுகிறது. அவர் மறைவுக்கு மூன்று திங்கள் முன்னால் சொல்லப்பட்டது. இறுதி நாளிலும் அவர் கொண்டிருந்த தெளிவை இது காட்டும்.

அற்புதங்கள் அருஞ்செயல்கள் அல்ல : அருளாளர் வாழ்வில் அவை தாமாகச் சிலவேளை நிகழக்கூடும். அவற்றால் அவர்களுக்கு எந்தப் பெருமையும் இல்லை. புராண, சமயக் கதைகளில் இவை அதிகமாகக் கூறப்படுகின்றன. நபிகள் நாயகம் பாலைவனத்தை சோலையாக்கினார், ஏசு நாதர் பிணியாளர் நோய் தீர்த்தார் என்பன போல வரும் செய்திகள் எல்லாச் சமயங்களிலும் இப்படிக் கூறும் மரபைக் காட்டுகின்றன. புத்தர் அற்புதங்களை ஏற்கவில்லை. மாறாக அவை துறவிகளின் ஒழுக்கக் கேட்டுக்கும் புன்மை நெறிக்கும் வழிவகுக்கும் என்றும் கண்டித்தார். (Introduction to Comparative Mysticism, p:104) இஸ்லாம் சமயத்தில் சித்தர் எனப் போற்றப்படும் சூபிகளும் அற்புதங்களை நம்புவதில்லை என்பது இங்கு எண்ணத்தக்கது.

"அற்புதம் செய்யும் துறவிக்கு என்றும் மதிப்பு தான். அது பேதைமை" என்கிறார் திரு.வி.க. (உள்ளொளி : 44). கண்மூடி வழக்கமெலாம் மண்மூடிப்போகப் பாடுபட்ட வள்ளற்பெருமானை அந்தப் "பேதையர்" கூட்டத்தில் சேர்ப்பது நல்லதன்று. அன்பும், உண்மையும், ஒழுக்கமும் மக்கள் நலப்

பற்றும் கொண்ட சித்தர்களின் உயிர்ச் சமயத்தில் அற்புதங்களுக்கு இடமில்லை : அந்த வழி வந்த வள்ளலாருக்கும் இது பொருந்தும்.

**இலக்கியம் :**

சித்தர்கள் தங்கள் அன்புச் சமயத்தை எளிய பாடல்கள்மூலம் மக்களிடையே பரப்பினர். அப்படிச் செய்த போது அவர்களையும் அறியாமல் தமிழ் இலக்கியத்துக்கு - அதன் வரலாற்றுக்கு அருந்தொண்டு செய்தனர். படித்தவர்கள், அறிஞர்கள், புலவர்கள் என்று இந்த "மேலோரி"டம் மட்டும் இருந்த தமிழைக் "கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பாக ஆக்கினார்கள்."

"*பழகு தமிழையும் எளிய மொழிநடையையும் கையாண்டு*
*பாமரரைக் கருத்தில் கொண்டு பரிவுணர்ச்சியோடு*
*பாடி ஒரு புதிய வழியைக் காட்டியவர்*"

எனச் சித்தர்களைப் பற்றி கு.அருணாசலக்கவுண்டர் கூறுகிறார். (சித்தர் பாடல்கள், ப : 28). பழகு தமிழ், எளிய நடை, பாமரர்க்குப் பாடல் என்ற மூன்று பண்புகள் சித்தர் பாடல்களில் உள்ளன என்பது அரிய, நுட்பமான, இசைவான கணிப்பாகும். சித்தர்கள் பேச்சு மொழியை உயிர்த்துடிப்புள்ள இலக்கியமாக்கியவர்கள் : வாய்மொழியில் பாடல் யாத்தவர்கள் : உணர்ச்சிப் பெருக்கும் இனிய ஓசையும் உடைய நாட்டுப்புற மொழி வடிவங்களைக் கையாண்டவர்கள் : குறிப்பு மொழிப் பாடல்கள் தவிர மற்ற எளிய பாடல்களை இயற்றியவர்கள் எனச் சித்தர்களைப் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம்.

"சிந்து, கண்ணி, கும்மி போன்ற வடிவங்களை "அனாயாசமாகக் கையாண்டுள்ளனர் ..... அற்புதமான இசைக்கோலங்களை உருவாக்கியுள்ளனர்" என்று கைலாசபதி பாராட்டுவதில் பொருளுண்டு. (சமூகவியலும் ஒப்பிலக்கியமும் ப : 147). எழுத்தறிவில்லாத மக்கள் வாயில் இவை ஏற்பளிப்பு ப் பெற்றன. மக்களிடையே வாழ்ந்த சித்தர்கள் அவர்களுடைய மொழியிலும் பாவடிவங்களிலும் பாடியதில் வியப்பில்லை. பெண்ணை அழைத்துப் பாடுவதுபோல வரும் "அடி" என முடியும் மகடூஉ கண்ணிகள், ஆணை அழைத்துப்பாடுவது போல வரும் "அடா" என முடியும் ஆடூஉ கண்ணிகள் ஆடுபாம்பையும், ஞானப்பெண்ணையும் கண்ணம்மாவையும் குதம்பைப் பெண்ணையும் விளியாகக் கொண்ட பாடல்கள் இசையும் இனிமையும் பொருளும் உணர்ச்சியும் ஒருசேர இணைந்து

மக்களை உருக்கின. அவர்களே - அந்தப் பாமரரே சித்தர் பாடல்களை அழியாமல் தலைமுறை தோறும் அழியாமல் காத்தனர்.

அருட்பாவில் உள்ள இந்தச் "சித்த மரபு" சார்ந்த எளிமை, இசை, பேச்சு வழக்கு மொழி என்பன பற்றி முன்னர் விரிவாகக் கூறப்பட்டது. "சித்தர்களின் மனநிலைகளும் கருத்துக்களும் சொற்றொடர்களும் கூட அருட்பாவில் காணக்கிடக்கின்றன" என்று அ.சீனிவாசராகவன் கூறுவது முற்றிலும் பொருந்தும். (ஒரு நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை, ப : 27). விரிவாக ஒப்பு நோக்கி ஆராயத்தக்க களன் இது. வானத்தின் மீது மயிலாடிக் குயிலானதும், ஆணிப்பொன்னம்பலத்துக் காட்சிகளும் சித்தர்கள் வள்ளலாருக்குத் தந்தவை. சித்தராக இருந்து இலக்கியம் படைத்த பெருமை, மற்ற பெருமைகளைப் போலவும் சிறப்புடையதேயாகும்.

## குறிப்புப் பொருள் :

எளிமை, பேச்சு வழக்கு, உணர்ச்சிக்கேற்ற வடிவம் ஆகியன இருந்தாலும் சித்தர் பாடல்களில் மறைபொருளாகக் குறியீடுகளாகவும் குறிப்புப் பொருளாகவும் அனுபூதி அனுபவத்தைப் பாடியுள்ளனர். அவர்களுடைய பாம்பும், குதம்பையும் கண்ணம்மாவும் இவைபோல் வனவும், மாங்காயும் தேங்காயும் மலையும் விளக்கும் இப்படி வருகின்றனவும் ஆன்மா, பரம்பொருள், ஞானம், மாயை போன்றவற்றின் குறியீடுகளாக உள்ளன. ஆன்மிக அனுபவம் பெற்றவர்களுக்கே இவற்றின் முழுமையான உட்பொருள் புரியும். அருட்பாவில் உள்ள பல பாடல்கள் அத்தகையன. அகத்துறைப் பாடல்கள் எல்லாமே ஒருவழியில் குறியீட்டுப் பாடல்களே எனலாம்

*"கோடையிலே இளைப்பாற்றிக் கொள்ளும் வகைகிடைத்த*

*குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே"*

என்னும் பாடல் பலரும் அறிந்த எளிய பாடல். மேற்போக்காக ஒரு மரம், நிழல், கனி, ஓடை, நீர் என்று இயற்கைப் பொருள்கள் வரிசையாகக் கூறப்படுகின்றன. ஆயினும் இவை படிமங்கள். உயர்ந்த ஒன்றைச் சொல்ல, புரியவைக்க வள்ளற் பெருமான் இந்தக் குறியீட்டு முறையைக் கையாள்கிறார்.

"குறிப்புப் பொருள் சிறந்த கலை வடிவமாகும். அது உயர்ந்ததாக அமைய அமைய அதனால் தூண்டப்படும் உணர்ச்சியும் வலுவானதாக இருக்கும். ஒரு நல்ல குறியீடு உருவகத்தை விடவும் ஆழ்ந்த பொருளுடையது. எழிலும் நிறைந்த பற்றும் மறைபொருளையும் வியப்புணர்வையும் ஒரு சேர விளைப்பனவாகும். இவற்றைப் புரியத் தேவையானது அறிவன்று: மனநெகிழ்ச்சியே."

அண்டர்ஹில் கூறும் இந்தக் கருத்துக்கள் ஆழ்ந்து நோக்கற்குரியது. (Mysticism, p:151)

கே.சி. பாண்டே,

"*ஓர் ஆழ்ந்த உணர்ச்சி, மரபுவழிப்பட்ட மொழியால் தெரிவிக்கப்படக் கூடியதன்று : குறிப்புப் பொருளில் சில குறியீடுகளாகவே காட்டப்படும். ஒரு நெடுந்தொடர், ஒரு சொற்றொடர், ஒரு சொல் கூட அந்தப் பணியைச் செய்துவிடும்*"

என்று இதற்கு அழகான விளக்கம் தருகிறார். (Comparative Aesthetics, I p:264).

இந்நோக்கில் அருட்பாவில் உள்ள குறியீடுகளைப் பார்க்க வேண்டும். "மறைபொருட் குறியீடுகளால் ஆன்மிக அனுபவம் கைவரப்பெற்ற ஞானி" என்று வள்ளலாரை மா.அனந்தநாராயணன் கூறுகிறார். இவர் உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதியாக இருந்தவர் : முதல் நாவலாசிரியர்களின் ஒருவரான மாதவையாவின் புதல்வர் ஆவார். "ஆ.பா. ப:35" தத்துவப் பேராசிரியராக இருந்த டி.எம்.பி.மகாதேவன், "அவருடைய குறியீட்டுப் பாடல்களை வேறொரு உரையாசிரியர் இன்றி அறிந்து கொள்வது எளிதன்று" எனக் கூறுகிறார் (ஆ.பா. ப : 161). இங்கிதமாலைக்கு 1904லிலேயே இரண்டு உரைநூல்கள் வெளியானமை வள்ளலாரின் குறியீட்டுப் பாடல்களின் பெருமையைக் காட்டும்.

ஆன்மிக அனுபவம் மயக்க நிலையில் ஏற்படுவதன்று : ஒருவருடைய விருப்பு வெறுப்புகளுக்கும் மனம் அல்லது உடலின் இயக்கத்துக் கட்டுப்பட்டது என்று கொள்ளவும் முடியாது: சித்தர் வாழ்க்கையை மானிட மதிப்புகளால் அளப்பதற்கும் இல்லை. ஒரு பெரிய நாகரிகத்தின், இனத்தின், மரபு வழிப்பட்ட தெய்வ நாட்டத்தின் தொடர்ச்சியே அவர்கள் வாழ்க்கை. (அண்டர்ஹில்

ப : 41). ஆதலால் தனிமனித அளவுகோலால் அதை ஆராய்தற்கில்லை. பலநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த அருளாளர்கள், முனிவர்கள் ஆகியோர் கண்ட ஆன்மிக உயர்வுகளைச் சித்தர்கள் மக்கள் மொழியில் பாடிக்காத்தார்கள். அவர்கள் பழம் பண்பாட்டுப் பெருமையின் தூதுவர்கள். வள்ளலார் அந்த மரபு வழிப்பட்ட ஞானத்தூதர் என்பதில் ஐயமில்லை. ஆன்மிக, அனுபூதி இறைத்தூதர் அவர்.

அன்புச் சமயம், உயிரிரக்க நெறி, ஒரு கடவுள் வழிபாடு, மக்கள் நல நாட்டம், சடங்குகள் எதிர்ப்பு, மருத்துவப் பணி, எளிய பாடல்கள் ஆனால் உயர்ந்த ஆன்மிக அனுபவம் என்ற பண்புகளைக் கொண்டு காலம் தோறும் சித்தர்கள் தொண்டாற்றி வந்துள்ளனர். இந்த வரையறைகள் வள்ளற்பெருமானுக்கு முற்றிலும் பொருந்தக் கூடியன. "அறிவர்" என்ற சொல் தொல்காப்பியத்தில் வருகிறது. உலகியலை நெறிப்படுத்தி அருளுலகுக்கு வழிகாட்டும் உத்தமர்கள் என்று சு.சிவகாமசுந்தரி அவர்களைக் குறிப்பிட்டு வள்ளலார் அந்த வரிசையில் வைத்துப் போற்றத்தக்கவர் என்கிறார். (வள்ளலார், ப : 11). சித்தர் என்பது அறிவர் என்றே பொருள்படும். தொல்காப்பியர் காலம்தொட்டே இந்த ஞான மரபுகள் தமிழ் மண்ணில் தொடர்ந்து வந்துள்ளன என்பதை எண்ணும்போது ஒவ்வொரு தமிழனும் பெருமைப்படலாம். "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபு" அது. அதில் இன்றுள்ள வரை இறுதியான சித்தர் வள்ளற்பெருமான். இனி ஒருவர் தோன்றும் வரை தமிழன் காத்திருக்க வேண்டும்.

# நிறைவுரை

வள்ளற்பெருமானைப் பற்றிய இந்த நூல் நிறைவுக்கு வருகிறது. அவரைச் சமயம் சார்ந்தவராகவும் வெள்ளை வேட்டித் துறவியாகவும் கண்டுகொண்டிருக்கும் தமிழர்க்கு அவருடைய வேறுபரிமாணங்களையும் காட்ட வேண்டிய நோக்கில் இது எழுதப்பட்டது.

பிறர்க்குழைக்கும் பெருமையாளரே கடவுளின் அன்புக்குரியவர்கள். கைம்மாறு கருதாது உழைத்தலே சிறப்பு. அவருடைய சமுதாயப் பணிகளை நோக்கினால் சமூகத்திடமிருந்து அவர் பெற்றது குறைவு. அதற்கு அவர் தந்தது மிகுதி என்பது புலப்படும். துறவு என்பதற்குப் புதிய இலக்கணம் வகுத்தவர் வள்ளற்பெருமான். உற்றார், பெற்றார், நட்பு, சுற்றம் என எல்லாரையும் வெறுத்துக் காட்டுக்குப் போவது மெய்த்துறவல்ல : உயிர்களுக்கு - மானிடன் உட்கொண்டு - அன்புப் பணிபுரிய தன்னலத்தை விடுதலே மெய்த்துறவு என்பதை மெய்ப்பித்தவர் அவர். "ஊருக்கு உழைத்திடல் யோகம்" என்றான் பாரதி. அந்த வகையில் வள்ளலார் ஒரு யோகியுமாவார்.

சமுதாயப் பணியே அவர் புரிந்த வேள்வி. சாதி வேறுபாடுகள் நீக்கல், பசி நீக்கல், மூடநம்பிக்கை எதிர்ப்பு எனப் பல முனைகளிலிருந்து அவர் பணிபுரிந்தார். அவராற்றிய இறைவழிபாடு அவையே எனச் சொல்வதில் பிழையில்லை. சாதிகுலம் எனும் வேறுபாடு இருக்கும் வரை உயிர்களிடத்து அன்பு பெருகாது : தனிமனித ஒழுக்கம் சிறக்காத வரை சமூகம் மேம்படாது. இந்த வேறுபாடுகள் நீங்கக் கல்வி தேவை. தனிமனித ஒழுக்கமோ நல்லுறவு, நட்பு, அகப்புற அமைதி வாழ்வு ஆகியவற்றால் உண்டாவது சமூகத்தின் அடிப்படைக் கூறுகளாகிய இவற்றையெல்லாம் கூர்த்த நோக்குடன் ஆராய்ந்து அவராற்றிய பணிகள் போற்றுதற்குரியன.

அவருடைய பசி தீர்க்கும் பேரறம் காலத்தின் தேவையால் விளைந்தது. சத்திய தருமச்சாலை தமிழகச் சமயவாழ்வில் ஒரு திருப்புமுனை. சாதி, மதம் தாண்டி பசித்த எல்லார்க்கும் உணவு, சமமான வரிசை எனும் கோட்பாட்டில் ஒரு நல்ல சமுதாயத்தின் கருவே அடங்கி உள்ளது. எல்லார்க்கும் உணவிடுவது நோக்கமாயினும் யாரும் இரந்துண்டு வாழக்கூடாது என்பதே உண்மையான உட்கோளாகும். இந்தப் பின்புலத்தை உணர்தல் வேண்டும். இரந்துண்போர் துன்பத்தை அவர் பலவாறு மனமுருகிப் பாடியதற்குக் காரணம் இதுவே. சத்திய தருமச்சாலை வெறும் கட்டிடமல்ல : பசியற்ற, இரப்போரில்லாத, ஈர்ந்தண்மா ஞாலம் படைக்க முற்பட்ட நிறுவனம் என்பது மிக இசைவாகும்.

அவருடைய கல்விச் சிந்தனைகள் தொலைநோக்கு கொண்டவை. அந்தந்தக் காலத்தின் தேவையை நிறைவு செய்யுமாறு சமூக மாறுதல்களால் ஏற்படும் சிக்கல்களைத் தீர்க்கும் வகையிலும் கல்வி அமைய வேண்டும். தனிமனிதனின் பெருமை அவன் பெறும் கல்வியால் உயரும் : ஆனால் அந்தப் பெருமையும் கல்வியும் அவன் வாழும் சமூகத்திற்குப் பயன்பட வேண்டும். கல்வி சமூகத்தின் பொதுச் செல்வம். எல்லாரும் அறிவு பெறுவது ஒரு சமூகம் உயர வழி அமைக்கும். தகுதியும் ஆற்றலும் உடைய மாணவரைப் பொருள் கொடுத்தாவது படிக்கவைத்து அவர்கள் அறிவைச் சமூகத்துக்குப் பயன்படுத்த வேண்டும் என்ற அளவு வள்ளலார் எண்ணியிருக்கிறார். அவருடைய மும்மொழிப் பாடத்திட்டம் தமிழன் பெற வேண்டிய உயர்வைச் சுட்டுகிறது. பிற மொழிகளைக் கற்கும் ஆர்வம் வேண்டும் என்று அவர் அன்றே நினைத்தமை அவருடைய எதிர்காலக் கணிப்பைக் காட்டும். இன்றைய அறிவியல் உலகம் அந்த உண்மையைக் கண்முன் உணர்ந்து வருகிறது.

"பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்" என்றார் திருவள்ளுவர். இன்னும் அது அழியாமல் நிலைபெற்றிருக்கக் காரணம் ஒழுக்கமுடையார் சிலராவது வாழ்வதால் தான். சமுதாய மேம்பாடும் மானுட குலவெற்றியும் ஒரு சில அருளாளரால் மண்ணில் நிகழ்கின்றன. ஒரு புத்தர், ஒரு ஏசு, ஒரு காந்தி தாம் பிறந்த மண்ணுக்கும் உலகுக்கும் தனிமனிதனின் உலகளாவிய ஆன்ம ஆற்றலைச் சுட்டிப்போயினர். அவ்வரிசை நீண்ட ஒன்று : அதில் காந்தியடிகளுகு முற்பட்டவர் வள்ளற்பெருமான். தனிமனிதனின் ஒழுக்க நெறிகளை அவர் பலவகைகளிலும்

வலியுறுத்தியதற்கு இந்த உலகளாவிய நோக்கே காரணம். அவருடைய பல கருத்துக்கள் இன்றும் பயன்படுவன ; என்றும் பயன்படும்.

அவருடைய சமயப் பணியும் தொலைநோக்குக் கொண்டதாம். சமயம் போற்றும் சடங்குகளை அவர் துணிவுடன் கண்டித்தது அவர் புரட்சி மனத்தைக் காட்டும். அறியாமையில் உழன்ற மக்களுக்குச் சமயம் அன்பால் அமைவது : சடங்குகளால் அன்று என்பதைப் பலகாலும் விளக்கிக் கூறினார். மரபுவழியாக வந்த சமயக் கருத்துக்களுக்கும் நம்பிக்கைகளுக்கும் அவர் தந்த புதிய விளக்கங்கள் சமயஞ்சார்ந்த ஒரு புதிய அறிவியக்கத்தின் தோற்றுவாய் எனல் வேண்டும். கால வழுக்களாக இருப்பவை களையப்பட வேண்டும் என்று அவர் கூறியது "பழையன கழிதல்" என்ற இயற்கைக் கோட்பாடே. எனினும் பழைமைவாதிகளுக்கு அது புரட்சியாகத் தோன்றியது.

வள்ளலார் இடைக்காலப் பக்தி இயக்கத்தை மீண்டும் மலர்ச்சியுறச் செய்தார். மக்களிடம் பழகி அன்புச் சமயத்தைப் பரப்பினார். பிறரெல்லாம் மக்களைக் கோயிலுக்குப் போகச் சொல்ல அவர் மக்களை நோக்கிச் சன்மார்க்க சபையையும் சத்திய தருமச் சாலையையும் சமயத்தையும் கொண்டு போனார். இறைவனை வழிபடும் உரிமை, கோவிலுக்குள் செல்லும் உரிமை, இறைவன் திருமுன் எல்லாரிடையே சமமாக நிற்கும் உரிமை ஏழைகளுக்கும் உண்டு என்பதை அவர்களுக்குப் புரியவைத்தார்.

அவர் கூறிய சன்மார்க்க நெறியும், அருட்பெருஞ்சோதி வழிபாடும், உயிரிரக்க நெறியும் பொதுமை உணர்வை ஏற்படுத்த வல்லன. ஒளியையும் இரக்கத்தையும் அன்பையும் அறிவையும் வேண்டாத சமயம் இல்லை. அறிவியல் வளர்ந்துவரும் இந்நாளில் முன்பைவிடப் பொதுமையுணர்வு மேலோங்கி வருகிறது. ஒவ்வொரு சமயத்திலும் வன்முறையாளர்கள் சிலர் இருந்தாலும், அவர்களால் தீங்குகள் நிகழ்ந்தாலும் எந்த நாடும் எந்த மனிதனும் தனிப்பட்டு ஒதுங்கி இனி வாழ முடியாது.

முன்பைவிட இன்றைய உலகில் போர் பற்றிய அச்சம் மிக்கிருக்கிறது. அணுகுண்டு போர்க்கொடுமைகள் பேரழிவிற்கு மனித குலத்தை இழுத்துச் செல்லுமோ என்ற அச்சம் பெருகி வருகிறது. மனிதன் மனிதனாகவும் இருக்க வேண்டும் : மனிதத்

தன்மையுடனும் இருக்க வேண்டும் : அதுவே "மக்கட்பண்பு" அது இல்லாதாரை "மரம்" என்கிறது குறள். கருணையைவிட்டு விட்டு மனிதன் வாழ்வதற்கில்லை. அவன் வாழ்விற்கு - வாழ்க்கை வெற்றிக்கு - அளவுகோல் அறிவன்று : உயிரிரக்கமே என்பதை உலகம் கண்டுவருகிறது. வள்ளலாரின் கொள்கையில் இவற்றைத் தெளிவாகக்காண முடியும்.

தமிழனுக்கு உள்ள மரபுவழிப்பட்ட பல செல்வங்களுள் பக்தி இலக்கியம் தலைசிறந்தது. பக்திக் கவிஞர் வரிசையில் அண்மையில் வாழ்ந்தவர் வள்ளலார். அவர்போல முழுமையும் அப்படிப்பாட இன்னொருவரை எதிர்காலத் தமிழகம் ஈனலாம் : இன்றில்லை. அருட்பா இவ்வகையில் ஈடற்றது. பக்தித் தொண்டுநெறியாகும் வழியை அருட்பா காட்டுகிறது. பக்தன், தொண்டன், அடியார் என வரும் சொற்கள் இறைவனுக்கும் அடியாருக்கும் உள்ள தொடர்பைக் காட்டுவதாயினும் உயிர்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதையும் குறிப்பாகக் கூறும். இறைவனிடம் வைக்கும் பக்தியும் உயிர்களிடத்துக் காட்டும் அன்பும் வேறல்ல. ஒழுக்கத்தை - பக்தியை - வலியுறுத்தும் சமயம் உயிரிரக்கத்தையும் வற்புறுத்துகிறது. சுந்தரர் இறைவனைத் தோழனாக்கிப் பேறுபெற்றார். அவரைப் போற்றும் வள்ளலாரோ எல்லா உயிர்களிடமும் தோழைமை பூண்டு அதன்வழி இறையின்பத்தில் தோயும் புதுமை கண்டார்.

> "ஏழைகளின் நடுவே இந்த நாட்டில் ஓர் அருளாளர் பிறப்பார். அவரே சமயக் காவலராகவும் இருப்பார். நாகரிகத்தின் தெய்வச் செய்தியை அவர் மக்களுக்குக் கொண்டு வருவார். தெய்வ நம்பிக்கையையும் இறைவல்லமையையும் அவர் காட்டுவார்"

என்று கவிஞர் தாகூர் எதிர்பார்த்து வாழ்ந்துள்ளார். (Sisil Kumar Mitra, India's Evolution, p:126). அவர் இப்படிக் கூறவதற்கு முன்பே வள்ளலார் தமிழகத்தில் பிறந்து அதை மெய்ப்பித்தார். ஆனால் வடக்கே அது தெரியவாய்ப்பில்லாமல் போயிற்று. சமயப் பூசலற்ற பொதுமை, வைதிக - நாத்திகர்களின் தீவிர முனைகளுக்குச் செல்லாது அறிவார்ந்த நிலையில் கொள்ளும் தெய்வ நம்பிக்கை : தடைபடாத அன்பால் எல்லாரும் செய்யக்கூடிய ஒளி வழிபாடு. தன்னலம் மறுத்துப் பிற உயிர்த்

துன்பம் களைய முற்படும் இரக்க உணர்வு ஆகியன வள்ளலார் வாழ்வின் நெறிகளாக இருந்து வந்துள்ளமை தெளிவு.

ஒரு கவிதை எதிர்பாராது முகிழ்ப்பதில்லை. வலுவான உள்ளத்துணர்ச்சிகள் பீறிட்டெழும் வடிகாலாக அது இருக்கிறது என்போர் கூற்று மெய்தான் : இருப்பினும் அந்த உணர்ச்சியின் களம் பாடும் கவிஞனின் மனத்திலும் அந்த மனத்தைப் பாதிக்கும் சமுதாயத்திலும் உள்ளது. ஆதலால் நல்ல கவிதையைச் சமுதாயத்தின் செல்வம் என்று சொல்ல வேண்டும். அதை எழுதி முடித்தபின் படைத்தவரின் உரிமை போய்விடுகிறது. அதிலும் மக்கள் மொழியில் எழுதப்படும் கவிதை மக்களின் தனியுரிமை என்று கூடச் சொல்லலாம்.

அருட்பா 19ஆம் நூற்றாண்டுச் சமுதாயத்தின் தனிச்செல்வம்: தவச் செல்வம் : இலக்கியச் செல்வமுமாகும். அக்கால மக்களின் உள்ளத் துடிப்பை அதனுள் காணலாம். அன்றைய இலக்கியப் போக்கிற்கு மாறுபட்டு அருட்பா மலர்ந்தது. அந்த நீரோட்ட இழுப்பிற்கு இரையாகாமல் பக்தியையும் மானுடத்தையும் ஒரு சேரக் கலந்தது அருட்பாவின் வெற்றியாகும். ஒருவகையில் அருட்பா தமிழ்க்கவிதையின் மணிமுடியாகத் திகழ்கிறது. முன்னரும் நீதி இலக்கியங்கள் இருந்தன : அவை உலகியல் அறங்களைக் கூறின. முன்பும் பக்தி இலக்கியங்கள் இருந்தன : அவை இறைமைப் பண்பை மட்டும் பாடின. ஆனால் வாழ்வியலோடு பக்தியையும் கூறும் நூலாக அருட்பாவே முன் நிற்கிறது.

மக்களின் பேச்சிலிருந்தும் வாழ்க்கையிலிருந்தும் முகிழ்த்தெழும் கவிதை, அந்த மக்கள் வாழ்வு செழிக்க உரமாகிறது. அதை அம்மக்கள் போற்றிக் காக்க வேண்டும். மக்களிடமிருந்து மலர்ந்து மக்களுக்கே பயன்படுவது சிறந்த இலக்கியத்துக்கு அடையாளம். மக்கள்மொழி - வாய்மொழி-யில் இருந்த வடிவங்களை உள்வாங்கிக் கொண்ட வள்ளற்பெருமான் அவற்றோடு எளிமையையும் இனிமையையும் கலந்து ஒரு புதிய வீறு தந்தார். அந்த வீறு இசைப் பாடல்களாகவும் அகத்துறைப் பாடல்களாகவும் மலர்ந்தன. அருணகிரிநாதருக்குப் பின் இசைத்தமிழுக்குப் புத்துயிர் ஊட்டிய வள்ளலார், அகத்துறையிலும் தனி முத்திரை பதித்தார். அருட்பாவில் உள்ள அந்தப் பாடல்கள் விழுமிய கவிதைகள். தன்னுணர்ச்சி நிலையில்

முழுதும் தன்னை இறைவன் திருவடியில் படைத்து இறைவனின் இன்ப அன்புக்கு ஏங்கி உருகும் தமிழ்த்தலைவி அருட்பாவோடு நின்றுவிடுகிறாள். அவ்வகையில் தெய்வக் காதல் அனுபூதி நிலையில் வள்ளலார் பெற்ற வெற்றி ஒப்பற்றது. ஆழ்வார், நால்வருக்குப்பின் ஒரு நீண்ட இடைவெளி கழித்து அகத்துறைப் பாடல் அதே துடிப்புடன் அருட்பாவில் ஒலிக்கிறது. அவற்றைப் படிக்கும் தோறும் தலைவியின் பெருமூச்சு - பரம்பொருளைத் தேடியலையும் ஆன்மாவின் ஏக்கப் பெருமூச்சு - அதனால் ஏற்படும் அதிர்வின் ஒலி இன்னும் கேட்டுக் கொண்டிருக்கிறது. அது தமிழின் ஒலி : தமிழ்த்தாயின் துடிப்பு : தமிழ்த் தலைவியின் நெஞ்சத்து நிறைவு.

**நீர்மேல் மலர்ந்த நெருப்பு :**

இந்த நூலுக்குத் தலைப்பை அருட்பா தானே இட்டுக்கொண்டது. வள்ளலார் வாழ்விலும் பாடலிலும் இரண்டு கூறுகளைத் தெளிவாக உணரமுடியும். உயிரிரக்கத்தை - அன்பை - வலியுறுத்திய வள்ளற்பெருமான் அறிவை - ஞானத்தையும் வலியுறுத்தினார். அன்பு இனிமை தருவது : நீர் போலக் குளிர்ச்சி தருவது : உயிர்வாழ்விற்கு ஆதாரமாகவும் இருப்பது. "நீரின்றமையாது உலகம்" என்பதும் மெய்தான் : "அன்பகத்தில்லா உயிர் வாழ்க்கை" பாலை நிலத்து வறண்ட மரம் போன்றது என்பதும் மெய்தான். எனினும் வெறும் அன்பு மட்டுமே வாழ்விற்குப் போதாது : அறிவில்லாத மனிதன் - அன்புடையவனாயினும் - விலங்குக்குச் சமம் என்று குறள் கூறுவதும் எண்ணற்குரியது. அறிவே அழிவைத் தருவது : அழிவிலிருந்து மனிதனைக் காப்பதும் ஆகும். அன்பும் வேண்டும். உணர்ச்சிமயமான அன்பும் வேண்டும். அறிவும் வேண்டும் : கூர்த்த ஆய்வுநிலை அறிவும் வேண்டும். ஆனால் எதன் அடிப்படையில் எது?

அன்பை மையமாக ஆணிவேராகக் கொண்ட அறிவு வாழ்வா அல்லது அறிவை அடித்தளமாகக் கொண்ட அன்பு வாழ்வா? இதுவே உயிர்வினா. வள்ளற்பெருமான் அகவலில் இதற்கு அழகாக விடை கூறியுள்ளார். முதலில் மனித நெஞ்சில் கருணை - அன்பு - தவழட்டும். அதன்பின் அறிவு விளக்கை அதில் ஏற்றி,' உலகை ஒளிவெள்ளத்தில் ஆழ்த்தலாம். அன்பு என்னும் நீரின் நடுவில், அதன் மேலே அறிவு என்னும் ஒளியை - நெருப்பை - ஏற்றலாம். அப்பொழுது தான் நெஞ்சில் ஈரமும்,

ஈரத்தின் ஈர்ப்பில் உயிரும் தொடர்ந்து பண்பட்டு மிளிரும். இப்படித்தான் மனிதன் வாழ வேண்டும். இறைவனே ஆர்வமுடன் - மனிதனுக்கும் ஆர்வம் ஊட்டும் வகையில் வகுத்தான். அவன் "வகுத்தவகை அல்லது கோடி தொகுத்தார்க்கும்" உய்தி இல்லை. அதுவே வள்ளற்பெருமான் நெஞ்சில், நினைவில், கருத்தில், கணிப்பில் ஆழமாக - மிக ஆழமாகப் பதிந்து கனிந்தது. அவர் பாடினார் :

*"நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மேல் - உயிர்ப்பும்*
*ஆர்வுற வகுத்த அருட்பெருஞ்சோதி"*

ஒரே ஒரு சொல் மட்டும் இடையில் சேர்ந்து நூலின் தலைப்பு "நீர்மேல் மலர்ந்த நெருப்பு" ஆயிற்று. அருளின் மீது மலர்ந்த அந்த ஞானநெருப்பு வள்ளற்பெருமான் தான். அது வையத்தைக் குளிர்விக்கும் பேரொளி. சுடாது : ஏனென்றால் அது அருளின் வித்து. அதை மனுக்குலம் விதைத்துப் பயன்பெற வேண்டும்.

"வாழ்க சீர் அடியார் எல்லாம்"

# துணை நூற்பட்டியல்

## தமிழ்

அருணாசலம், க., (ப-ர்) **வள்ளலார் வாழ்வும் தத்துவமும்,**
சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1980.

அருணாசலம் ப., **பக்தி இலக்கியம்,**
தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1973.

அறிவு ஒளி, தி.நா., **"இராமலிங்க அடிகளாரின் இசைப் பாடல்கள்"**
தமிழ்ப் பொழில், சூலை-ஆகஸ்ட் 1972,
பக்.121-25, ஆகஸ்ட்-செப்டம்பர் 1972, பக்.131-41

அழகரடிகள், **"திருமுறைகளும் திருவருட்பாவும்",**
செந்தமிழ்ச் செல்வி,
நவம்பர், 1973, பக்.161-71

இராமகிருஷ்ணன், எஸ்., **தமிழ் இலக்கிய வரலாறு (ஓர் அறிமுகம்)**
என்.சி.பி.எச். பிரைவேட் லிமிடெட்,
சென்னை, 1962

இராமலிங்க அடிகள், **திரு அருட்பா**
(ப-ர்)
1. ஆதிமூல முதலியார், ஓ., திருவருட்பாத் திருமுறை, ஸ்ரீ பத்மநாப விலாச அச்சு எந்திரசாலை, மதராஸ், 1920
2. ஊரன் அடிகள், திரு அருட்பா (ஒரே தொகுதி) சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1972.
3. ---- திரு அருட்பா, (இரு தொகுதிகள்) இராமலிங்கர் பணி மன்றம், சென்னை, 1981
4. ---- திரு அருட்பா - உரைநடைப் பகுதி, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1978
5. கந்தசாமி பிள்ளை, ச.மு., காரணப்பட்டு, திருவருட்பா, (இரண்டு தொகுதிகள்), தீ.நா. முத்தையா செட்டியார், மதராஸ், 1924
6. திருநாவுக்கரசு முதலியார், மணி., திருவருட்பாத் திருமுறை, அ. இரங்கசாமி முதலியார் அண்டு சன்ஸ், மதராஸ், 1928
7. பாலகிருஷ்ண பிள்ளை, ஆ., ., (12 தொகுதிகள்), சென்னை, 1931-58
8. திருவொற்றியூர் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் மடாலயம், வள்ளலார் பதிப்பகம் (இரு தொகுதிகள்), சென்னை, 1964

9. திருவேங்கடநாயுடு, திரு அருட்பா - **இங்கிதமாலை** (மூலமும் -உரையும்), குளத்தூர் குப்புசாமி முதலியார், சென்னை, 1904

10. இராமசாமி நாயுடு, திரு அருட்பா - **இங்கிதமாலை** (மூலமும் உரையும்), சை.ர. நமசிவாய செட்டியார், சென்னை, 1904

இராஜப்பா, வெ., **வள்ளலார் பெருமையும் சுத்த சன்மார்க்க விளக்கமும்**, வள்ளலார் வெளியீடு, சென்னை, 1966

இளவழகனார், "**திருவருட்பா ஆராய்ச்சி**", செந்தமிழ்ச் செல்வி, ஐந்தாம் சிலம்பு, கழகம், 1927-28

ஊரன் அடிகள் **இராமலிங்க அடிகள் வரலாறு**, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், இரண்டாம் பதிப்பு ; 1976

-------- **வள்ளலார் கண்ட முருகன்**, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1978

-------- **வள்ளலார் மறைந்தது எப்படி?**, சமரச சன்மார்க்க ஆராய்ச்சி நிலையம், வடலூர், 1976

கலியாண சுந்தரன், திரு.வி. **இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம்**, சாது அச்சுக்கூடம், சென்னை, 1956

-------- **உள்ளொளி**, சாது அச்சுக்கூடம், சென்னை, 1956

-------- **சன்மார்க்க போதமும் திறவும்**, சாது அச்சுக்கூடம், இரண்டாம் பதிப்பு, சென்னை,1944

-------- **சித்த மார்க்கம்**, சாது அச்சுக்கூடம், சென்னை, 1954

**களவியல் என்ற இறையனார் அகப்பொருள், கழகம், 1969**

காமாட்சிநாதன், மா.க., **வள்ளற்பெருமான் பிள்ளைத் தமிழ்**, கிருஷ்ண நாயக்கர், மதுரை, 1970

குருசாமி, மா.பா., **வள்ளலார்-ஓர்-அறிமுகம்**, மதுரைப் பல்கலைக் கழகம், மதுரை, 1977

கைலாசபதி, க., **ஒப்பியல் இலக்கியம், பாட்டாளிகள் வெளியீடு**, இரண்டாம் பதிப்பு, சென்னை, 1978

-------- **சமூகவியலும் ஒப்பிலக்கியமும்**, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1979

கைலாசபிள்ளை, த., **ஆறுமுகநாவலர் சரித்திரம்,** மூன்றாம் பதிப்பு, விக்கிரம வருஷம், தை மாதம்

சண்முகம், எஸ்., **வடலூர் இராமலிங்க சுவாமிகளின் வரலாற்று அற்புதங்கள்** சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கம், திருப்பூர், (ஆண்டு இல்லை) திருப்பூர்

சாமிநாதையர், உ.வே., **என் சரித்திரம்,** எஸ். கலியாணசுந்தரையர், சென்னை, 1950

-------- **மகாவித்துவான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரம் பிள்ளை** அவர்கள் சரித்திரச் சுருக்கம், (இரண்டு பாகங்கள்), உ.வே.சா. நூலகம், சென்னை, 1965

-------- **கோபாலகிருஷ்ண பாரதியார்,** கலைமகள் காரியாலயம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1964

சீனிவாசன், கு. **"வள்ளலார் வகுத்த சுத்த சன்மார்க்கம்"** செந்தமிழ்ச் செல்வி, திசம்பர், 1978, பக்.171-76

சித்தர் பாடல்கள் (ப-ர்) 1. இராமநாதன், அரு., பிரேமா பிரசுரம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1963
2. கோவிந்தன், த., பூம்புகார்ப் பிரசுரம், சென்னை, 1976

சிதம்பரனார், சாமி., **சித்தர்கள் கண்ட விஞ்ஞானம் - தத்துவம்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1961

-------- **வடலூரார் வாய்மொழி,** இலக்கிய நிலையம், மூன்றாம் பதிப்பு, சென்னை, 1973

சிவகாமசுந்தரி, சு., **வள்ளலார்,** மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை, 1969

சிவஞானம், ம.பொ., **வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு,** இன்ப நிலையம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1964

-------- **வள்ளலாரும் பாரதியும்,** இன்ப நிலையம், 1965

சீனிவாச ராகவன், அ., **ஒரு நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை,** மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை, 1970

சீனிவாசன், கு., **சுத்த சன்மார்க்க விளக்கம்,** இலக்கிய நிலையம், திருச்சி, 1966

சுத்தானந்த பாரதியார், **நாவலர் பெருமான்,** புதுயுக நிலையம், புதுச்சேரி, 1948

-------- **பெரியார் வரலாறு,** ஸ்ரீரமணாச்சிரமம், திருவண்ணாமலை, 1934

சோமசுந்தரம் செட்டியார் மெய்வழி **வடலூர் வள்ளற்பெருமானார்,** செல்வன் பதிப்பகம், தென்னம்பட்டு, (வ.ஆ.மா) 1982

ஞானசம்பந்தன், அ.சா., **இலக்கியக் கலை,** கழகம், சென்னை, 1960

-------- இன்றைய இலக்கியம், மெர்க்குரி புத்தகக் கம்பெனி, கோவை, 1971

தயாமணி, மனாசே., **வேதநாயக வேதசாஸ்திரி,** கிறிஸ்தவக் கலை தொடர்பு நிலையம், சென்னை, 1975

நடராசன், அவ்வை., **வாழ்விக்க வந்த வள்ளலார்,** சேகர் பதிப்பகம், சென்னை, 1966

நடராஜன், அ.லெ., **வள்ளலார் வாழ்வும் வாக்கும்,** இராமலிங்கர் பணி மன்றம், சென்னை, 1974

நவநீதகிருட்டிணன், அ.க., வள்ளலார் யார்? கழகம், 1960

நாரண துரைக்கண்ணன் **திருவருட்பிரகாச வள்ளலார்,** வானதி பதிப்பகம், சென்னை, 1978

பி.ஸ்ரீ., **இராமகிருஷ்ணரும் இராமலிங்கரும்,** ஸ்டார் பிரசுரம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1978

-------- **தமிழரும் கலையுணர்வும்,** பத்மஜோதி பிரசுராலயம், சென்னை, 1969

-------- **பாரதி நான் கண்டதும் கேட்டதும்,** ஸ்டார் பிரசுரம், ஐந்தாம் பதிப்பு, சென்னை, 1972

பிள்ளை, கே.கே., **தமிழக வரலாறு-மக்களும் பண்பாடும்,** தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், திருத்திய பதிப்பு, சென்னை, 1975

மறைமலையடிகள் **பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம்,** பொதுநிலைக் கழகம், பல்லாவரம், 1930

மறைமலையான், அ., "**திருமூலர்-வள்ளலார் காட்டும் ஒளிவழிபாடு**", ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர், மதுரை, 1981, பக். 307-11

மீனாட்சிசுந்தரம், கா., **பாரதி பாநிலை,** (தமிழில் மு. மாணிக்கம்) இளங்கோ வெளியீடு, 1972

மீனாட்சிசுந்தரனார், தெ.பொ., **பிறந்தது எப்படியோ?** பாரி நிலையம், இரண்டாம் பதிப்பு, சென்னை, 1952

-------- *நீங்களும் சுவையுங்கள்*, வசந்தம் பதிப்பகம், சென்னை, 1952

ரகமி, **"சின்னச்சின்ன பாரதி செய்திகள்"** இதயம் பேசுகிறது, 13.12.1981

ராமசாமி, ஈ.வே., பெரியார் **பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகள்,** (மூன்று பாகங்கள்), சிந்தனையாளர் கழகம், திருச்சி, 1974

ராஜமய்யர், பி.ஆர்., **ஆபத்துக்கிடமான அபவாதம்** அல்லது **கமலாம்பாள் சரித்திரம்**, திங்கள் பிரசுரம் (மறு பதிப்பு) சென்னை, 1972

லாரன்சு, சா., **இராமலிங்க அடிகள் கிறிஸ்துவரே,** விமலை நூலகம், பெரம்பலூர், 1976

வரதராசன், மு., **இலக்கியத்திறன்,** பாரி நிலையம், சென்னை, 1965

-------- **தமிழ் இலக்கிய வரலாறு,** சாகித்ய அகாடமி, மூன்றாம் பதிப்பு, புதுடில்லி, 1978

வழித்துணைராமன், ஏ.எஸ்., **வள்ளலாரும் வாசகரும்,** வாசு பிரசுரம், சென்னை, 1966

விசுவநாதன், கி.ஆ.பெ., **வள்ளலாரும் அருட்பாவும்,** பாரி நிலையம், சென்னை, 1980

வெள்ளைவாரணன், க., **பன்னிரு திருமுறை வரலாறு,** முதற் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், இரண்டாம் பதிப்பு, 1972

வேங்கடசாமி -மயிலை. சீனி **பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்**, சாந்தி நூலகம், சென்னை, 1962

வேலுப்பிள்ளை, ஆ., **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,** (ப-ர்) ல. ராமகிருஷ்ணன், சென்னை, 1969

வையாபுரிப்பிள்ளை, எஸ்., **தமிழ்ச்சுடர் மணிகள்,** பாரி நிலையம், மூன்றாம் பதிப்பு, சென்னை, 1959

-------- **தமிழின் மறுமலர்ச்சி,** பாரி நிலையம், நான்காம் பதிப்பு, சென்னை, 1960

ஸ்ரீபால், டி.எஸ்., **ஜைன நெறிகளும் வள்ளலார் புரட்சியும்,** அருட்பா இலக்கிய மன்றம், இராசிபுரம், 1977

ஸெல்மன், ஏ.சி., **ஆரோக்கியமும் நீடித்த ஆயுசும்,** ஓரியண்டல் வாச்மன் பப்ளிஷிங் ஹவுஸ், பூனா, 1964

## English

ANITA, DIEHL, **Periyar E.V. Ramaswami,** B.I.Publications, New Delhi, 1978

ANNAMALAI, Sp., **The Life and Teachings of Saint Ramalingar**, Bharathiya Vidya Bhavan, Bombay, 1973

ARASU, S.R.V., **Voice of Vallalar** (A Modern Critique on the Tiruvarutpa) Kazhagam, 1974

ARUMUGA MUDALIAR S., **'The Period of Religious Revival in Tamil Literature'** Tamil Culture Vol IV No.4, Madras, October 1957

BALBIR SINGH **'Gurunanak Lectures'** Journal of the Madras University Vol XXXIX Nos. 1 & 2 July 1967 January 1968

BANKEY, BEHARI **Sufis, Mystics and Yogis of India** Bharathiya Vidya Bhavan, Bombay, 1971

BASU, B.D **Rise of Christian Power in India** R. Chatterjee, Calcutta, 1931

BASHAM A L (Ed) **A Cultural History of India** Oxford University Press London, 1975

BOSE,PRAMATHANATH **A History of Hindu** Clvilization during British Rule, (Four Volumes), W.Newman & Co., Calcutta, 1984

CHOPRA P.N. RAVINDRAN, T.K SUBRAMANIAN, N **History of South India,** Vol. III **Modern Period,** S. Chand & **Company Limited,** New Delhi, 1979

DUBOIS, ABBE, J.A. **Hindu Manners, Customs and Ceremonies** Oxford University Press Reprint London, 1972

FOX, J.De WITT, **The Best of Life and Health,** London

FRAZER, R.W. **British India,** T. Fisher Unwin (III Edition) London, 1986

FRNACIS, DAYANANDAN. T., **Ramalinga Swamy,** Christian Literature Society, Madras, 1972.

GOPALAN,S **'Tradition : A Social Analysis'** Journal of the Madras University Vol XLIII No.1 & 2 Section A Humanities Jan-Jul, 1971

HOWARD E.NIX & OTHERS **Radiant Health,** The Stanborough Press Limited Herts England (Year not given)

JAYASHANMUGHAN. N **'Ramalingar : His Life and Mission'** Journal of Annamalai University, Humanities Part I & II Volume IX Nos 3 & 4 Page No. iii

JORDENS, J.J.F. **'Hindu Religious and Social Reform in British India'** A Cultural History of India, Oxford University Press, London, 1975

MAJUMDAR, R.C.(Ed) **British Paramountcy and Indian Renaissance,** Part I, Bharatiya Vidya Bhavan, Second Edition, Bombay, 1970

MAJUMDAR, R.C ROY CHOWDHURI H C KALINKAR DATTA **An Advanced History of India** Macmillan & Co. Third Edition, London, 1973

MATHUR, AGAM PRASAD **Radhasoami Faith A Historical Study,** Vikas Publishing House, Delhi, 1974

MAX MULLER, F **Ramakrishna : His Life and Sayings** Longmans Green & Co. (Reprint) London, 1916

MEENAKSHISUNDARAM, K — **The Contribution of European Scholars to Tamil,** University of Madras, Madras, 1974

MEENAKSHISUNDARAM, T.P. — **A History of Tamil Literature,** Annamalai University, Annamalai Nagar, 1965

----------- — **The Pageant of Tamil Literature** Sekar Pathippagam, Madras, 1966

MUTHARASU, P — **The Life of St. Ramalingar,** Samarasa Sanmarga Sangam, Tirunelveli, 1971

PANDEY, K.C — **Comparative Aesthetics** Vol I. Indian Aesthetics, The Chowkhamber Sanskrit Series Office, Varanasi, 1959

PILLAY, K.K — **'The Western Influence on Tamil Prose'** Tamil Culture, Vol. VI, No.3, July 1957

RAGHAVAN, V — **The Great Integrators - The Saint Singers of India,** Publications Division, New Delhi, 1964

------------ (Ed) — **Devotional Poets and Mystics** Part II, Publications Division, New Delhi, 1978

ROLLAND, ROMAIN — **The Life of Ramakrishna,** Advaida Ashrama, 5th Impression Almora, 1954

ROMESH DUTT — **The Economic History of India** Under Early British Rule, Kegan Paul Trench Trubner & Co. Ltd., London, 1901

RUSSEL BERTRAND — **Mysticism and Logic and Other Essays,** Longmans, Green & Co. London, 1919

SHANMUGAM, M — **Philosophy of Saint Ramalingam** Sarvodaya Ilakkiya Pannai, Madurai, 1983

SISILKUMARA MITRA — **Resurgent India,** Allied Publishers Private Limited Bombay, 1963

------------- — **India's Evolution - Its meaning** Jaico Publishing House, Bombay, 1968

SPUGREON, C.F.E — **Mysticism in English Literature** Cambridge University Press, London, 1913

SRINIVASA IYENGAR, K.R — **'Ramalinga Swami',** Devotional Poets and Mystics Part II, Publications Division, New Delhi, 1978

SUBRAMANIAN, P — **'Tamil Literature in the Nineteenth Century : A Sociological Study'** Journal o Tamil Studies, Vol. 13 International Institute of Tamil Studies, Madras, June 1978

THIRUGNANASAMBANDAM, P — **'The Concept of Bhakthi'** Journal of the Madras University Vol. XXXIX Nos. 1 & 2 Section A Humanities, July 1967 Jan. 196

--------------- — **'Concept of Mukthi in Saivism'** Journal of the Madras University Vol. XLIII Nos. 1 & 2 Section A Humanities Jan-Jul 1971

THULASIRAM, T.R — **Arutperum Jothi and Dealthl Body,** (Two Volumes), Univerrsity of Madras, Madras, 1981

UNDERHILL, EVELYN — **Mysticism,** Methuen & Co. London 7th Edn. 1918

VANMIKANATHAN, G — **Ramalingar,** Sahitya Acaden New Delhi, 1980



## நூலாசிரியர் பற்றிய குறிப்பு

என்மாலை மாத்திரமோ யார்மாலை எனினும்
இறைவரையே இலக்கியமாய் இசைப்பதெனில் அவைதாம்
நன்மாலை ஆகும் அந்தச் சொன்மாலை தனக்கே
நான்அடிமை தந்தனன் பல்வந்தனம் செய்கின்றேன்.

- அருட்பா 5797

கிருஷ்ணன் சுப்பிரமணியன் (ஐ.கே.எஸ்.) 10.6.1940இல் கோவையருகில் உள்ள இருகூரில் பிறந்தார். சொந்த ஊரில் பள்ளிக் கல்வியை முடித்தபின், கோவை அரசு கலைக் கல்லூரியில் பி.எஸ்ஸி., (தாவரவியல்-1962), கோவை பெரியநாயக்கன் பாளையம், ஸ்ரீ இராமகிருஷ்ணா வித்யாலயம் ஆசிரியர் கல்லூரியில் பி.டி. (1964) பட்டங்கள் பெற்றார். மூன்றாண்டுகள் (1964-67) சென்னையில் தமிழ்க் கலைக் களஞ்சியத் துணைப் பதிப்பாசிரியராகவும், ஐந்து ஆண்டுகள் (1967-72) சிற்றூரில் அறிவியல் ஆசிரியராகவும் பணி புரிந்தார். 1971இல் எம்.ஏ. (தமிழ்) தேர்வு பெற்று 1972 முதல் 1998 வரை அரசுக் கல்லூரிகளில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி, கோவை அரசு கலைக் கல்லூரியில் இணைப் பேராசிரியராக ஓய்வு பெற்றார். தற்போது கோவை கற்பகம் கலை அறிவியல் கல்லூரியில் தமிழ்த்துறை ஆலோசகராகவும், பன்னிரு திருமுறை ஆய்வு மையப் பொறுப்பாளராகவும் பணியாற்றி வருகிறார்.

"வள்ளலார் ஒரு மறுமலர்ச்சியாளர்" என்னும் தலைப்பில் இவர் செய்த ஆய்வுக்காகச் சென்னைப் பல்கலைக் கழகம் 1985இல் முனைவர் பட்டம் நல்கியது. அதன்பின் இராமலிங்கரையும் இராமகிருஷ்ணரையும் ஒப்பிட்டு மேலாய்வு செய்து "The Sun and the Moon" என்னும் ஆங்கில நூலை வெளியிட்டார். பல்கலைக் கழக மானியக் குழுவின் திட்டத்தில் உருவான இந்நூல் பல அறிஞர்களின் பாராட்டுப் பெற்றது. "சிவநெறியே சன்மார்க்கம்" இவர் படைத்த இன்னொரு ஆய்வு நூல். திருமந்திரத்தின் 108 பாடல்களுக்கு எளிய உரையாக எழுதப்பட்டது "உள்ளம் பெருங்கோயில்" என்னும் நூல். மதுரை காந்தி அமைதி நிறுவன வெளியீடாக இயற்கை வாழ்வு பற்றிய நான்கு சிறுநூல்களும் வந்துள்ளன.எம்.பில்.,பி.எச்.டி. ஆய்வுகளுக்கு வழிகாட்டியாகவும் மேற்பார்வையாளராகவும் இருந்துள்ளார். கற்பகம் கல்லூரிப் பன்னிரு திருமுறை ஆய்வு மையம் வெளியிடும்நூல்களின் பதிப்பாசிரியராகவும் இருந்து வருகிறார்.